

டாக்டர் நா. மகாலிங்கம்

# தேவை புதிய அரசமைப்புச் சட்டம்

இந்தியாவை மொழிவாரி மாநிலங்களாக 1956-ஆம் ஆண்டு பிரித்தபோது தமிழ், தெலுங்கு, கன்னடம், கேரளம், மராட்டியம், வங்காளம் முதலிய மொழிகளைப் பேசிய மக்கள் வாழ்விடங்களை வரையறை செய்து அம்மாநிலங்கள் பிரிக்கப்பட்டன. அப்படிச் செய்தபோது, அம்மொழிகளைப் பேசிய மக்களின் பிரதேசங்கள் மட்டுமே கவனத்தில் கொள்ளப்பட்டன. அதனால், அப்போது உத்தரப்பிரதேச மாநிலத்தின் மக்கள் தொகை 11 கோடி. தமிழ்நாட்டின் மக்கள் தொகை 6 கோடி. கேரளத்தின் மக்கள் தொகை 2.5 கோடி என ஏற்றத்தாழ்வாக அம்மாநிலப் பிரதேசங்கள் அமைந்து விட்டன.

இதனால், மாநில அரசுகளுக்கு நிர்வாகம் செய்வதில் சிரமம் உருவானது. பெரிய பெரிய மாநிலங்களுக்குப் பெரிய எண்ணிக்கையில் அரசு ஊழியர்கள் அவசியப்பட்டார்கள். இப்போது 29 மாநிலங்கள் உள்ளன. இவையல்லாமல் யூனியன் பிரதேசங்கள் என்றும் சில உள்ளன.

சுமார் 60 ஆண்டுகளுக்கு முன்பு செய்த இந்த மாநிலப் பிரிவினைகள் சில கசப்பான அனுபவங்களை உண்டாக்கிவிட்டன. எல்லா மாநில எல்லைகளிலும் சிக்கல் நீடிக்கிறது. அதுமட்டுமல்ல, நதிகள் மாநிலங்களுக்குள் சிக்கிக் கொண்டன. அதனால் ஒரு மாநிலம் இன்னொரு மாநிலத்திற்குத் தண்ணீர் தர மறுக்கிறது அல்லது தயங்குகிறது.

இந்நிலையில் 2 – 3 கோடி மக்கள் தொகை கொண்ட பிரதேசமாக ஒரு மாநிலத்தை வரையறுத்து விட்டால், 50 – 60 மாநிலங்களாக இந்தியாவை உருவாக்கி விடலாம். ஒரு மாநிலத்திற்கு மக்கள் தொகை நன்றாக

நிர்வாகம் செய்யக்கூடிய அளவிற்குக் குறைந்த எண்ணிக்கையில்தான் இருக்கும். அதுமட்டுமல்ல, அங்குள்ள ஆறுகள் குறிப்பிட்ட சிறிய மாநிலத்திற்கு மட்டுமே சொந்தமாகும். அதேபோல அந்த ஆற்றுத் தண்ணீர், அவசியப்படுகிற இன்னொரு மாநிலமும் சிறிய மாநிலமாகத்தான் இருக்கும். காவிரி நீர்ப் பிரச்சனையில் கர்நாடகா முழுவதும் ஈடுபடாது. அதுபோலத் தமிழ்நாட்டிலும் தஞ்சை – திருச்சி மட்டும்தான் போராடும்.

இவற்றையெல்லாம் பற்றிச் சிந்தித்த அருட்செல்வர்; 11 ஆண்டுகளுக்கு முன்பு 2007–இல் எழுதிய அவருடைய கருத்துக்களை 'ஓம் சக்தி' வாசகர்களுக்கு இம்மாதச் 'சுரங்கம்' பகுதியில் வழங்கப்படுகிறது.

– இ.ஆர்.

உலகில் வெற்றிகரமான ஜனநாயக நாடாக உள்ள அமெரிக்கா போல வெற்றிகரமான ஜன நாயக நாடென்று நமது தேசத்தைச் சொல்ல முடிய வில்லை. அமெரிக்காவில் நான்கு ஆண்டு களுக்கு ஒரு முறை – ஒவ்வொரு லீப் வருடமும் தவறாமல் தேர்தல் நடக்கிறது.

நமது நாட்டில் 3 ஆண்டு – 2 ஆண்டு இடை வெளியில்கூட நாடாளுமன்றத் தேர்தல் நடந்துள்ளது.

மாநில சட்டசபைகளுக்கோ ஒரே சமயத்தில் தேர்தல் நடைபெறுவதே இல்லை. உதாரணமாக, தமிழ்நாட்டின் சட்டப்பேரவைத் தேர்தல் முடிந்து 6 மாதங்கள்தான் ஆகின்றன. அதே சமயம் பஞ்சாப், மணிப்பூர் சட்டப்பேரவைகள் 5 ஆண்டுகளை இப்போது தான் பூர்த்தியாக்கியுள்ளன.

இன்னும் சில மாதங்களில் உத்தரப் பிரதேசத்தில் தேர்தல் நடக்க உள்ளது. இப்படி மாநிலத் தேர்தல்கள் இந்தியாவில் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கின்றன.

5 ஆண்டுகளுக்கு ஒருமுறை இன்ன தேதியில் – இந்த மாதத்தில் தேர்தல் நடப்பதற்கான உத்தர வாதம் நமது அரசமைப்புச் சட்டத்தில் இல்லை.

அதுமட்டுமல்ல, நாடாளுமன்றம், சட்டமன்றம், நகராட்சி மற்றும் பஞ்சாயத்து ஒன்றியம் ஆகிய வற்றிற்கு ஒரே நாளில் தேர்தல் நடத்தப்படு வதற்கான விதிகளும் நமது அரசமைப்புச் சட்டத்தில் இடம்பெறவில்லை.

அது இடம்பெறுமானால், நகரத்தி லுள்ள ஒரு வாக்காளர், முதலில் எம்.பி.–க்கு ஒரு வாக்கு, அடுத்து எம்.எல்.ஏ.–வுக்கு, மூன்றாவதாக நகராட்சித் தலைவர், நாலாவதாக வார்டு உறுப்பினர் ஆக 4 வாக்கு களை ஒரே நாளில் ஒரே வாக்குச் சாவடியில் செலுத்தலாம்.

இதேபோல, கிராம வாக்காளர் ஒருவர், எம்.பி. மற்றும் எம்.எல்.ஏ., மூன்றாவதாகப் பஞ்சாயத்து யூனியன் தலைவர், நான்காவதாகப் பஞ்சாயத்துத் தலைவர், ஆக 4 வாக்குகளை ஒரே நாளில் செலுத்தலாம்.

கிராமப் பஞ்சாயத்து உறுப்பினர்களுக்கு மட்டும் தனியாகத் தேர்தல் நடத்திக் கொள்ள லாம். இப்போதுள்ள அரசியல் சட்டத்தில் இந்த அம்சங்களும் கட்டாயப் படுத்தப்படவில்லை.

இச்சந்தர்ப்பத்தில் ஜனநாயகத்திற்கு மாறான ஒரு நடைமுறையைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

சட்டப்பேரவைத் தேர்தலில் பெரும்பான்மை பெற்ற கட்சி எம்.எல்.ஏ.–க்கள் ஒன்றுகூடித் தங்க ளுக்குள் ஒருவரை முதலமைச்சராகத் தேர்ந் தெடுக்கின்ற மரபுதான் முன்பு இருந்து வந்தது. இப்போது அந்த மரபு மறைந்து விட்டது.

தேர்தல் பிரச்சாரக் கூட்டத்திலேயே "இன்னார்" முதலமைச்சராவதற்கு வாக்களிக்குமாறு அரசியல் கட்சியினரே மக்களிடம் பகிரங்கமாக ஆதரவு கேட்கின்றனர். இது ஜனநாயகத்தையே ஊனப்படுத்தும் முயற்சியாகும்.

இனிமேல், எம்.எல்.ஏ.–க்கள் முதலமைச்சரைத் தேர்ந்தெடுப்பதற்குப் பதிலாக, மக்களே அவரை நேரடியாகத் தேர்ந்தெடுக்குமாறு செய்தால்தான் ஜனநாயகத்தைக் காப்பாற்ற முடியும்.

1956–இல் அமைக்கப்பட்ட மொழிவாரி மாநிலங்களைத் தொலைநோக்குப் பார்வை இல்லாமல் அமைத்து விட்டோமோ என இப்போது நினைக்க வேண்டியதாகியுள்ளது.

இப்போதுள்ள மொழிவாரி மாநிலங்களில் ஹிந்தி பேசும் உ.பி. மக்கள் தொகை 11 கோடி. மலையாளம் பேசும் கேரள மக்கள் தொகையோ 2.5 கோடி. மொழிவாரி மாநிலங்கள் அனைத்தும்



இப்படி ஏற்றத்தாழ்வாக அமைந்து விட்டன.

நிர்வாக வசதிக்காக இவற்றைச் சீராக 3 கோடி மக்கள் தொகைக்கு ஒரு மாநிலம் என்று சுமார் 50 மாநிலங்களாக அமைக்கலாம். கேரள மக்கள் தொகையே இதற்கு முன்னுதாரணம்.

சென்னை, மும்பை, கொல்கத்தா, டெல்லி, ஹைதராபாத், பெங்களூர், கான்பூர் முதலிய ஏழு பிரதான மாநகரங்களை, சிங்கப்பூர் போல (City States) ஏழு நகர மாநிலங்களாக அமைக்கலாம்.

அதிக மாநிலங்கள் அமைப்பதால், ஜனநாயகச் செயல்பாட்டிற்கு எந்தச் சேதமும் ஏற்படாது. அமெரிக்காவில் 50 மாநிலங்கள் இருப்பது நமக்கு எடுத்துக்காட்டாகும்.

இந்த மாற்றங்கள் மட்டும் போதாது.

தற்போதுள்ள ராஜ்யசபாவில் (மாநிலங்களவை) 245 உறுப்பினர்கள் உள்ளனர். அவர்கள் எம்.பி.–க்களாலும், எம்.எல்.ஏ.–க்களாலும் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இதனை 300 உறுப்பினர்கள் கொண்டதாக மாற்றம் செய்யலாம்.

அமெரிக்காவிலுள்ள செனட் சபைக்கு மொத்தமுள்ள 50 மாநிலங்களிலிருந்து ஒவ்வொரு மாநிலத்திற்கு 2 பிரதிநிதிகள் வீதம் 100 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.

அதேபோல, 50 மாநிலங்களாக அமைக்க உள்ள இந்தியாவில், மாநிலத்திற்கு 2 பிரதிநிதிகள் வீதம் 100 ராஜ்யசபா உறுப்பினர்களை எம்.பி.–க்களும், எம்.எல்.ஏ.–க்களும் தேர்ந்தெடுக்கலாம்.

இவர்கள் அல்லாமல், ராணுவத்தில் பணிபுரிந்த ஓய்வுபெற்ற ராணுவத் தளபதிகள், பிரபலமான டாக்டர்கள், புகழ்பெற்ற வழக்குரைஞர்கள், சாதனை புரிந்த எஞ்சினியர்கள், அனுபவமிக்க பேராசிரியர்கள், ஓய்வு பெற்ற நீதிபதிகள், விஞ்ஞானிகள் மற்றும் முன்னுதாரணமாக விளங்கும் தொழிலதிபர்கள் ஆகியவர்களைப் போன்ற 100 பிரதிநிதிகளையும் ராஜ்யசபாவில் இடம்பெறச் செய்யலாம்.

இதற்காக இந்திய தேசத்தை ஐந்து மண்டலங்களாகப் பிரித்து, மண்டலத்திற்கு 20 பேர் வீதம் இந்த 100 பிரதிநிதிகளைத் தேர்வு செய்யலாம்.

இவ்வாறு, புதிய ராஜ்யசபையில் 300 பிரதிநிதிகள் இடம்பெறுமாறு புதிய அரசமைப்புச் சட்டத்தை வகுக்க வேண்டும்.

ஒரே நாளில் நாடாளுமன்றம், சட்டப்பேரவை மற்றும் உள்ளாட்சிகளுக்குத் தேர்தல் நடைபெற வேண்டும்.

3 கோடி மக்கள் தொகை கொண்ட மாநிலங்களாக மொழிவாரி மாநிலங்களை மாற்றியமைக்க வேண்டும்.

பிரதிநிதிகளுக்கு வயது வரம்பை உயர்த்தலாம். உள்ளாட்சிகளுக்கு உரிய அதிகாரங்களை வழங்கலாம்.

முதலமைச்சரை மக்களே நேரடியாகத் தேர்ந்தெடுக்கலாம். இடஒதுக்கீட்டுக்கு அனைத்துத் தரப்பினருடன் பேசி, காலக்கெடுவை நிர்ணயிக்கலாம்.

இன்னும் அரசமைப்புச் சட்டத்தின் இறையாண்மையைப் போற்றிப் பாதுகாத்து, ஜனநாயகத்தை வெற்றிகரமாக நடைமுறைப்படுத்தும் வகையில் நமது உரத்த சிந்தனைகளை இத்தருணத்தில் பரிமாறிக் கொள்ளலாம். ●



# அனைத்துலக முருக இலக்கிய மாநாடு

மாநாட்டில் 'முருக இலக்கிய ஆய்வு மாலை' நூல் வெளியீட்டில் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிவாளர் அதியமான், துணைவேந்தர் முனைவர் க. பாஸ்கரன், தவத்திரு சிவஞானபாலய சுவாமிகள், தவத்திரு குமரகுருபர சுவாமிகள், தவத்திரு சாது சண்முக அடிகளார், தவத்திரு மருதாசல அடிகளார், திரு. ராஜேந்திரன் ஐ.ஏ.எஸ்., திரு. கணேஷ் (லண்டன்), டாக்டர் வ. ஜெயபாலன் (மலேசியா), திரு. கோவை மணி ஆகியோர்.

கோவை சிரவை ஆதீனம் கௌமார மடாலயம், நூற்றாண்டு கண்ட மடாலயம். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் ஆசி பெற்ற இராமானந்த அடிகளாரின் தவ முயற்சியால் உருவான மடாலயம்.

மலேசியா, சிங்கப்பூர், மொரீசியஸ், தென்னாப்பிரிக்காவிலிருந்து ஏராளமான முருக பக்தர்கள் இங்கு வருகை புரிந்திருக்கிறார்கள்.

தவத்திரு குமரகுருபர சுவாமிகள், பக்தி வளாகமாக இருந்த சிரவை ஆதீனத்தைக் கல்வி வளாகமாகவும் அமைத்துள்ளது சிந்திக்கத் தக்கது. இந்து மத மடாலயங்கள் இதுபோலக் கல்விப் பணிகளையும், மருத்துவச் சேவைகளையும் பரவலாகத் தொடருமானால், பிற மதங்கள்தான் இவ்விரண்டையும் தமிழ் மக்களுக்குத் தந்தன என்ற பெருமையை இந்து மதமும் பெறும் என்பதில் சந்தேகமில்லை.

இன்றைய தலைமுறையின் தேவைக்கு நமது சமயங்கள் ஈடுகொடுக்க வேண்டும். இந்தப் பின்னணியில் சிரவை ஆதீனத்தின் தமிழாய்வு மையமும், தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச் சுவடித் துறையும் இணைந்து அனைத்துலக முருக இலக்கிய மாநாடு மே மாதம் 4, 5, 6–ஆம் தேதிகளில் நடத்தின.

அறு சமயங்களில் முருகருக்கான வழிபாடு தனி வழிபாடாகத் திகழ்வதற்கு கௌமாரம் காரணமாக உள்ளது.

இம்மாநாட்டில் தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் முனைவர் க. பாஸ்கரன் அவர்கள் கலந்து கொண்டு, கருத்தரங்கைச் சிறப்பித்தார்கள்.

தவத்திரு குமரகுரு சுவாமிகள் தமது தலைமையுரையில், "தமிழ்ச் சமுதாயத்தின் நோக்கம் மொழியையும், சமயத்தையும் முன்னெடுத்து அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்ல வேண்டும்" என்றும், தவத்திரு கந்தசாமி சுவாமிகள் முருகனோடு ஒன்றியிருந்த தவ நிலையையும் எடுத்து விளக்கினார்.

முனைவர் கி. சுப்பிரமணியன் (ஐ.கே.எஸ்.) அவர்களின் தலைமையில் வாசித்து அளிக்கப்பட்ட கட்டுரைகள், படித்து ஆய்வு செய்யத்தக்கன. கௌமார மடாலயத்தின் வெளியீடான 'பக்த மான்மியம்' என்ற நூல் வரலாற்றுச் சிறப்புமிக்கதாகும்.

முருகனோடு ஒன்றியிருப்பதைத் தட்டையாக நாம் புரிந்து கொள்ளக்கூடாது. அதனுடைய கன பரிமாணங்களோடு அதனைப் புரிந்து கொள்ள வேண்டும். முருகனோடு ஒன்றியிருத்தல் என்றால் என்ன? முருகு அல்லது இளமை என தமிழ்த் தென்றல் திரு.வி.க. ஒரு நூலே அருளியுள்ளார்.

மாநாட்டில் கலந்து கொண்ட வெளிநாட்டினர் : சுவிட்சர்லாந்து திருமிகு. கணேஷ்குமார், மலேசிய மருத்துவர் வ. ஜெயபாலன்.

முருகு என்றால் அழகு. அழகு என்பது இயற்கை. குன்றும், மலையும் இயற்கையின் வனப்பை வாங்கி வைத்திருக்கின்றன. குறிஞ்சி நிலமாகப் போற்றப்படுபவை. அத்தகைய இயற்கையோடு இன்றைய கால மனிதன் இல்லை. ஏரி, குளங்களைக் கெடுத்துவிட்டான். காற்றை நச்சாக்கி விட்டான்.

சங்க இலக்கியக் காலங்களில் இயற்கைதான் மனிதனைக் காப்பாற்றியது. இப்போது

மனிதனிடமிருந்து இயற்கையைக் காப்பாற்றுவதற்குப் பெரிய போராட்டத்தை நடத்த வேண்டியிருக்கிறது. இதையெல்லாம் எண்ணித்தான் "இயற்கையோடு இயைந்த வாழ்க்கையைத்தான் தவத்திரு சுந்தரசுவாமிகள் வாழ்ந்தார்" என்று தவத்திரு குமரகுருபர சுவாமிகள் குறிப்பிட்டார்.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளை, தாத்தா சுவாமிகள் என்றே தமிழ் உலகம் போற்றி வருவதை தவத்திரு குமரகுருபர சுவாமிகள் குறிப்பிட்டது புதிய செய்தியாகும். அதுமட்டுமல்ல, தண்டபாணி சுவாமிகள்தான் முதன்முதலாக சுய சரிதையைக் கவிதை வடிவில் படைத்தவர். இதே போல, "என் சரித்திரம்" என்ற நூலைத் தமிழ்த் தாத்தா உ.வே.சா. அருளினார்.

முருகு வழிபாடு என்பது இயற்கையைக் காப்பாற்றுகிற வழிபாடு. இயற்கையை வணங்குகிற வழிபாடாகும். ஒரு மேல்நாட்டுக்காரர், ரசிகமணி டி.கே.சி. அவர்களிடம் ஒரு கேள்வியைக் கேட்டாராம். "தமிழர்களுக்குச் செடிகளையும், மரங்களையும் மேல்நாட்டுக்காரர்களைப் போல நேசிக்கத் தெரியவில்லை" என்றாராம்.

அதனை ஒப்புக்கொண்ட ரசிகமணி அவர்கள், இன்னொன்றையும் அதோடு சேர்த்துச் சொன்னாராம். "உங்களுக்கு நேசிக்கத்தான் தெரியும். ஆனால், தமிழர்களாகிய எங்களுக்கு இயற்கையைத் தெய்வமாக வழிபடவே தெரியும்" என்றாராம் (You love trees, but we worship trees). இத்தகைய சிந்தனைகளை முருக வழிபாடு ஒரு காலத்தில் தமிழர்களுக்கு மத்தியில் உருவாக்கிய வழிபாடாகும்.

இம்மாநாட்டில் கலந்து கொண்ட தஞ்சை தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் மேனாள் முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்கள் பேசுகையில், "கருத்துகள் காற்றோடு போய்விட்டால், அது நேற்றோடு போய்விடும். அதை நிரந்தரமாக்க வேண்டுமானால், அதை நூலாக்க வேண்டும். அந்த வல்லமை சிரவை ஆதீனம் தவத்திரு சுந்தரசுவாமிகளிடத்திலிருந்து வழிவழியாக தவத்திரு குமரகுருபர சுவாமிகளிடம் வந்துள்ளது பாராட்டுக்குரியது" என்றார்.

மேலும், "திருமுருகாற்றுப்படை அருளியலைக் கூறும் நூல். பிற ஆற்றுப்படை நூல்கள் உலகியலைச் சொல்கிற நூல்கள். இதை அறிந்து உலகியல் ஞானத்தைப் போதித்து பக்தர்களுக்கு உதவுகிற காரணத்தால்தான் முருகனுக்கு ஒரு விநோதப் பெயருண்டு. அந்தப் பெயர் என்னவென்றால், 'வேலைக்காரன்' என்பதாகும்" என்று குறிப்பிட்டார்.

திருமுருக கிருபானந்த வாரியார், இந்த 'வேலைக்காரன்' என்கிற பெயரை வியாக்யானம் செய்கிறபொழுது, முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்களின் வியாக்கியானத்திறகு இன்னொரு பரிமாணத்தைச் சேர்த்தார். வேலைக்காரன் என்றால், 'வேலை வைத்திருப்பவன்' என்று பொருள் என்பார்.

– ந.நி.

**இ**ந்த மாநாட்டில் வெளியிடப்பட்ட நூல்கள் : 'தவத்திரு சாந்தலிங்க அடிகளார் பிள்ளைத்தமிழ்' நூல், பேரூர் இளையபட்டம் தவத்திரு மருதாசல அடிகளாரால் வெளியிடப்பட்டது. 'முருக இலக்கிய ஆய்வு மாலை, தொகுதி -1' நூல், மயிலம் பொம்மபுர ஆதீனம் தவத்திரு சிவஞானபாலய சுவாமிகளால் வெளியிடப்பட்டது. 'முருக இலக்கிய ஆய்வு மாலை, தொகுதி-2' தவத்திரு சாது சண்முக அடிகளாரால் வெளியிடப்பட்டது. முனைவர் திருமதி திலகவதி சண்முகசுந்தரம் எழுதிய 'திருப்பரங்குன்றம், திருச்செந்தூர் திருப்புகழ்' நூலை வெளியிட்டவர் சுவிட்சர்லாந்து திரு. கணேஷ்குமார். மற்றும் தேவார, திருப்புகழ் குறுந்தகடும் வெளியிடப்பட்டது.



திரு. ராஜேந்திரன் ஐ.ஏ.எஸ். அவர்களுக்கு, சிரவை ஆதீனம் நினைவுப்பரிசு வழங்கும் காட்சி.

# அருட்செல்வரின் அஞ்சல் தலை வெளியீடு!

அருட்செல்வரின் அஞ்சல் தலை வெளியிடுகிற காட்சி.

வெளியிடப்பட்ட அருட்செல்வரின் அஞ்சல் தலை மற்றும் அஞ்சல் உறை.

பொள்ளாச்சியிலுள்ள எம்.சி.இ.டி. கல்லூரியில், சென்ற மார்ச் 26 அன்று அருட்செல்வரின் 95–ஆவது பிறந்த நாளை முன்னிட்டு, ‘அருட்செல்வர் வித்யா சக்தி’ உதவித்தொகை விருது வழங்கும் விழாவும், மற்றுமொரு மகுட நிகழ்ச்சியாக அருட்செல்வரின் அஞ்சல் தலை மற்றும் அஞ்சல் உறை வெளியீட்டு விழாவும் நிகழ்ந்தது அருட்செல்வருக்குப் பெருமை சேர்த்த நிகழ்ச்சிகளாகும்.

பொது வாழ்க்கையில் முத்திரை பதித்தவர்களுக்குத்தான் மத்திய அரசு அஞ்சல் தலையும், உறையும் வெளியிட்டுச் சிறப்பிக்கும். மூன்று ஆண்டுகளுக்கு முன்பே இம்முயற்சியில் ஈடுபட்ட மத்திய அரசின் அஞ்சல் துறை, அருட்செல்வரின் 95–ஆவது ஆண்டில் அதனை நிறைவேற்றிச் சிறப்பித்தது.

கோவை மேற்கு மண்டல அஞ்சல் துறைத் தலைவர் திரு. ஜெ. த. வெங்கடேஷ் வரலு அருட்செல்வரின் அஞ்சல் தலையையும், உறையையும் வெளியிட, அவற்றை எம்.சி.இ.டி. கல்லூரியின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் பெற்றுக் கொண்டார்.

– ந.நி.

கட்டுரை

# நவீன நீர்வழிச்சாலைத் – திட்டம் 7

## கேரளா, கர்நாடகா மற்றும் மஹாராஷ்டிரா நீர்வழிச்சாலைத் திட்டம்

பொறியாளர் ஏ.சி.காமராஜ்

ஒவ்வொரு மாநிலத்திற்கும் நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தைத் தனித் தனியாகச் செயல்படுத்திப் பலன் பெறலாம் எனப் பார்த்தோம். இதற்கு முக்கியக் காரணம் முன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர். ஏ.பி.ஜெ அப்துல் கலாம் அவர்கள் ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனித் தனியே திட்டம் வேண்டும் என என்னிடம் கேட்டுக் கொண்டதுதான். இப்பொழுது கேரளா, கர்நாடகா மற்றும் மஹாராஷ்டிரா மாநிலங்களுக்கான நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தைப் பார்ப்போம்.

### கேரளா நீர்வழிச்சாலை திட்டம்

KERALA WATERWAYS PROJECT

கேரளா நீர்வழிச்சாலைத் திட்டம்

கடவுளின் சொந்த நாடு என அழைக்கப்படும் அளவிற்குப் பெயர் பெற்ற மாநிலம் கேரளா. இதற்கு முக்கியக் காரணம் அங்குள்ள நீர்வளம். இந்த நீர்வளத்தை முறையாகப் பயன்படுத்திடக் கொடுக்கப்பட்டதே கேரள நீர்வழிச்சாலைத் திட்டம். இது கேரளாவின் மேற்கு நோக்கிப் பாயும் நதிகள் அனைத்தையும் பிணைத்து அந்த நதிகளில் ஏற்படும் வெள்ளப்பெருக்கைக் கட்டுப்படுத்துகிறது. இதன்மூலம் கேரளாவின் முக்கியப் பிரச்சனையான குடிநீர் மற்றும் மின்சாரப் பற்றாக்குறை நிவர்த்தி செய்யப்படும். கேரளா நீர்வழிச்சாலைத் திட்டத்தைச் செயல்படுத்த மொத்தம் ரூ. 33,000 கோடி செலவாகும். வருடா வருடம் ரூ. 4,900 கோடி வருமானம் கிடைக்கும். கேரள நீர்வழிச்சாலைத் திட்டத்தை 5 ஆண்டுகளுக்குள் செயல்படுத்த முடியும்.


கேரளா ஆளுநர் மேதகு சதாசிவம் அவர்களுடன் நவாட் டெக் குழு




மஹாராஷ்டிரா நீர்வழிச்சாலைத் திட்டம்

**கேரள நீர்வழிச்சாலையின் பயன்கள்:**

650 கி.மீ. ஆண்டு முழுவதும் செயல்படக்கூடிய நவீன நீர்வழிச் சாலை உண்டாகும். 22 மில்லியன் மக்களுக்குத் தங்கு தடையின்றிக் குடி தண்ணீர் கிடைக்கும்.

2600 மெகாவாட் மின்சாரம் கிடைக்கும். நிலத்தடி நீர்மட்டம் உயர்வதால், 400 மெகாவாட் மின்சாரம் மிச்சமாகும். 6 மில்லியன் ஏக்கர் நிலங்களைக் கூடுதலாகப் பாசனவசதி பெறச் செய்ய முடியும். ஏறத்தாழ 7 மில்லியன் பேருக்கு வேலைவாய்ப்புக் கிடைக்கும்.

புதிய காடுகளை உருவாக்குவதுடன் சுற்றுசூழலை மேம்படுத்த முடியும். கேரள நீர்வழிச்சாலை சுலபமாகவும், அரசியல் ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் செயல்படுத்த ஏற்றத் திட்டம்.

கேரள மாநில முதலமைச்சர் திரு. உம்மன் சாண்டி அவர்கள் நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் குறித்துப் பரிசீலிக்குமாறு கேரள அரசின் பொதுப்பணித் துறைக்குப் பரிந்துரை செய்ததன்பேரில் கேரள நீர்வழிச்சாலைத் திட்டத்தினை விளக்குமாறு எனக்குத் தலைமைச் செயலாளரிடமிருந்து அழைப்பு விடுக்கப்பட்டது. அதன்படி நானும், நவாட் டெக் இயக்குனர் பொறியாளர் கே.ஜெயச்சந்திரன் அவர்களும் கேரளா சென்று கேரளா நீர்வளத்துறையின் முதன்மைச் செயலாளர் திரு. குரியன் அவர்களைச் சந்தித்து, கேரள நீர்வழிச் சாலைத் திட்டத்தைப் பற்றியும் அதனால் உண்டாகும் பலன்களைப் பற்றியும் தெளிவாக விளக்கினோம். உடன் கேரள மாநில நீர்வளத்துறை முதன்மைப் பொறியாளரும் இருந்தார்.

அரசுத் தரப்பில் இந்தத் திட்டத்தைப் புரிந்து கொண்டு பாராட்டியதுடன், இத்திட்டத்தைக் கேரள மாநிலத்தில் நிறைவேற்ற முயற்சிகள் மேற்கொள்வதாக உறுதியளித்தார்கள். அந்த உறுதிமொழியை நிறைவேற்றுவார்கள் என்ற நம்பிக்கையுடன் இருக்கிறோம். கேரள முதலமைச்சர் அவர்களும் இந்தத் திட்டத்திற்கான மேற்படி நடவடிக்கைகள் எடுப்பதாகக் கூறி கடிதம் ஒன்றை அனுப்பியிருக்கிறார்.

சமீபத்தில் கேரளா ஆளுநர் திரு. சதாசிவம் அழைப்பு விடுத்திருந்தார். நான் செல்ல இயலாத காரணத்தால், எங்களது நவாட் டெக் அமைப்பின் சார்பாக, பொறியாளர் கே. மணிகண்டன், பொறியாளர் தனுவேல் மற்றும் தமிழ்நாடு வணிகர் சங்கப் பேரவை ஒருங்கிணைப்பாளர் திரு. நிஜாமுதீன் ஆகியோர் கேரளா சென்று ஆளுநரைச் சந்தித்தனர். அப்போது கேரள நீர்வழிச்சாலைத்


மஹாராஷ்டிரா ஆளுநர் மேதகு வித்தியாசாகர் ராவ் அவர்களுடன் நவாட் டெக் குழு

திட்டம் பற்றிப் பல்வேறு சந்தேகங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்ட ஆளுநர் அவர்கள் மாண்புமிகு முதலமைச்சர் மற்றும் துறை அமைச்சருக்குப் பரிந்துரை செய்வதாக உறுதி அளித்தார்.

**கர்நாடக நீர்வழிச்சாலைத் திட்டம்**

கர்நாடகாவில் மேற்கு நோக்கிப் பாயும் ஆறுகளில் கிட்டத்தட்ட 2000 டி.எம்.சி தண்ணீர் வருடந்தோறும் கடலில் கலப்பதாக நீர்வளத்




கர்நாடக நீர்வழிச்சாலை

துறையின் ஆய்வறிக்கைக் கூறுகின்றது. இந்த நீர்வளத்தை முறையாகப் பயன்படுத்திடக் கொடுக்கப்பட்டதே கர்நாடக நீர்வழிச்சாலைத் திட்டம். இது கர்நாடகாவின் முக்கியப் பிரச்சனையான குடிநீர்ப் பிரச்னையை நிவர்த்தி செய்யப் பெரிதும் பயன்படும். இது காளி, பெட்ரி, தாத்ரி, சராவதி, சுவர்ணா, நேத்ராவதி



கர்நாடகத் திட்டக்குழுத் தலைவர் திரு. இப்ராஹிம் அவர்களுடன்...

முதலிய பல்வேறு நதிகளைப் பிணைக்கிறது. கர்நாடக நீர்வழிச்சாலைத் திட்டத்தைச் செயல்படுத்த மொத்தம் ரூ. 30,000 கோடி செலவாகும். வருடா வருடம் ரூ. 5000 கோடி வருமானம் கிடைக்கும். இத்திட்டத்தை 5 ஆண்டுகளுக்குள் செயல்படுத்த முடியும். இத்திட்டம் செயல்படும்போது பெங்களூர் நகரத்தின் குடிநீர்ப் பிரச்னை முழுவதும் தீரும்.

**கர்நாடக நீர்வழிச்சாலையின் பயன்கள்**

400 கி.மீ. ஆண்டு முழுவதும் செயல்படக் கூடிய நவீன நீர்வழிச்சாலை உண்டாகும். 60 மில்லியன் மக்களுக்குத் தங்கு தடையின்றிக் குடிதண்ணீர் கிடைக்கும்.

2000 மெகாவாட் மின்உற்பத்தி செய்ய முடியும். நிலத்தடி நீர்மட்டம் உயரும்.

2.3 மில்லியன் ஏக்கர் நிலங்களைக் கூடுதலாகப் பாசனவசதி பெறச் செய்ய முடியும். ஏறத்தாழ 5 மில்லியன் பேருக்கு வேலைவாய்ப்புக் கிடைக்கும்.

புதிய காடுகளை உருவாக்குவதுடன் சுற்றுச்சூழலை மேம்படுத்த முடியும். கர்நாடக நீர்வழிச்சாலை சுலபமாகவும், அரசியல் ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் செயல்படுத்த ஏற்ற திட்டம்.

கர்நாடகா நீர்வழிச்சாலைத் திட்டத்தைப் பற்றித் தெரிந்துகொண்டு கர்நாடக அரசு அழைத்ததன்பேரில் நானும் பொறியாளர் கே.ஜெயச்

சந்திரன் அவர்களும் பெங்களூரு சென்று கர்நாடகா நீர்வழிச்சாலைத் திட்டத்தை 2012–ஆம் ஆண்டு ஜனவரி 3–ஆம் தேதி கர்நாடக மாநிலத்தின் முதல்வர் திரு. சதானந்த கவுடா அவர்களிடம் சமர்ப்பித்துத் திட்டத்தைப் பற்றி விளக்கினோம். அவர்களும் இத்திட்டத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டதோடு மட்டுமல்லாமல், இத்திட்டத்தைத் தங்கள் மாநிலத்தில் செய்லபடுத்த ஆவன செய்வதாக உறுதியளித்தனர்.

பிறகு கர்நாடக மாநிலத்தின் நீர்ப் போக்குவரத்துத்துறை அமைச்சர் திரு. கிருஷ்ண பால்மர் அவர்களையும் சந்தித்துத் திட்டம் பற்றி எடுத்துக் கூறினோம். அவர்களும் முதல்வரோடு இணைந்து திட்டம் நிறைவேற முயற்சிகள் எடுப்பதாக உறுதியளித்தார்.

பின்னர் 2013–ஆம் ஆண்டு உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்துத் துறை அமைச்சர் திரு. பாபுராவ் சின்சன்சார் அவர்களை நேரில் சந்தித்துத் திட்டத்தைப் பற்றி விளக்கமளித்தோம். அவர்களும் திட்டத்தை வெகுவாகப் பாராட்டியதுடன் வெகு விரைவில் திட்டத்தை எடுத்துக் கொள்வதாக உறுதி கூறினார்கள். நவாட் டெக் நிபுணர் குழு உறுப்பினர் திரு. சித்தானந்த் உடனிருந்தார்.

சமீபத்தில் கர்நாடகத் திட்டக் குழுத் தலைவர் திரு. இப்ராஹிம் அவர்களைச் சந்தித்து கர்நாடக நீர்வழிச்சாலைத் திட்டத்தை விளக்கிய போது, இது டாக்டர். ஏ.பி.ஜெ. அப்துல் கலாம் அவர்களுக்கு மட்டுமல்ல, தனக்கும் கனவுத்திட்டம் என்றதோடு இத்திட்டம் நிறைவேற அனைத்து நடவடிக்கைகளையும் எடுப்பதாக உறுதியளித்தார். மேலும்

## நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் பற்றி முக்கியப் பிரமுகர்களின் கருத்துக்கள் :

1. "கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம் ஒரு புதிய திட்டம் மட்டுமல்லாமல், நதிநீர் இணைப்பிற்கு மாற்றுத் திட்டமாகும். இது ஒரு சிறந்த திட்டம். இதன்மூலம் நீர்வழிச்சாலை, பாசன வசதி, மின்சாரம், வெள்ளக்கட்டுப்பாடு முதலிய பயன்களை அடையலாம்."

**– முன்னாள் குடியரசு தலைவர். ஏ. பி. ஜெ. அப்துல்கலாம்**

2. "தமிழ்நாடு நீர்வழிச்சாலைத் திட்டம் தமிழ்நாட்டிற்குச் சிறந்த திட்டமாகும். இதனை உடனே செயல்படுத்த வேண்டும். இதற்கான அரசாணையைப் பிறப்பியுங்கள்."

**– முன்னாள் தமிழக முதல்வர். செல்வி. ஜெ. ஜெயலலிதா**

3. "ரயில் போக்குவரத்து, சாலைப் போக்குவரத்து போன்று இந்தியாவிற்கு நீர்வழிப் போக்குவரத்தும் தேவை. இந்தத் திட்டமானது பொறியியல் துறையின் அதிசயமாகும். இந்தியப் பொறியாளர்களின் கிரீடமாக இந்தத் திட்டம் அமையும்.

**– டாக்டர். எஸ். பஞ்சநாதன்,** முன்னாள் தலைமைப் பொறியாளர்,
முதன்மைச் செயலாளர், உலக வங்கி நிபுணர்.

4. "தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம் ஒரு சிறந்த திட்டம் மட்டுமின்றி பொறியாளர்களின் அதிசயம். நதிகள் இணைப்பின் திட்டத்தைவிட, இத்திட்டம் அதிகப் பலன்கள் கொடுக்கும்."

**– திரு எஸ். நடராஜன்,**
உச்ச நீதிமன்ற முன்னாள் தலைமை நீதிபதி.

5. "உலகிலேயே முதன் முதலாகச் செயல்படுத்த போகும் இந்த வகையான நீர்வழிச்சாலைத் திட்டம் இதுதான்."

**– திரு. குருதோஷ்யன்,** அறிவியல் மற்றும்
தொழில்நுட்ப ஆலோசகர், நெதர்லாந்து தூதரகம்

6. "இது ஒரு சிறந்த திட்டம். ஒவ்வொரு மாநிலத்திற்கும் வெற்றி – வெற்றி என்ற அடிப்படையில் பலன் அளிக்கும் திட்டம்."

**– டாக்டர். எம். எஸ். சுவாமிநாதன்,** விஞ்ஞானி

7. "தேசிய நீர்வள மேம்பாட்டு ஏஜென்சியின் நதிகள் இணைப்புத் திட்டத்திற்குச் சிறந்த மாற்றுத் திட்டமாகும். வெள்ளத்தையும், வறட்சியையும் கட்டுப்படுத்தக் கூடியத் திட்டம்.

**– திரு. சுரேஷ் பிரபு,** தலைவர்,
நதிகள் இணைப்பின் செயலாக்கக்குழு.

8. “கங்கா - குமரி தேசிய நீர்வழிச்சாலைத் திட்டம் நதிகள் இணைப்பிற்குச் சிறந்த மாற்றுத் திட்டம். இது எளிதில் செயல்படுத்தக் கூடியதாகவும், சிக்கனமானதாகவும் அமைந்துள்ளது.”

– **பொறி.கே.பாண்டி,** முன்னாள் தலைமைப் பொறியாளர் பொதுப்பணித்துறை.

9. “வெள்ளத் தடுப்பிற்கான உண்மையானத் திட்டத்தை வடிவமைத்து இருக்கிறீர்கள்.”

– **டாக்டர். கிறித். எஸ். பரீக்,** தேசியத் திட்டக்குழு உறுப்பினர்.

10. “இது ஒரு புதுமையானத் திட்டம். இந்தியா சுதந்திரம் அடைந்ததிலிருந்து உருவான திட்டங்களிலேயே இத்திட்டத்திற்கு நிகரானத் திட்டம் வேறு ஒன்றுமில்லை.”

– **பொறியாளர்.கே. வி. ரூப்சந்த்,** முன்னாள் தலைமைப் பொறியாளர்

11. “இந்தத் திட்டம் ஓர் எட்டாவது அதிசயம்.”

– **பொறியாளர் ஏ. கேசவன்,** தொழிலதிபர்.

12. “நம்மிடம் வரப்பெற்றுள்ள ஏராளமானத் திட்டங்களில் இதுவே மிகச் சிறந்த திட்டமாகும். மேலும் தங்களிடம் உள்ள நிபுணர் குழுவைப் போல் ஒரு சிறந்த குழுவை நாங்கள் வேறெங்கும் கண்டதில்லை.”

– **டாக்டர். பி. பி. எஸ். சர்மா,** முன்னாள் (ஐஐடி) பேராசிரியர்

13. “தமிழ்நாட்டிற்கு யாரையும் கெஞ்சாமல் தண்ணீர் கிடைக்குமென்றால் அது, தேசிய நீர்வழிச்சாலைத் திட்டத்தின் மூலமாக மட்டுமே.”

– **ஸ்ரீ பொன்னையன்,** முன்னாள் நிதியமைச்சர், தமிழ்நாடு

14. “நதிகள் இணைப்புத் திட்டத்திலுள்ள பல குழப்பங்களையும், குறைபாடுகளையும் சரிப்படுத்தக் கூடிய ஒரே திட்டம்.”

– பொறியாளர்.கே. எஸ். ராவ். எம்.பி, ஆந்திரா

15. “ஏ.சி. காமராஜ் போன்று சிறந்த நிபுணர் நமக்கு மீண்டும் கிடைக்க மாட்டார்.”

– **பொறி. டி. விஸ்வநாதன்,** முன்னாள் துணைவேந்தர், அண்ணா பல்கலைக்கழகம்

16. “யார் இத்திட்டத்தைப் புரிந்து கொண்டாலும், இத்திட்டத்திற்கு ஆதரவு தெரிவிக்காமல் இருக்க முடியாது. அது சாதாரண மனிதனானாலும் சரி, முதலமைச்சராக இருந்தாலும் சரி.”

– **பொறி. பிரபாகர்,** தலைவர், இந்திய பொறியியல் கூட்டமைப்பு, ஆந்திரா

ஆய்வுப் பணிகளுக்கான நிதி ஒதுக்கிட நான் கேட்டுக் கொண்டதை ஏற்று மாண்புமிகு கர்நாடக முதலமைச்சர் திரு. சித்தராமய்யா அவர்களுடன் கலந்தாலோசித்து விரைவில் நிறைவேற்றுவதாகக் கூறியுள்ளார்.

**மகாராஷ்டிரா நீர்வழிச் சாலைத் திட்டம்**

நாட்டிலேயே மஹாராஷ்டிராவில்தான் வறட்சியால் அதிகளவில் விவசாயிகள் தற்கொலை செய்து கொள்கின்றனர். இப்பிரச்னைகளுக்கு நிரந்தரத் தீர்வு நதிகளைப் பிணைக்கும் மகாராஷ்டிரா நீர்வழிச்சாலைத் திட்டமே.

மாநிலங்களிலேயே மகாராஷ்டிரா நீர்வழிச்சாலைத் திட்டம் மிகப்பெரிய மழைநீர்சேகரிப்புத் திட்டம் ஆகும். மகாராஷ்டிரா மாநிலத்தில் மேற்கிலிருந்து கிழக்காகப் பாயும் அனைத்து நதிகளையும் மகாராஷ்டிரா நீர்வழிச் சாலை பிணைக்கிறது. மேலும் இந்த நதிநீர்ப் பிணைப்பு கடல் மட்டத்திலிருந்து 230 மீட்டர் உயர வேறுபாட்டில் அமைக்கப்படுகிறது. நீர்வழிச்சாலையின் அகலம் 120 மீட்டரும், ஆழம் 10 மீட்டரும் கொண்டதாகும். இத்திட்டத்திற்கு ஆகும் மொத்தச் செலவு ரூ 1,05,000 கோடி ஆகும்.

இத்திட்டத்தைச் செயல்படுத்துவதன் மூலம் அரசுக்குக் கிடைக்கும் வருடாந்திர வருமானம் ரூ. 12,000 கோடி ஆகும். இத்திட்டத்தை நடைமுறை படுத்த 5 ஆண்டுகளே ஆகும்.

**மகாராஷ்டிரா நீர்வழிச்சாலைத் திட்டத்தின் நன்மைகள்**

❖ 1500 கிலோ மீட்டருக்கு நவீன நீர் வழிச்சாலைப் போக்குவரத்து அமைக்க முடியும்.

❖ *75* மில்லியன் மக்களுக்குக் கூடுதலாகக் குடிநீர் கிடைக்கச் செய்ய முடியும்.

❖ *4050* மெகாவாட் மின்உற்பத்தித் திறன் பெறமுடியும்.

❖ கூடுதலாக *14* மில்லியன் ஏக்கர் நிலம் பாசன வசதியைப் பெறும்.

❖ நிலத்தடி நீர்மட்டம் உயரும். இதனால் *1500* மெகாவாட் மிச்சமாகும்.

❖ வெள்ளம் மற்றும் வறட்சியால் ஏற்படும் சேதங்கள் குறையும்.

*22* மில்லியனுக்கும் மேலான இளைஞர்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்க முடியும். சுற்றுலா மேம்படும்.

இத்திட்டம் நிறைவேறும்போது மகாராஷ்டிராவின் வறட்சி மண்டலங்களான விதர்பா, மரத்தவாடா முதலியவை தண்ணீர்ப் பிரச்சனையின்றிச் செழிப்பான மண்டலங்களாக மாறும். மஹாராஷ்டிரா நீர்வழிச்சாலைத் திட்டம் பொதுப்பணித்துறை முதன்மைச் செயலாளர் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

சமீபத்தில் மஹாராஷ்டிரா ஆளுநரும் தமிழக ஆளுநருமாகிய திரு. வித்தியாசாகர் ராவ் அவர்களைச் சென்னையில் சந்தித்து விவாதித்த போது, ஏற்கனவே திட்டமிடப்பட்டுள்ள திட்டங்களை நிறைவேற்றிய பின்பு இதனை விரைவில் தொடங்கலாம் எனத் தெரிவித்தார். தமிழ்நாடு பொதுப்பணித்துறை முதன்மைப் பொறியாளர் (ஓய்வு) திரு. தினகரன், தலைமைப் பொறியாளர் (ஓய்வு) திரு. டி.டி. கேசவன், நவீன நீர்வழிச் சாலைத் திட்ட ஆதரவாளர்கள் திரு. மாறன், திரு. தனுவேல், திரு. டைமிங் விஜய், தமிழக விவசாய சங்கக் கூட்டமைப்புத் தலைவர் பி.ஆர். பாண்டியன் ஆகியோர் உடனிருந்தனர்.

இயற்கையாகவே சிறுவயது முதலே ஆராய்ச்சியில் மிகுந்த ஆர்வம் உண்டு. ஆனால் விவசாயிகளின் வாழ்வாதாரம் முன்னேற உதவ வேண்டும் என்ற ஒரே நோக்கத்திற்காக ஆராய்ச்சி மீதான ஆர்வத்தைக் குறைத்துக் கொண்டு இத்திட்டத்தில் ஈடுபடுத்திக் கொண்டேன். ஆனால் மீண்டும் நவீன நீர்வழிச்சாலை என்ற புதுமையானத் திட்டத்தை உலகில் எங்குமில்லாத திட்டத்தை உருவாக்கியதன் மூலம் ஆராய்ச்சிப் பணிக்கே வந்துவிட்டதாகத் தோன்றுகிறது.

ஆராய்ச்சிப் பணிகளுக்குத் தனியே ஒரு மையம் அமைக்கத் திட்டமிட்டுள்ளோம். ‘ஓம் சக்தி’ ஏப்ரல் இதழில் வெளியான “தூண்டுகோலும் வேண்டுகோளும்” என்பதை வாசகர்கள் அனைவரும் படித்திருப்பீர்கள். கடந்த மாதம் சில நல்உள்ளங்களின் கொடை கிடைத்துள்ளது. அவர்களுக்கு எங்களது நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம். தாங்கள் ஒவ்வொருவரும் தங்களது பங்களிப்பை வழங்கி உதவிடுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். ●



கர்நாடக உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்துத்துறை அமைச்சர் பாபு ராவ் சின்சன்சார் அவர்களுடன்...

# சந்ததியினர் நலம் வாழ...

வெ. ஜெயலட்சுமி

நம் சந்ததியினர்
நலம் வாழ
சொத்தாக விட்டுச் செல்வோம்
சுத்தமான பூமியை!

தொடரும் தொழில்நுட்ப வளர்ச்சி
தொலைந்தது இயற்கையின் மலர்ச்சி
கூட்டுமுயற்சி கொண்டேயதை
மீட்டெடுப்போம் வாரீர்!

புவி வெப்பமாகிறது புலம்புவதை விடுத்து
புகைவிடும் வண்டிகளின்
இடைவிடாத பயணத்திற்குத்
தடை போடுவோம் இனி!

மரங்களின் வெளிமூச்சுதான்
மனிதர்களின் உள்மூச்சு என்பதால்
வெட்டப்பட்ட மரங்களுக்குப் பதிலாக
நட்டுவைப்போம் புதிய மரக்கன்றுகளை!

மக்காத நெகிழிப் பைகளைப் புறந்தள்ளி
மக்கும் துணிப் பைகளையே பயன்படுத்தி
மற(றை)ந்து போன ஏரி, குளங்களைத் தூர்வாரி
மறுக்காமல் சேமிப்போம் மழைநீரை!

ஆலைக்கழிவுகளைக் கலந்துவிடாமல்
ஆற்றுமணலைக் கொள்ளை அடிக்காமல்
ஆறுகளைக் காப்போம் என
ஆளாளுக்கு எடுப்போம் சபதம்!

நஞ்சில்லாக் காய்கனி பெற
எஞ்சியுள்ள கழிவுகளை உரமாக்கி
இல்லந்தோறும் இனிமேல்
இயற்கை முறையில் செய்வோம் விவசாயம்!

மாசில்லாத காற்றைச் சுவாசிக்க
தூசில்லாத நீரை அருந்திட
நேசம் கொள்வோம் இயற்கை மீது!
பசுமை காப்போம் இப்பூமி மீது!



கன்ஷியாம்

தூக்கிச் சென்றார்கள். அப்போது அவருடைய கால்களிலிருந்து ரத்தம் பெருக்கெடுத்தது. சதை வெளியே தொங்கியது.

ஆரம்ப சுகாதார நிலையத்திற்கு இவரை எடுத்துச் சென்றவுடன், இவருடைய நிலையைப் பரிசீலித்த மருத்துவர்கள் அவர் பிழைக்க வேண்டுமானால், உடனடியாக அவருடைய இடதுகாலை வெட்டியெடுத்து விட வேண்டுமென்று கருதி, இடது காலை வெட்டி எடுத்து விட்டார்கள்.

பிறகு, அம்மருத்துவர்கள் இவரை ஜான்சியில் உள்ள மருத்துவமனைக்கு ஆம்புலன்சில் அனுப்பி

# மருத்துவமனையிலா இப்படி?

"உத்தரப்பிரதேச – மத்தியப்பிரதேச மாநில எல்லையில் ஒரு கிராமம். இடையால் என்பது அதன் பெயர். அதற்குப் பக்கத்தில் உள்ள பிரபலமான நகரம் ஜான்சி. கன்ஷியாம் என்ற ஒரு நடுத்தர வயதுக்காரர். ஒரு பேருந்து விபத்தில் தனது இடது காலை அவர் இழக்க நேர்ந்தது.

இந்த விபத்து கடந்த மார்ச் 10–ஆம் தேதி நடந்தது. இவருடைய மனைவி ஹேமாவதி. அவர்களுக்கு 4 வயதில் ஆண் குழந்தையும், ஒரு வயதில் பெண் குழந்தையும் உள்ளனர்.

கன்ஷியாம், அங்குள்ள ஒரு பிரபலமான பள்ளிப் பேருந்தின் நடத்துநராகப் பணி செய்து வந்துள்ளார். தினசரி காலை 6.45 மணிக்கு இவர் பணிக்குச் சென்றாக வேண்டும். குழந்தைகளை ஏற்றிக்கொண்டு பேருந்து பள்ளிக்குச் செல்லும். அன்றைக்குப் பேருந்து ஓட்டுநர் மது அருந்தி யிருக்கிறார் என்பது கன்ஷியாமுக்கு நன்றாகத் தெரியும்.

பேருந்தை வேகமாக இயக்கிய ஓட்டுநர், எதிரே வந்த சரக்குந்துடன் மோதுவதைத் தவிர்ப்பதற்காக வாகனத்தைச் சாலை ஓரத்திற்குச் செலுத்தியிருக்கிறார். கட்டுப்பாட்டை இழந்த பேருந்து, தலைகுப்புறக் கவிழ்ந்தது.

பேருந்துப் படியில் கன்ஷியாம் நின்று கொண்டிருந்ததால், தூக்கி வீசப்பட்டுத் தலையில் பலத்த அடி. விபத்து நடந்த பிறகு, மொரானிபூரில் உள்ள ஆரம்ப சுகாதார மையத்திற்குக் கன்ஷியாமைத்



வைத்தார்கள். அப்படிக் கொண்டு செல்லப்பட்ட போது, வெட்டப்பட்ட அவருடைய இடது காலையும் கூடவே எடுத்துக்கொண்டு போனார்கள். ஒரு வேளை மருத்துவமனையில், வெட்டப்பட்ட இடது காலை மீண்டும் இணைத்து விடுவார்கள் என்று கருதப்பட்டது.

மதியம் 3 மணிவரை அந்த ஜான்சி மருத்துவமனையில் கன்ஷியாமை ஒரு மருத்துவரும் வந்து பார்க்கவில்லை. ஏதாவது ஒரு டாக்டராவது இவரைப் பார்க்க வரமாட்டார்களா

என்ற கவலை, கன்ஷியாமின் உறவினர்களுக்கு இருந்தது.

கன்ஷியாமோ, ரத்தப்பெருக்கால் சோர் வடைந்துவிட்டார். ரத்தப்பெருக்கையாவது நிறுத் துவதற்கு உதவி செய்ய உறவினர்கள் கேட் டார்கள். அதையும் யாரும் பொருட்படுத்தவில்லை. வெட்டப்பட்ட கால் உறவினர்களுடைய கையில் இருந்தது. அதைப் போட்டு வைத்துக்கொள்ள ஒரு பாலிதின் பையைக் கேட்டார்கள். அதுவும் தரப்பட வில்லை. அதற்குள் கன்ஷியாம் நினைவிழந்தார்.

பல மணி நேரம் தூக்குப் படுக்கையிலேயே கிடந்தார். மனைவி மிகுந்த சோகத்தில் பைத் தியம் பிடித்தவள்போல உடனிருந்தாள். தூக்குப் படுக்கையில் கிடந்த கன்ஷியாமுக்குத் தலை யணை இல்லை. அதனால், இந்த வெட்டப்பட்ட அவருடைய இடது காலைத் தலையணையைப் போலத் தலைக்கடியில் வைத்து விட்டார்கள்.

அதற்குள் இந்தச் செய்தி ஜான்சி மருத்துவ



வெட்டப்பட்ட தனது இடதுகாலைத் தலையணையாக வைத்துப் படுத்திருக்கும் கன்ஷியாம்

மனையைச் சுற்றிலும் பரவியது. பத்திரிகையாளர் கள் திரண்டார்கள். புகைப்படம் எடுத்தார்கள். தொலைக்காட்சி ஊடகங்களில் இது காட்டுத்தீ போலப் பரவியது. பரபரப்புச் செய்திகளை விநியோ கிக்கும் ஊடகங்கள்தான் விளம்பரத்திற்காக இவ் வாறு செய்துவிட்டன என்று விமர்சனங்கள் வந்தன.

அதற்குள் அந்த இடதுகால் விறைத்துப் போய்விட்டது. அவருடைய காலோடு இணைப் பதற்கான தகுதியை இழந்துவிட்டது. கான்பூரி லிருந்து ஒரு மருத்துவர் குழு விரைந்து வந்து சிகிச்சையைத் தொடங்கியது. ஆனால், பலன் இல்லை.

ஜான்சி மருத்துவமனை ஊழியர்கள் சிலர் கன்ஷியாமின் மனைவியிடம் அரசு மருத்துவ மனை நிர்வாகம் சரியில்லை என்றும், பக்கத்தி லுள்ள தனியார் மருத்துவமனைக்குச் செல்லும்படி யும் அறிவுரை கூறியிருக்கிறார்கள். அந்த மருத் துவமனையின் பெயர் சிரஞ்சீவி மருத்துவமனை. அங்குள்ள அரசியல்வாதிகளின் செல்வாக்கால் அந்த மருத்துவமனை அதிகமாகப் பணம் கேட் காது என்றும் சொன்னார்கள். அதற்குள் உத்தரப் பிரதேச முதலமைச்சரின் நிவாரண நிதியிலிருந்து ரூ. 2 லட்சத்திற்கான காசோலை கன்ஷியாம் குடும்பத்திடம் தரப்பட்டது.

தனியார் மருத்துவமனை ரூ. 40 ஆயிரம் மருத்துவச் செலவிற்குக் கட்டச் சொன்னது. அதன்பிறகு 2 வாரத்திற்கு ஒருமுறை ஜான்சி மருத்துவமனைக்குப் போய் தொடர் சிகிச்சை பெற அறிவுறுத்தியது.''

*- 'The Week' - April 29, 2018.*

**இ**ந்தச் செய்தியிலுள்ள அரசு மருத்துவ மனை நிர்வாகத்தைப் பற்றி நாம் யோசிக்க வேண் டியவர்களாக உள்ளோம். விபத்து நேர்ந்த ஒருவ ருக்கு உடனடியாக அவசரச் சிகிச்சையைத் தருவ தற்குப் பதிலாக, அவருடைய துண்டிக்கப்பட்ட காலையே அவருக்குத் தலையணையாகத் தரப் பட்டது என்றால், இதைப்பற்றி நினைத்தாலே மயக்கம் வருகிறது.

உத்தரப்பிரதேசத்திலுள்ள ஆட்சியின் முதல் வர் மாண்புமிகு யோகி ஆதித்யநாத் என்ற சந்நியாசி. அவர்மீது ஊழல் குற்றச்சாட்டு எதுவும் இல்லை. ஆனால், அவருடைய நிர்வாகத்தில் இப்படியொரு சம்பவம் நிகழ்ந்திருக்கிறது என் றால், இதற்காக வெட்கப்பட வேண்டியவர்கள் யார்? என்று கேட்க வேண்டியுள்ளது.

இப்படித்தான், இறந்து போன ஒரு குழந் தையை கிராமத்திற்கு எடுத்துச்செல்ல வாகனம் தரப்படாமல், தந்தையே கைகளாலே ஏந்திச் சென்ற காட்சியை ஊடகங்களில் பார்த்தோம். இறந்து போன மனைவியை எடுத்துச்செல்ல வாகன வாடகை தரமுடியாத ஏழை கிராமவாசி, முதுகிலேயே சுமந்து சென்ற காட்சியையும் ஊடகங்களில் பார்த்தோம்.

இவற்றையெல்லாம் பார்த்தபிறகு, இந்த தேசமா வேதப் பெருமை பேசும் தேசம் என்று கேட்க வேண்டியுள்ளது.

**– ந.நி.**

கட்டுரை

மு. சண்முகம்


தீர்த்தமலைக்குச் செல்லும் பக்தர்கள்

# இராமபிரான் பூசித்த தீர்த்தகிரீசுவரர்

சிறந்த சிவவெறிச் செல்வனாகிய இலங்கை வேந்தன் இராவணனைக் கொன்ற பாவம் தீர இராமர் சிவபெருமானை முதலாவதாகப் பூசித்தது இராமேசுவரத்தில்.

திரும்புகின்ற வழி யெங்கணும் காடுகளும் மலைகளும் நிறைந்திருக்க, அடுத்த இரண்டாம் காலப் பூசை நேரம் நெருங்கியதும் ஒரு மலையகத்தே நின்று தன்னுடன் வந்த அனுமனை பூசைக்குரிய நீரைக் கொண்டு வருமாறு பணித்திருக்கிறார்.

சீதையை மீட்டுக் கொண்டு வந்த உற்சாகத்தில் அனுமனும் நீரைக் கொண்டு வருவதற்கு அருகிலுள்ள நீர் நிலைகளைத் தேடி ஓடியிருக்கிறார். அதற்குள் பூசை வேளை நெருங்கி விடவும் இராமர் அருகிலுள்ள மலைப் பாறையில் அம்பினை ஊன்றியதும் அதிலிருந்து பெருகிய நீரைக்கொண்டு சிவ பூசையைத் தொடங்கி முடித்தும் விட்டார்.

நீரைத் தேடிச் சென்ற அனுமன் அருகில் ஓடும் ஆற்றுநீரை ஒரு குடத்தில் முகந்து எடுத்து வந்த நிலையில், பூசை முடிந்துவிட்டதனைக் கண்டதும் தாம் பாடுபட்டும் பயனில்லாமற் போய்விட்டதே என்ற தாங்கொணாத் துயரத்துடன் நீரோடு கூடிய குடத்தைத் தூக்கி அப்பால் எறிந்திருக்கிறார். அக்குடம் அவர் நீர் கொண்டு வந்த ஆற்றிலேயே போய் விழுந்திருக்கிறது.

இந்நிகழ்விடம் தருமபுரி மாவட்டத்தின் அரூர் என்னும் தாலூகா தலைநகரை அடுத்துள்ள தீர்த்தமலை என்பதாகும். இது அரூரிலிருந்து நரிப்பள்ளிக்குச் செல்லும் சாலையில் பதினான்காவது கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது; மரங்களும் மலைகளும் அடர்ந்திருக்கும் காட்டுப் பிரதேசம்.

இதன் வடபுறத்தில் சிறு தொலைவிலேயே பெண்ணையாறு ஓடுகிறது. “காவிரி, தென்பெண்ணை, பாலாறு”


தீர்த்தமலை உச்சியிலிருந்து கொட்டும் அருவியில் நீராடும் பக்தர்கள்

என்று தேசீயக் கவி பாரதியார் பாடிய அதே தென்பெண்ணை ஆறுதான்.

இராமாயணக் காலத்தில் அனுமன் தூக்கியெறிந்த குடம் இவ் வாற்றின் நடுப்பகுதியில் விழுந்திருக் கிறது. பல்லாண்டுகளுக்கு முன்னரே அவ்விடத்தைச் சுற்றித் தொட்டி போன்ற அமைப்பினை ஏற்படுத்தி யிருக்கிறார்கள் கிராம மக்கள். ஆறு நீரின்றி வறண்டு போனாலும் இத் தொட்டியில் மட்டும் மேல் மட்டத்தி லேயே நீர் சுரந்து கொண்டிருப்பது வியப்பினை அளிப்பதாகும்.

மேலும் அந்நீரைப் பருகுகின்ற போது செப்புக் குடத்திலிருந்து எடுத்த நீரைப் போன்று வாசனையும் சுவை யும் நெஞ்சில் நிறைவது இந்த விஞ் ஞான யுகத்திலும் அதிசயமாகவே படுகின்றது. இதன் அருகிலுள்ள ஆற்றுப் படுகையில் ஆஞ்சநேயருக் கென்று ஒரு கோயிலைக் கட்டி வழி பட்டுக் கொண்டிருக்கிறார்கள் ஊர் மக்கள். ஊர்ப் பெயரும் 'அனுமந்த தீர்த்தம்' என்றாகிவிட்டது.

இந்த அனுமந்த தீர்த்தத்தில் நீராடி விட்டு ஆஞ்சநேயரின் அருள்பெற்ற பின்னரே தீர்த்த மலைக்குச் செல்லும் முறை வழக்காற்றில் உள்ளது.

தீர்த்தமலை என்னும் தலம் பிர சித்திப் பெற்றதற்குக் காரணம் இராம பிரான் இங்கு வந்து ஈசனுக்குப் பூசனை செய்ததும் மலை முகட்டி னின்று இழிந்து வரும் இராம தீர்த்தம் என்னும் அருவியும்தான்.

இத்தலத்திற்கு தவராஜகிரி, பஞ்ச பூதகிரி, சிவசைலம், பனலசடிலம், சித்தநிவாசம், நிரந்தரம், நியாதிநாசம், துரிதஹரம், ரோகஹரம், இராமேட் டம், சுவாமி சிருங்கம், தீர்த்தகிரி என்னும் பெயர்களும் உண்டு. இராம பிரான் மட்டுமின்றிப் பார்வதிதேவி, குமரக் கடவுள், அக்கினி தேவர், அகத்திய முனிவர் ஆகியோரும் இங்குத் தவம் செய்து பாபவிமோ சனம் பெற்றதாக வரலாறு.

"அட்டசித்தி உதவுமலை அநேகமுள ஆனாலும்
இட்டசித்தி உதவுமிடம் இதுபோல இலைஎவர்க்கும்
கிட்டரிய காரியசித்தி கிரியையுடன் யோகசித்தி
மட்டரிய ஞானசித்தி மற்றெவையும் பெறலாமே"

என்று இத்தலப் பெருமையினை சைவ எல்லப்ப நாவலரின் 'தீர்த்தமலை மான்மியம்' கூறும்.

இராமர் பூசித்த சிவலிங்கமும் தீர்த்தமுமிருக்கும் மலைக் கோயிலுக்கு மலைப் பாதையில் ஒரு கிலோ மீட்டர் தூரம் செல்ல வேணும். அன்பர்கள் வசதிக்காக சிறிது தூரத்திற்குப்



தீர்த்தமலை – மலை அடிவாரத்திலுள்ள கோயிலின் முன் கோபுரம்

படிகளும் பின்னர் பாதையும் அமைக் கப்பட்டுள்ளன. குறிஞ்சியும் முல்லை யும் இணைந்த நிலப் பகுதி. ஆங் காங்கே இளைப்பாறு மண்டபங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

மலையுச்சியைத் தொடுவதற்குச் சற்று முன்னதாகவே நெடிய – அழகிய பாறைகளின் பின்னணியில் திருக் கோயில் அமைந்துள்ளது. கோயில்

சிறியது என்றாலும் இராமர் பூசித்த தீர்த்த கிரீசுவரர் எழுந்தருளியிருக்கின்ற பெருமையுடையது.

கோயில் நுழைவாயிலின் முன்னர் சிறு மண்டபம். வாயிலையடுத்து பலி பீடம் , கொடிமரம், நந்தி மண்டபம் ஆகியவை. மாடத்தில் ஒரு துர்க்கை சிலை. திருச்சுற்றில் முதலாவதாக உள்ள பதினாறு கால் மண்டபத்தில் காசி விசுவநாதர் லிங்க வடிவில்



காட்சியளிக்கிறார். அடுத்த அமைவது விநாயகர் சந்நதி. தொடர்ந்து அகத்தீசுவரர், அகிலாண்டேசுவரி, சப்த கன்னியர் ஆகியோரது கல்லுருவங்கள்.

கோயிலின் பின்புறமுள்ள மலையுச்சியில், கண்ணுக்கெட்டாத தூரத்திலிருந்து பெருகி வருகின்ற ஊற்றுநீர் இரும்புக் குழாய் வழியே சுமார் 30 அடி உயரத்திலிருந்து கொட்டுகிறது. மூலிகைச்செடி, கொடிகளினூடே தவழ்ந்து வரும் நன்னீரில் நனைவது உள்ளத்திற்கு மட்டுமன்றி உடலுக்கும் புத்துணர்வளிக்க வல்லது.

மிகச் சிறிய அளவில் கொட்டும் இராம தீர்த்தம் என்னும் இவ்வருவியில் நனைவதோடு திருக்கோயிலின் வெளிப் பிரகாரத்திலுள்ள அக்கினி தீர்த்தம், குமார தீர்த்தம், அகத்திய தீர்த்தம், கௌரி தீர்த்தம் ஆகிய சுனை நீரை எடுத்துத் தலையில் தெளித்துக் கொள்வதோடு திருப்தியடையலாம்.

அடுத்து, இத்திருச்சுற்றின் முடிவில் நவக்கிரகங்கள், புற்றுக்கோயில் ஆகியவற்றினை வலம் வருவதோடு கோஷ்டங்களிலுள்ள கால பைரவர், சூரிய நாராயணர் தரிசனமும் கிடைக்கிறது.

பிரதானமாக உள்ள கருவறையில் நுழைகின்றபோது வாயிலுக்கு எதிரில் நந்தி தேவர்; வாயிலின் இரு புறங்களிலும் துவாரபாலகர்கள். உள்ளே அருள்மிகு தீர்த்தகிரீசுவரர் ஐந்துதலை நாகம் குடைபிடிக்க லிங்கத் திருவுருவில் அமர்ந்து அருள்பாலிக்கிறார். அப்பெருமானை வணங்கிவிட்டு வெளியே வந்ததும் இடப்புறம் தனிச் சந்நதியில் அருள்மிகு வடிவாம்பிகையின் அருட்திருக் கோலத்தினையும் காணும் பேறு பெறலாம். இத்துடன் மலைக் கோயில் தரிசனம் நிறைவு பெறுகின்றது.

மலையை விட்டுக் கீழே இறங்கினால் அடிவாரத்திலுள்ள திருக்கோயிலின் முன்னர் பூர்த்தியடையாத நிலையிலுள்ள அழகிய கோபுரம் காண்போரை ஈர்க்கும். உள்ளே நுழைந்தால் விசாலமான பரப்பளவில் அண்மையில் புதுப்பிக்கப்பட்டுப் புதுப் பொலிவுடன் காட்சியளிக்கும் திருக்கோயில் வளாகம். முகப்பில் இந்துசமய அறநிலையத் துறை செயல் அலுவலகம் உள்ளது.




தீர்த்தமலை – மலை அடிவாரத்திலுள்ள கோயிலின் முகப்புத் தோற்றம்

1500 ஆண்டுகள் பழமை வாய்ந்த தாகக் கூறப்படும் இக்கோயிலின் பத்தொன்பது கல்வெட்டுகளும் விஜயநகர அரசர்கள் காலத்திய திருப்பணிகளைக் குறிப்பிடுகின்றன. 'நிகரிலி சோழ மண்டலத்து விரியூர் நாட்டுப் புறமலை நாட்டுத் தகடூரில் பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ள தீர்த்தமலை' என்றொரு கல் வெட்டு இதனைக் குறிப்பிடுகின்றது.

கி.பி. 1014 – 1044 காலத்திய முதலாம் இராஜேந்திரனின் கல்வெட்டுகளில் தீர்த்தமலைக் கோயிலுக்கு மண்டபம் கட்டியது, நந்தா விளக்கிற்குத் தானம் கொடுத் தது போன்ற சேதிகள் காணப்படு கின்றன. க்ஷேத்திரபாலகருக்கும் சண்டேசுவர நாயனாருக்கும் எடுத்த பரிவார ஆலயங்களைப் பற்றியும் உத்தம சோழ புறமலை நாடழுவான் செய்த தானம் பற்றியும் கல்வெட்டுக் குறிப்புகள் உள்ளன.

இத்திருக்கோயிலில் சௌந்திராம் பிகை உடனுறை தீர்த்தகிரீசுவரர் அமர்ந்து அருளாட்சி புரிகிறார். புராதன காலத்தில் அகத்தியரும் வசிட்டரும் இத்தலத்திற்கு வந்து ஈசனருள் பெற்றிருக்கிறார்கள். இங்கிருக்கும் அஷ்டபுஜதுர்க்கை, சகஸ்ரலிங்கம் ஆகிய சிலாவடிவங்கள் கலைநயம் மிக்கவை. இங்கு,

"பாட்டில் உருகிலை கேட்டும் உருகிலை"

என்று தொடங்கும் திருப்புகழில்,

"தீர்த்த மெனதக மேட்டை யுடனினை
ஏத்த அருளுட நோக்கி அருளிதி
தீர்த்த மலைநகர் காத்த சசிமகள் பெருமானே"

என்று அருணகிரிநாதர் பாடிப் பரவுகின்ற வள்ளிதேவயானையுடன் வீற்றிருக்கும் ஆறுமுகப் பெருமானை வாழ்த்தி வணங்கிட இருவினையும் நீங்கிடும் என்பதோடு, திருநாவுக்கரசர் அருளிய திருத்தாண்டகத்தில் கண்ட வாறு வேற்றாகி, விண்ணாகி, யாவு மாய் இத்தீர்த்த மலையில் நின்றருளும் இராமபிரான் பூசித்த அருள்மிகு வடிவாம்பிகை சமேத தீர்த்த கிரீசு வரரை ஏத்தி இறைஞ்சுவது இம்மைக் கும் ஏழேழ் பிறவிக்கும் பயனுடைத் தாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

●

கட்டுரை



“தமிழுண்டு, தமிழ்
மக்களுண்டு, இன்பத்
தமிழுக்கு நாளும்
செய்வோம் நல்ல தொண்டு”

என்பது ‘பாரதி கவிதா மண்டல’த்தைச் சார்ந்த கனகசுப்புரத்தினக் கவிஞரின் முழக்கம். ‘பாவேந்தர்’, ‘புரட்சிக் கவிஞர்’, ‘புதுவைக் குயில்’, ‘இருபதாம் நூற்றாண்டு நக்கீரர்’, ‘சுயமரியாதை இயக்கத்தின் ஒப்பற்ற பாவலர்’, ‘தமிழ் நாட்டு விட்மன்’ என்றெல்லாம் தமிழ் கூறு நல்லுலகால் போற்றி அழைக்கப் படும் பாரதிதாசன், ஒல்லும் வகை யெல்லாம் தமிழுக்கு – தமிழ்நாட்டிற்கு – தமிழ் மக்களுக்குத் தொண்டாற்றியவர்.

# பாரதிதாசன் போற்றும் ‘தகத்தகாயத் தமிழ்!’

நாடு, தொழில், இயற்கை, காதல், புதிய உலகம், இளைஞர் உலகு, பெண்ணுலகு முதலியன அவருக்குப் பாடு பொருள்கள்; தமிழோ அவருக்கு ஊடு பொருள். அவர் நெஞ்சின் ஊடகத்தே என்றென்றும் நிலைத்திருக்கும் உணர்வு. தமிழே அவருக்கு மூச்சு, உணர்வு, வாழ்வு, இன்பம் அனைத்தும். தமிழே அவர்; தமிழே அவருக்கு உலகம், வழிகள், எல்லாம். தமிழ் இன்றேல் அவர் இல்லை; தமிழ் இல்லாத வாழ்வை அவரால் நினைத்துப் பார்க்கவும் முடியாது.

‘மொழியின்றேல் நாம் யார்?’ என்னும் கவிதையில் அவர் மொழியின் அருமைப்பாட்டினையும் இன்றியமையாமையினையும் அழகுற வெளிப்படுத்துகின்றார்:

“விழி இல்லாத வாழ்வும்
வெற்றி பெறுதல் கூடும்;
வழி இல்லாத ஊர்க்கும்
வரப்பைக் கடந்து சேர்வோம்;
எழில் இல்லாத பெண்ணும்
எவர்க்கோ மனையாய்க் கூடும்;
மொழி இல்லாத வாழ்வை
நினைக்க முடியா தன்றோ?”

எனப் பாவேந்தர் தொடுக்கும் வினா அடிப்படையானது; ஆழமானது.

புலவர் ஆ.பழநி கூறுவது



முனைவர் இரா.மோகன்



ஆயின், பாரதிதாசனோ 'தமிழரின் மேன்மையை இகழ்ந்தவனை என் தாய் தடுத்தாலும் விடேன்!' என முழங்குகிறார். இங் ஙனம் மனித உறவுகளுக்கு அப்பாற்பட்ட – அறிவு வடிவமான – ஓர் அடிப் படையான, ஆழமான உறவைத் தமிழோடு கொண்டுள்ளார் பாரதி தாசன்.

போல், "பாரதிதாசனோ தமிழை ஒரு மொழி என்ற அளவிலே நோக்குவ தில்லை. தமிழனின் மானமாக – உயிராக – செல்வமாக – ஏன் அனைத் துமாகத் தமிழ் விளங்குவதாக எண்ணு கின்றார்.

"பயிலுறும் அண்ணன் தம்பி – அக்கம்
பக்கத்து உறவின் முறையார்,
தயைமிக உடையாள் அன்னை – என்னைச்
சந்ததம் மறவாத் தந்தை,
குயில் போல் பேசிடும் மனையாள் – அன்பைக்
கொட்டி வளர்க்கும் பிள்ளை,
அயலவ ராகும் வண்ணம் – தமிழ் என்
அறிவினில் உறைதல் கண்டீர்!"

'தமிழை என்னுயிர் என்பேன் கண்டீர்' என்றும், 'தமிழும் நானும் மெய்யாய் உடல் – உயிர் கண்டீர்' என்றும், 'உயிரை, உணர்வை வளர்ப் பது தமிழே' என்றும் பாவேந்தர் தமிழுக்கும் தமக்கும் உள்ள தனியுற வினைக் குறித்துப் பாடியுள்ளார்.

மங்கை தரும் சுகத்திற்காக எதை யும் செய்வோர் – ஏன் மணி முடியையே துறந்தோர் – இந்த உலகில் உண்டு; ஆயின், பாரதிதாசனோ 'மங்கை ஒருத்தி தரும் சுகமும் – எங் கள் மாத்தமிழுக்கு ஈடில்லை!' என்று பறைசாற்றுகிறார். 'தாய் சொல்லைத் தட்டாதே' என்பது பழமொழி;

**'தமிழ் எங்கள் உயிருக்கு நேர்!'** : மொழி வாழ்த்து என்னும் பாடுபொருள் மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளையிடம் அரும்பாக இருந்தது; பாரதியாரிடம் போதாக விரிந்தது; பாரதிதாசனிடம் மலராக மலர்ந்தது. 'தமிழே நீ என்றன் ஆவி'; 'நல்லுயிர், உடம்பு, செந்தமிழ் மூன்றும் நான் நான் நான்': 'கன்னற் பொருள் தரும் தமிழே நீ ஓர் பூக்காடு; நானோர் தும்பி'; 'செந்தமிழே! உயிரே! நறுந் தேனே! செயலினை, மூச்சினை உனக்கு அளித்தேனே!'

'தமிழுக்கும் அமுதென்று பேர் – அந்தத் தமிழ், இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்!'; 'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும், மங்காத தமிழ் என்று சங்கே முழங்கு 'என்றாற் போல் பாவேந்தர் தமிழினைக் குறித்துப் பாடியிருக்கும் வரிகள் இவ்வகையில் மனங்கொளத்தக்கவை; பொன் னெழுத்துகளால் பொறிக்கத் தக்கவை.

**'தமிழ் படித் தேன்; அதை உண்ணப் படித்தேன்'** : பாரதிதாசன் படைத்துள்ள மாந்தர் – இளையவ ராயினும் சரி, முதியவராயினும் சரி, ஆடவராயினும் சரி, மகளிராயினும் சரி – ஏழையராயினும் சரி, செல்வரா யினும சரி தமிழைத் தம் உயிருக்கு நிகராக மதிக்கிறார்கள்; தம் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அன் னைத் தமிழ் மொழிக்கே தர

விரும்புகிறார்கள்; தமிழைப் பயில் வதில் – தமிழுக்குத் தொண்டு செய் வதில் – தனியின்பம் காண்கிறார்கள்.

'இளைஞர் இலக்கியத்தில் ஒரு பாடல். 'தமிழ் தான் நீயா?' என்பது பாடலின் தலைப்பு. கவிஞருக்கும் தமிழ்ச் சிறுமி ஒருத்திக்கும் இடையே நடைபெறும் உரையாடல் வடிவில் அப்பாடல் அமைந்துள்ளது.

'தமிழ்ப் பெண்ணே தமிழ்ப் பெண்ணே, தமிழ் படித்தாயா?' என்று கேட்கிறார் கவிஞர்.

'தமிழ் படித்தேன் தமிழ் படித்தேன், தமிழ்ப் பெண் நானே' என்கிறாள் சிறுமி. 'தமிழ்ப் பெண்ணே தமிழ்ப் பெண்ணே, தமிழை ஏன் படித்தாய்?' என்று சிறுமியிடம் கேட்கிறார் கவிஞர்.

'தமிழ் படித் தேன் (தமிழானது ஒரு படி அளவுள்ள தேன் போல் இனிப் பது), அதை உண்ணத் தான் தமிழ் படித்தேன் நான்' என்று விடை கூறு கிறாள் சிறுமி.

தொடர்ந்து கவிஞர், 'அமிழ்தைத் தந்தால் தமிழைத் தள்ளி அதை நீ உண்பாயா?' என்று கேட்கிறார். சிறுமியோ சிறிதும் தயங்காமல், 'அமிழ்தும் தமிழுக்கு அதிக இனிப்பா? அதுவா எனை வளர்க்கும்?' எனப் பதில் அளிக்கிறாள்.

அடுத்து, பாவேந்தரின் காதல் கவிதை ஒன்றில் வரும் இளம்பெண் ஒருத்தியின் தமிழுணர்வினைக் காண லாம். அவள் தனக்கு மணமகனாக வரவிருக்கும் ஆடவன் பத்திலக்கம் உள்ளவன் (நூறாயிரம் உடையவன்) – ஆனால் தமிழ்ப் பாட்டுப் படியாத வன் என்று கேள்விப்பட்டதும், வீட்டுப் படியேற வேண்டாம் என்று விரட்டியடிக்கிறாள்.

எளிய நிலையில் இருக்கும் பிறி தோர் இளைஞன், 'வள்ளுவன் படித் தேன்' என்றதும், 'நீ வழங்கிடு! நான் கொள்ளுவன் படித் தேன்!' என்று விரைந்து கூறி, அவனது காதலை மன மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்கிறாள்.

'குடும்ப விளக்'கின் ஐந்தாம் பகுதி முதியோர் காதல். அதில் இடம் பெறும் மணவழகருக்கு ஆண்டு நூற்று ஐந்து; தங்கம் அம்மையாருக்கு ஆண்டு நூறு. இருவரும் முதுமை உற்றவர்கள்; மக்களைப் பெற்றவர்கள்; பேரர் பேர்த்திமார் கண்டவர்கள். தள்ளாத முதுமைப் பருவத்திலும் அவர்கள் குறட்பாவில் இரண்டு செய்யுளைப் படிக்கிறார்கள்; அவற் றினுக்கு விரிவுரை பலவும் ஆய்ந்து முடிக்கிறார்கள். நரை, திரை, மூப்பு உற்று, ஆடிய பம்பரங்கள் ஆன நிலை யிலும் மணவழகர் தமிழ் இலக்கியம் படிக்கத் தவறவில்லை; தங்கம் அம் மையார் தம் துணைவர் படிப்பதைக் கேட்கத் தவறவில்லை.

'புரட்சிக் கவி' யில் வரும் கவி ஞன் உதாரனுக் குத் தன் ஆரு யிர்க் காதலியை இழப்பது பெரி தாகப் பட வில்லை; தன் உயிர் போவ தைப் பற்றிக் கூட அவன் கவலைப்ப ட வி ல்



லை. 'தமிழறிந்த தால் வேந்தன் எனை அழைத்தான், தமிழ்க் கவி என்று எனை அவளும் காதலித்தாள், அமுதென்று சொல்லும் இந்தத் தமிழ் என் ஆவி, அழிவதற்குக் காரணமாக இருந்ததென்று, சமுதாயம் நினைத்திடுமோ? ஐயகோ! என் தாய்மொழிக்குப் பழி வந்தால் சகிப்பதுண்டோ?' என்பதே அவன் ஆழ்மனத்தை அலைக்கழிக்கும் பெருங்கவலையாக உள்ளது.

**'தமிழியக்கம்'** : ஆழ்வார்களும் நாயன்மார்களும் தலந்தோறும் பண் சுமந்த பாடல்களைப் பாடிப் பக்தி இயக்கம் கண்டனர்; பாரதிதாசனோ இந்நாள் துறைதோறும் துடித்தெழுந்து தமிழுக்குத் தொண்டு செய்து 'தமிழியக்கம்' கண்டார்.

தமிழ்நாட்டில் நம் தமிழ் பல துறைகளிலும் தாழ்மைப்படுத்தப்பட்டிருப்பது கண்டு மனம் வருந்திய பாவேந்தர், இமைப்பொழுதும் ஓயாது தமிழுக்கு உழைக்க வேண்டும் என்று உறுதி பூண்டார்; தமிழுக்குத் துறைதோறும் துறைதோறும் செயல் செய்ய வேண்டும் – அழகு சேர்க்க வேண்டும் – என்று இளந்தமிழனுக்கு அறிவுறுத்தினார்; இதுதான் செயத்தக்க எப்பணிக்கும் முதற்பணியாம் எனவும் வலியுறுத்தினார்.

1. தமிழகத்தின் தமிழ்த் தெருவில் இன்று தமிழ்தான் இல்லை. இக்குறை நீங்க அறிவிப்புப் பலகை, விளம்பரப் பலகை இவையெல்லாம் அருந்தமிழ்ச் சொல்லால் ஆக்கப்பெறல் வேண்டும். கலைச்சொல்லாக்கங்கள் அழகிய தமிழ் மொழியில் உருவாக்கப் பெறல் வேண்டும்.

2. அரசியலார் அலுவலகம், அற மன்றம், இசையரங்கு ஆகியவற்றில் இன்று தமிழுக்கு முதன்மை இல்லை. இந்நிலை நீங்கி அரசினரின் மொழியாக – அரசியல் மொழியாக – அரசியல்சார் வரிசையுறு சட்டமன்றின் மொழியாக – வையம் அறிமொழியாகத் தமிழ் மொழி ஆக வேண்டும்.

3. தமிழரின் தமிழ்க் குழந்தை தமிழ்ப் பெயர் பெறுதல் வேண்டும். கோயிலில் – வழிபாட்டில் – தமிழிசை வழங்க வேண்டும். திருமண விழாக்களில் தமிழ் முழங்க வேண்டும். கல்லூரிகளில் தமிழ் வழிக் கல்வி தழைக்க வேண்டும். பாட்டு, கூத்து, இசை, திரைப் படம் முதலான கலைகளில் தமிழ் சிறப்பிடம் பெற வேண்டும்.

4. தமிழ் இலக்கணமும் இலக்கியமும் தெரிந்தோரே ஏடு (இதழ்) நடத்துதல் வேண்டும்; ஏட்டில் எழுதுதல் வேண்டும். பத்திரிகைத் தமிழ் பிழைத் தமிழாக இல்லாமல், படிதமிழாக இருக்க வேண்டும்.

5. தமிழ் உயர்ந்தால் தமிழ்நாடு தானுயரும்; அறிவுயரும்; அறமும் ஓங்கும். இமயமலை போல் உயர்ந்த ஒரு நாடும் தன் மொழியில் தாழ்ந்தால் வீழும்; எனவே மொழி வாழ்வில் – வளர்ச்சியில் – தமிழர் கண்ணும் கருத்துமாய் இருத்தல் வேண்டும்.

'தமிழியக்கம்' வெளிவந்து எத்தனையோ ஆண்டுகள் உருண்டோடியும், இன்னும் அந்நூலில் கவிஞர் வெளியிட்டிருக்கும் அரும்பெருங்கருத்துக்கள் நடைமுறைக்கு வராமல் இருப்பது – நடைமுறைப்படுத்தப்படாமல் இருப்பது வேதனைக்கு உரிய பேரவலமாகும்.

"எங்கள் தமிழ் உயர்வென்று நாம் சொல்லிச்
சொல்லித்
தலைமுறைகள் பலகழித்தோம்;
குறைகளைந்தோம் இல்லை.
தகத்தகாயத் தமிழைத் தாபிப்போம் வாரீர்!"

என்னும் பாவேந்தரின் சீரிய அழைப்பை ஏற்று, செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வோம்; தகத்தகாயத் தமிழை நிலைநிறுத்துவோம்! ●

# நடந்தாய் வாழி காவிரி

'முத்தமிழருவி' மாரிமுத்து



நல்ல
தமிழ்நாட்டுக்கு
நடந்தே வந்த
குடகுமலைக் குமரியே!

மௌனமாக வந்து
தமிழ்நாட்டைக் கண்டு
மகிழ்ச்சியில்
தாவிக் குதித்த
மருமகளே!

பெண்ணுக்குச் சீதனமாக
இரு கரைகளைச் சீராக்கி
நடுவிலே வந்த
நாயகியே!

கூழாங் கற்களைச்
சலங்கைகளாக்கிக்
கால் கொடுத்த
காவிரியே!

கல்லணையைக்
கை வளையல்களாக்கி
வளைகாப்பு விழாக்கண்ட
தமிழ்ப் பாவையே!

பெண்ணுக்குப்
பிறந்தகத்தை விடப்
புகுந்த இடமே
பெருமை என்று
பேசிய முன்னோடியே!

சோழநாடு சோறுடைத்து
எனும் பேர் கொடுத்த
பொன்னியே!

ஓரவஞ்சனை அணைக்குள்
உன் ஈரம்
பொங்கிக் கொதிக்கட்டும்!

தலைக்காவிரியே
தடைதாண்டு
தமிழகம் செழிக்கட்டும்
உன்நடை பூண்டு...



கட்டுரை



அரங்க நாடகக் குழுவினருடன் கட்டுரையாசிரியர்

# எனது பார்வையில் இன்றைய ‘யாழ்ப்பாணம்’

பயணம் புதிய பரிணாமத்தைத் தரக் கூடியது. புதிய சூழல், புதிய மனிதர்கள், புதிய அனுபவம் இப்படிப் பல புதுமைகளக் கற்றுத் தருகிறது பயணம்.



‘இனிய நந்தவனம்’ ஆசிரியர்
**சந்திரசேகரன்**

கடந்த சில வருடங்களாக ஈழம் நோக்கி வருடத்திற்கு இரண்டு மூன்று முறை பயணித்து வருகிறேன். இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று நான் பிறந்த மண் மீதான பாசம். இன்னொன்று, என் தமிழ் உறவுகளுட னான நெருக்கத்தை மேம் படுத்திக் கொள்ள வேண்டும்.

இலங்கை முழுவதும் நான் சுற்றி வந்தாலும், யாழ்ப்பாணம் மட்டுமே



என் கவனத்தை ஈர்த்து விடுகிறது. அது எங்கள் மண் என்ற உயிர்ப்பும், நேசமும் கலந்திருப்பதே இதற்குக் காரணம். சைவமும், தமிழும், தமிழ்க் கலாச்சாரமும் தழைத்தோங்கியிருந்த யாழ் மண்ணின் இன்றைய நிலை என்ன? என்ற கேள்வியுடனேயே எனது ஒவ்வொரு பயணமும் தொடர் கிறது.

போர் முடிந்து ஒன்பதாண்டுக் காலம் கடந்துவிட்டது என்று சொல்லப்பட்டாலும், மக்கள் மனதில் எங்கள் மண் என்ற ஈரம் இன்னும் காயவில்லை என்பதை மறுக்க முடிய வில்லை என்றே சொல்ல வேண்டும். சரி, மக்கள் மகிழ்ச்சியாக இருக் கிறார்களா? என்றால் முற்றிலும் வெளியேற்றப்படாத சோகம் உள் மறைந்து கிடக்கிறது என்பதையும் மறுக்க முடியவில்லை.

யாழ்ப்பாண வீதிகளில் சுதந்திர மாகப் பயணிக்கலாம் என்ற மாயத் தோற்றம் இருந்தாலும், கண்காணிப்பு வளையத்திற்குள்ளாகவே இருக் கிறோம் என்ற மனநிலையிலேயே மக்கள் பயணிக்கிறார்கள். சிதைந்து போன வாழ்க்கைச் சூழலிலிருந்து மாற்றம் வந்திருக்கிறதா? என்றால் முழுமை பெறவில்லை என்ற சூழலும் நிலவுகிறது. ஆனால் மெல்ல மாற்றம் வருகிறது என்பதை உறுதியாகச் சொல்லலாம்.

வெளிநாடுகளுக்குப் புலம் பெயர்ந்து சென்றவர்கள் மீண்டும் வந்து தங்கள் காணிகளை மீட் டெடுத்துத் தங்களின் பொருளாதாரத் திற்குத் தகுந்தவாறு வீடுகளைப் புனரமைத்து வருகின்றனர். தாங்கள் வழிபட்ட கோயில்களையும் புதுப்பிக் கும் பணிகளில் ஈடுபடுகின்றனர். தங்கள் குழந்தைகளையும் அழைத்து வந்து – இது நமது தமிழ்மண் என்ற புரிதலையும், பற்றையும் உருவாக்கி வருகின்றனர்.

நலிவுற்றவர்களைக் கண்டடைந்து அவர்களின் வாழ்வாதாரம் மேம்படு வதற்கான உதவிகள் – கல்வி, மருத் துவ உதவிகளும் செய்து வருகின்றனர். இப்படியான உதவிகள் வழங்கப் பட்டாலும் போர் பயத்தின் சுவடுகள் மாறாது, பயங்கலந்த சூழல் அனேக மானவர்களில் நிரம்பியுள்ளதையும் காண முடிகிறது.

இதிலிருந்து மீட்டெடுக்க வேண் டும் என்பதற்காக இளைய தலைமுறை யினர் ஒன்றுகூடிக் கலை, இலக்கிய நிகழ்வுகள் மூலம் விழிப்புணர்வை ஏற் படுத்த முயற்சி செய்து வருகிறார்கள்.

யாழ்ப் பல்கலைக் கழக நுண் கலைத் துறையின் முன்னாள் துறைத் தலைவரும் சிரேஷ்ட நாடக விரிவுரை யாளருமான க. சிதம்பரநாதன் தலை மையில் சமூக மாற்றத்திற்கான அரங்க நாடகங்கள் நிகழ்த்தப்பட்டு வரு கின்றன. இவரோடு இணைந்து ஓர் இளைஞர் பட்டாளமே ஈடுபாட் டுடன் இயங்கி வருகிறது.

விழிப்புணர்வு நாடகங்கள் மூலம் மக்கள் மனத்தில் ஒரு மாற்றத்தைக் கொண்டுவர வேண்டும் என்று செயல் படும் இவர்களின் முயற்சி யைப் பாராட்ட வேண்டும்.

இதேபோல ஆடல், பாடல், கலை நிகழ்ச்சிகளில் மிகத் தீவிரமாக ஈடுபட்டுத் தங்களை மகிழ்ச்சிப்படுத்திக்



கொள்ளும் இளைய தலைமுறையின ரையும் காண முடிகிறது. இதுபோன்ற நிகழ்வுகள் மூலம் கடந்த காலச் சோகங்கள் மறக்கடிக்கப்படுகின்றன என்பதான சூழலையும் பார்க்க முடிகிறது.

ஊடகங்கள் மீதான கட்டுப்பாடு கள் தளர்த்தப்பட்டுக் கொஞ்சம் சுதந் திரமாகவும், அரசின் தவறுகளைச் சுட்டிக்காட்டவும், மக்கள் பிரச்சனை களை முழுமையாக வெளிக் கொண ரவும், தீர்வு தேடிக் கேள்வி எழுப்பவும் தைரியத்துடன் எழுதவும் என்ற நியாயத்தை – குரலை ஓங்கி ஒலிக்கச் செய்யும் சூழல் மாறியிருக்கிறது.

யாழ்ப்பாணத்தில் இன்றுவரையில் பொக்கிசமாகப் பாதுகாக்கப்பட்டு வருவது இறைபக்தி. இன்றும் தங் களின் வழிபாடுகளிலிருந்து விலகி விடாத பக்தி மார்க்கத்தைப் பேணிக் காப்பாற்றி வருவது பெருமைப்படக் கூடியது என்றாலும், இன்றைய தலை முறையினரிடம் இதில் தீவிரம் இருப் பதாகத் தெரியவில்லை.

நவீன மாற்றங்கள் அவர்களைச் சிறைப்பிடித்து வைத்துள்ளன என்ப தையும் காணமுடிகிறது. புலம் பெயர்ந்தோரின் வருகை அதிகரித் திருப்பதால், பணப்புழக்கம் அதிகரித் திருக்கிறது என்பது ஒரு பக்கம் இருந் தாலும் வறுமையின் பிடியில் சிக்கித் தவிக்கும் மக்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

கல்வி கற்றலுக்கான சூழலும், வேலைவாய்ப்பும் மேம்பட்டிருக் கின்றன. பல வெளிநாட்டு அமைப் புகள் மூலம் கல்வி உதவிகள் கிடைத்து வருகின்றன. எப்போதும் போலக் கல்வியின் மீதான பிடிப்பு இன்னும் குறையாமல் இருக்கிறது என்பதையும் பார்க்க முடிகிறது.

“இனிப் போர் எங்களுக்குத் தேவையில்லை, நாங்கள் நிம்மதியாக வாழ வேண்டும், அந்த சோகமான காலங்களை மறக்க நினைக்கிறோம்” இப்படியான மனநிலையில் சிலர்.

“தலைவர் இருந்த வரையில் நாங் கள் மகிழ்ச்சியாக இருந்தோம். அவர் எங்களுக்கு நிறைய உதவிகள் செய் திருக்கிறார். அவர் இல்லாமல் ஒரு வேளை சாப்பாட்டுக்கே வழியில் லாமல் சிரமப்படுகிறோம், நாங்கள் அனாதைகளாகி விட்டோம்” இப்படி யான மன நிலையில் பலர்.

இரண்டு விதமான மனநிலையில் உள்ள மக்களையும் இன்று யாழ்ப் பாணத்தில் காண முடிகிறது. போரின் சிதைவினால் ஆண்கள் குறைவாகவும் பெண்கள் கூடுதலாகவும் இருக்கும் சூழலும் நிலவுகிறது.

தமிழர்கள் தம் வாழ்வில் பெரும் சிதைவுகளைச் சந்தித்து, மெல்ல மெல்ல அதிலிருந்து மீண்டு வரும் நிலையில், யாழ்ப்பாணம் நவீனத்தில் பயணிக்கத் தயாராகி வருகிறது என்பதையும் மறுக்க வியலவில்லை.

அதே நேரத்தில், பண்பாடு, கலாச் சாரம், விழுமியங்களை விட்டுவிடா மல் நவீனமாக்கலை ஏற்க வேண்டும் என்ற கட்டாயமும் இருக்கிறது. களவு, கொள்ளை, பாலியல் சேட்டைகள், வன்முறைகள் இவை இல்லையா? என்ற கேள்வியும் எழுகிறது என்பது புரிகிறது. அங்கொன்றும், இங்கொன்றுமாக இவை நடக்கத்தான் செய்கின்றன. ஆனால் மக்கள் அச்சப் படக் கூடிய நிலையில் எதுவும் நடக்க வில்லை என்பதை உறுதியாகச் சொல்லலாம்.

இங்கே நான் சொல்லப்படாத விடயங்கள் நிறைய விடுபட்டிருக்க லாம். ஆனால் நான் கண்ட விடயங் களையும், எனது பார்வையில் இன்றைய யாழ்ப்பாணம் என்பதான நோக்கிலேயே எனது கருத்தைப் பதி விட்டிருக்கிறேன். சொல்லப்பட வேண்டிய விடயங்கள் இன்னும் நிறைய இருக்கின்றன என்பதையும் ஒத்துக்கொண்டு நிறைவு செய்கிறேன். ●

கட்டுரை

யின் பெருமை, பழமை, வலிமை, அழகு, மேதைமை முதலிய பண்புகளைக் கிளர்ந்தெழச் செய்ததில் பாரதிதாசனுக்கு இணை சொல்ல எவருமில்லை. தமிழியக்கம் அவர் படைப்பு மட்டுமல்ல, அவருடைய மறுபெயர் என்று தயக்கமின்றிக் கூறலாம்.

பாரதிதாசன்

# பாரதிதாசன் கவிதைப் பெருவெளி

23

### அகமும் முகமும் – 1

**சு**ப்பிரமணிய பாரதியாருக்குப் பிறகு புதிய தமிழ்க் கவிதையில் ஏற்பட்ட வெறுமையைத் தம் புலமை, ஆளுமை ஆகியவற்றால் மறக்கும்படி செய்ததுடன், முன்னோடிக் கவிஞர் தொட்டவற்றைத் துலக்கியும், தொடாதவற்றைச் செழுமையுடன் வளமுறத் தொடங்கியும் வைத்தவர் பாரதிதாசன். அவற்றையே அவருடைய தனித்தன்மைகள் என்று கருதலாம்.

அவற்றுள் முதன்மையாகச் சொல்லத் தகுந்தது தமிழ் அடையாளங்களை மீட்டெடுத்துத் தமிழ் மனங்களில் புத்தெழுச்சியை ஊட்டிய பணியே ஆகும்.

‘தமிழ் முழுதறிந்த தகைமை’ பற்றிச் சிலப்பதிகாரமும், ‘என்றுமுள தென்றமிழ்’ குறித்துக் கம்பனும், ‘பண்ணுறத் தெரிந்தாய்ந்த பசுந்தமிழ்’ எனத் திருவிளையாடல் புராணமும், ‘இருந்தமிழே உன்னால் இருந்தேன்’ என்று தமிழ்விடு தூதும், தமிழின் ‘சீரிளமைத் திறம்’ வியந்து சுந்தரனாரும் பேசியிருக்கிறார்கள் என்றாலும் வளங்களைத் தமிழுக்குக் குவிக்க வாருங்கள் என்று அழைப்பு விடுத்தவர் பாரதியார்தான்.

ஆனால் தமிழ் மொழியை நேசிக்கவும், உயிரென்று கொண்டாடவும், தாய்மையின் திருவுருவாய்ப் போற்றவும், அதன்



தமிழ் மொழி

**சிற்பி பாலசுப்பிரமணியம்**

வளர்ச்சிதான் தமிழர் வளர்ச்சியென்று அறிவுறுத்தவும், மொழிக்காக உயிரையே கொடுக்கும் உணர்வை உண்டுபண்ணவும், அதன் பழமையில் திளைக்கவும், புதுமையில் அதனை மாட்சிமையுறுத்தவும் தமிழருக்குக் கற்றுக் கொடுத்து, கை பிடித்தழைத்து உணர்ச்சிப் பிழம்பாக அவர்களை மாற்றியவர் பாரதிதாசன் என்னும் தமிழ்க்கடல்.

தமிழ் மொழியைக் குறித்து மட்டும் நூற்றுக்கணக்கான பாடல்கள் தந்தவர் பாரதிதாசன்.

தமிழின் பழமை குறித்த பெருமிதங்களைப் பல பாடல்களில் வெளிப்படுத்தியிருக்கிறார் கவிஞர். 'தமிழே ஞாலத்தின் தாய் மொழி பண்டு' என்பது அவர் கருத்து. அழகின் சிரிப்பு நூலில், தமிழே ஆதி மொழி என்ற கருத்தை முன்வைக்கிறார்.

"புனல் சூழ்ந்து வடிந்து
போன
நிலத்திலே 'புதிய நாளை'
மனிதப் பைங்கூழ் முளைத்தே
வகுத்தது மனித வாழ்வை
இனிய நற் றமிழே நீதான்
எழுப்பினை"

என்பது பாரதிதாசனின் நம்பிக்கை.

"முந்திய நாளினில் அறியும் போது
மொய்த்தநல் மனிதராம் புதுப்புனல் மீது
செந்தா மரைக்காடு பூத்தது போலே
செழித்த என் தமிழே உயிரே வாழி"

என்பது மற்றொரு பாடலில் பாரதிதாசனின் பிரகடனம். இந்த உணர்ச்சிக்கூறு சிந்தை அணு ஒவ்வொன்றிலும் பெருக்கெடுத்து ஓடச் செய்தது பாரதிதாசன் கவிதை.

தமிழைவிட இனியது எதுவுமில்லை என்பது மற்றொரு உணர்ச்சி அலையாகக் கவிஞரிடம் பொங்கி எழுந்தது.

"தனிமைச் சுவையுள்ள சொல்லை – எங்கள்
தமிழிலும் வேறெங்கும் யானும் கண்டதில்லை"

என்பது அவர் உறுதியான அறிவிப்பு. இதனால் 'கனியிடை ஏறிய சுளையும்' என்ற பாடலில் தேனும் பாலும் நீரும் பழச்சாறும் தோற்கத் தமிழ் உயிரின் சுவையாகிறது. வண்டின் ஒலி, குழலோசை, வீணை இசை, மகவின் மழலை இவற்றை வென்று தமிழ் உயிரின் ஒலியாகிறது. அண்ணன், தம்பி, அன்னை, தந்தை, மனைவி, பிள்ளை என்ற உறவுகளைக் கடந்து தமிழ் உறவும் அறிவுமாகிறது. நீலவானம், நிலவு, பரிதி, அந்தி வானம், மலைகளின் அழகு ஆகியவற்றைவிடத் தமிழ் வியப்பாகிறது. சோறு, நெய், கறிவகை, தானிய உணவுகள், கட்டித் தயிர், மிளகின் சாறு, அப்பம், கிழங்கு ஆகிய உணவுகளை விடத் தமிழே உணர்வை வளர்க்கிறது. இப்படி வாழ்வின் அத்தனை இனிமைகளையும் வெல்கிறது தமிழ் என்கிறார் பாரதிதாசன்.

கம்பன்

இதனால் பிற மொழிகள் வேம்பு என்று சொல்லும் அளவுக்குத் தமிழ்ப் பற்றை உயிர்ப் பற்றாகப் பாரதிதாசன் உருவகித்து மகிழ்கிறார்.

தமிழின் பழமையும், இனிமையும் பாரதிதாசனைப் பண்டைய வாழ்வை வியந்து பாட வைக்கின்றன.

"பண்டு தமிழ்ச் சங்கத்தை
உண்டு பண்ணிய மன்னன்
சீரெல்லாம்
விண்டு புகழ்ந்து பாடி
இன்னும் வியக்கின்றார்
இப் பாரெல்லாம்"

என்று தமிழ் வேந்தர் ஆண்ட காலங்களைப் பொற்காலமாகக் கற்பித்துப் பூரிக்கிறது பாரதிதாசனின் தமிழ் உள்ளம். இது மீண்டும் பழமையை நோக்கும் மீள் பயணமாகத் தோன்றுகிறதென்றாலும் புதுமையை நோக்கி உந்தியெழும் அடித்தளமாகப் பழம் பெருமை பயன்படுகிறது.


பாரதியார்

இத்தகைய பழஞ் சிறப்புகள் கொண்ட தமிழும் தமிழனும் இன்று படுகிற அவலங்களால் பாரதிதாசனின் பாடல்கள் தீப்பற்றி எரிகின்றன.

"பண்டிருந்த தமிழர் மேன்மை
பழுதாக முழுதுமே
கண்டிருந்தும் குகையிற் புலிபோல்
கண்ணுறக்கம் ஏனோ?"

என்று கொந்தளிக்கிறார். அதன் விளைவாகவே ஆத்திரம் விம்மியெழ ஆர்ப்பரித்து எழுமாறு கட்டளையிடுகிறார்.

"கொலை வாளினை எடடா மிகு
கொடியோர் செயல் அறவே
குகை வாழ் ஒரு புலியே உயர்
குண மேவிய தமிழா..."

என்ற தார்மீகச் சினம் அனைத்தின் மீதும் பொங்கி எழுகின்றது. தமிழை வாழ்விக்கும் போராட்டத்தில் உயிரை விடுவது என்ற அளவுக்கு உணர்ச்சிப் பிழம்பாகிறார் கவிஞர்.


சுந்தரனார்

"வெங்குருதி தனில் கமழ்ந்து
வீரம் செய்கின்ற தமிழ் எங்கள்
மூச்சாம்"

என்றும்,

"தமக்கொரு தீமை என்று நற்றமிழர்
எமை யழைத்திடில் தாவி
இமைப்பினில் ஓடித் தரக்கட
– வேன் நான்
இனிதாம் என் ஆவி"

என்றும் முழங்குகிறார் பாரதிதாசன்.

ஆயினும் தமிழ்ப் பற்று வெறும் உணர்ச்சிப் பிரளயமாய் மட்டும் ஓய்ந்து போய்விடவில்லை. தமிழ் வளர்ச்சிக்கும் பலப்பல திட்டங்களைக் கவிஞர் முன் வைக்கிறார்.

தமிழ் நூல்கள் உலகின் ஆயிரம் மொழிகளில் மொழி பெயர்க்கப்பட வேண்டும். ஓவியம், கணிதம், சிற்பம், விஞ்ஞானம் என அறிவு நூல்களால் புத்தகச் சாலைகள் புதுக்கப்பட வேண்டும்.

"என்னருந் தமிழ் நாட்டின் கண்
எல்லாரும் கல்வி கற்றுப்
பன்னரும் கலை ஞானத்தால்
பராக்கிரமத் தால் அன்பால்"

உன்னத இம் மலைபோல் ஓங்கிடும் கீர்த்தி எய்த வேண்டும். பார்த் தொழில்கள் பலவற்றிலும் போர்த் தொழிலிலும் தமிழர் வல்லவராக வேண்டும் என்றும், அவரிடை ஒற்றுமை பெருகி 'உள்ளத்தால் ஒருவர்' என்ற நிலை உருவாக வேண்டும் என்றும் கனவுகள் காண்கிறார் பாரதிதாசன்.

"விண்ணிடை இரதம் ஊர்ந்து
மேதினி கலக்குதற்கும்
பண்ணிடைத் தமிழைச் சேர்த்துப்
பாரினை மயக்குதற்கும்
மண்ணிடை வாளை ஏந்திப்
பகைப்புலம் மாய்ப்பதற்கும்
எண்ணிலாத் தமிழர் உள்ளார்
எனும் நிலை காண்ப தென்றோ?"

உணர்ச்சி வெள்ளத்தை இவ்வாறு ஒழுங்குபடுத்த முற்படுகிறார் கவிஞர். வெறும் உணர்ச்சி போதாது. அதே சமயம் உணர்ச்சி இல்லாத மரக்கட்டைகளால் எதனையும் சாதிக்கவும் முடியாது.

தமிழ் மொழியையும் தமிழ் இனத்தையும் உலகளாவிய பெருமைகளுக்குக் கொண்டு சேர்க்க விழைந்த பாரதிதாசன் அதன் தாழ் நிலையை உயர்த்த வழங்கிய திட்டங்களின் தொகுப்பே 'தமிழியக்கம்'. மிகச் சிறிய நூலென்றாலும் பாரதிதாசனின் மொழி சார்ந்த உள்ளக் கிடக்கைகளைச் சித்தரிக்கும் ஓவியக்கூடம் அது.

இன்றுவரை தமிழ்மொழி தன் அடையாளங்களையும் முத்திரைகளையும் பதிக்க விடாமல் காலமும் சூழலும் எதிராகவே இயங்கி வருகின்றன. ஆலயங்களில், ஆவணங்களில், ஆட்சியில், இசையில், கல்வி நிலையங்களில் புறக்கணிக்கப்பட்டுப் புறந்தள்ளப்பட்ட அகதியாகவே தமிழ் அல்லலுறுகிறது. தமிழுணர்வு அற்றோரிடம் கல்லூரிகள், பள்ளிகள், நிர்வாகங்கள் அகப்பட்டுக் கொண்டதன் விளைவை அனுபவிக்கிறோம். பிறமொழித் திணிப்பென்னும் கல்லறைக்குள் குற்றுயிரும் குலையுயிருமாகத் தமிழ் தள்ளப்படும் கொடுமை நீடிக்கிறது. இந்நிலையில், பாரதிதாசனின் தமிழியக்கம் அரசியல் சாராத அறிவியக்கமாக முன்னிற்கிறது.

இருபத்து நான்கு இயல்களில் 120 கவிதைகள் ஆதங்கமும் அறிவுரையுமாக, கோபமும் கொந்தளிப்புமாகத் 'தமிழியக்கம்' நூலில் வெளிப்படுகின்றன. ஆயினும் கவித்துவம் கொஞ்சுகின்றது. தமிழின் இருப்பை அழிப்பதால் ஏற்படும் வேதனையை 'நெஞ்சு பதைக்கும் சொல்ல வாய் பதைக்கும்' என்று வெளிப்படுத்தித் தொடங்குகிறது 'தமிழியக்கம்'.

தமிழுக்கு வாழ்வளிக்காத வணிகர், அரசியலார், அறநிலையத்தார், ஆலயத்தார், ஆசிரியர், இசைக் கலைஞர், அச்சகத்தார் எனப் பலரையும் அழைத்துத் தமிழை வாழ்விக்காத

"தமிழர் உயிர் வாழ்வதினும்
இறத்தல் நன்றே"

என்று எச்சரிக்கிறார்.

இளைஞர்களை அறைகூவி அவர்களுக்குத் தமிழ்ப்பற்றை உணர்த்துவதை அடுத்தபடியாக மேற்கொள்கிறார்.

"எது செய்ய நாட்டுக்கே
எனத் துடித்த சிங்கமே
இன்றே, இன்னே
புது நாளை உண்டாக்கித்
தமிழ் காப்பாய் புத்துணர்வைக்
கொணர்வாய் இங்கே"

என்று தமிழ்த் தொண்டாற்ற அழைக்கிறார். தொடர்ந்து மகளிரையும் முதியோரையும் இப்பணியில் முந்துமாறு வேண்டுகின்றார்.

வாணிகர்கள் 'அறிவிப்புப் பலகை எல்லாம் அருந்தமிழ்ச் சொல் ஆக்க' முன்வரும்படி அழைக்கிறார். ஆசிரியர்கள் தமிழ்ப் பற்றின்றி இருப்பது கண்டு, 'தமிழ் நாட்டின் உப்பைத் தின்றீரன்றோ கணக்காயர் தந்தைமாரே' என்று சினம் பூணுகின்றார். 'தமிழாய்ந்த தமிழன்தான் தமிழ் நாட்டின் முதலமைச்சாய் வருதல் வேண்டும்' என்று திட்டவட்டமாய் மொழிகிறார். புலவர்கள், குடும்பத்தார், கோயிலார், விழா நடத்துவோர், மாணவர், பாடகர், கூத்தர், பாட்டியற்றுவோர், சொற்பொழிவாளர், ஏடெழுதுவோர் என அனைவருக்கும் தமிழ் வளர்ச்சித் திட்டங்களைப் பரிந்துரைத்தும், சினந்துரைத்தும் வெளிப்படுத்துகின்றார்.

"விழிப்போரே நிலை காண்பார்
விதைப்போரே அறுத்திடுவார்"

என்று நிறைவாக எடுத்துரைக்கிறார்.

இத்துணை விரிவாகவும், விளக்கமாகவும் தமிழை நேசித்து வளர்க்க வழி வகைகளை எந்தக் கவிஞரும் கூறவில்லை. ஆதலால் பாரதிதாசனாரின் முதன்மைப் பங்களிப்பு அவர் தந்த தமிழ்க் காப்பு என்று அட்டியின்றிக் கூறலாம். தமிழே பாரதிதாசனின் அகம் – முகமும்கூட. ●



# முதுமை என்னும் கிணறு

புலவர் அடியன் மணிவாசகன்

கண்ணும் தெரியவில்லை, காதும் கேட்கவில்லை
என்னதான் செய்வேனடா – இறைவா
என்னதான் செய்வேனடா!
மண்ணும் புரியவில்லை மனிதன் புரியவில்லை
எப்படி வாழ்வேனடா? – இறைவா
எப்படி வாழ்வேனடா?

முதுமைக் கிணறொன்றில் மூழ்கிடவே விட்ட காலன்
முடிந்திடவே வைத்துவிட்டான் – மூச்சும்
தியங்கிடவே வைத்துவிட்டான்.
பதுமைபோல் என்னைப் பார்க்க வருபவர் யார்?
பாலென்றால் கையினிக்குமோ? – பாரினிலே
பயன் பார்ப்பாரும் வருவாரில்லை!

எழுதிய பாட்டுரை நினைக்க விக்கிடும்
எழுதிட விரல் மடங்கும் எல்லாம்
எழுதிடக் கைம்மடங்கும்
தொழுதிடும் தெய்வங்கள் கற்பனை காட்டியே
தொண்டுகள் வாங்கிவிடும் – நல்ல
தோல்வியும் தந்துவிடும்!

அழுதாலும் தொழுதாலும் அரிய மருந்தாலும்
கண்ணொளி பெறவில்லையே – நான்
கண்ணொளி பெறவில்லையே!
எழுதாமல் படிக்காமல் இருப்பதைவிட நான்
எங்கோ பறந்து செல்வேன் – உயிர்
எங்கோ இறந்து செல்வேன்!

நீரிலாக் காவிரித் தாயுளம் போலக்
கொதிக்கிற உழவனாய் ஆனேன்
மதிக்கிற உழவனாய் ஆனேன்!
சீரொளி இயற்கைக் கடவுளின் தோற்றம்
காணவே கண் வேண்டும் – ஒளி
காணவே கண் வேண்டும்!

கருத்துக்கு எட்டாத காட்சிப் பொருளையும்
காட்டும் கண்பாவையே – உயிர்
நாட்டுக்கும் கண்பாவையே!
விருப்புக்கும் வாழ்வுக்கும் உறவு தருகின்ற
விடிவெள்ளி கண்பாவையே – உயர்
விடிவெள்ளி கண்பாவையே!

முதுமைக் கிணற்றுக்குள் மூச்சும் திணறுதே
முப்போதும் உணவுண்ணவோ? உயிர்
எப்போது விடை தருமோ?
இதுதான் உலகெனில் எப்படி வாழ்வதோ?
இருட்டறைக்கு ஒளிவருமோ? – இறைவா!
இருட்டறைக்குக் களி தருமோ?

*மகாகவி மில்டன் கண்பார்வை இழந்த பிறகு 'மீண்ட சொர்க்கம்' என்ற காவியம் எழுதினான். அதுபோல பெரும் புலவர் அடியன் மணிவாசகன் ஒரு கண் பார்வை இழந்து எழுதிய கவிதை.*



இலக்கியத்தில் அவருடைய பங்களிப்பு வித்தியாசமானதுதான். “இரும்புக் குதிரைகள், மெர்க்குரிப் பூக்கள், ஆசைக்கடல், தாயுமானவன்” முதலிய படைப்புகள் பிரசித்தி பெற்றவை. நாயகன் திரைப்படத்திற்கு இவர் எழுதிய வசனங்கள் மனதைத் தைப்பன. சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த்துடன் இவருக்கு இருந்த தொடர்பு கௌரவம் மிக்கது.

‘ஓம் சக்தி’ பத்திரிகையில் அவர் எழுத்து இடம்பெற வேண்டும் என்று 2002–ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் தொடர்பு கொண்டோம். சம்மதித்தார்.

# எழுத்தாளர் பாலகுமாரனுக்கு கண்ணீர் அஞ்சலி!

எழுத்தாளர் பாலகுமாரன் மரணமடைந்த செய்தி அதிர்ச்சிதான். அதிர்ச்சிக்குக் காரணம், அப்படியொன்றும் அவர் தடியூன்றித் தள்ளாடி நடக்கும் முதியவர் அல்ல. 72 வயதுதான். இன்னும் 10 ஆண்டுக்காலம் ஆரோக்கியமாக வாழ்ந்திருக்க முடியும். இழப்புதான். அவருடைய குடும்பத்திற்கு இழப்பு, தமிழ் இலக்கியத்திற்கு இழப்பு. ஆன்மீகத்திற்கு இழப்பு.

பாலகுமாரன் கட்சி சார்ந்த எழுத்தாளர் அல்ல. ஆனாலும் அவருக்கு இலட்சியம் இருந்தது. ஆன்மீகத்தில் ஈடுபாடு. ரமண மகரிஷியிடம் தன்னைப் பறிகொடுத்தவர். அதைவிட, யோகி ராம்சுரத்குமார் அவர்களிடத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். அடிக்கடி சென்று அவரைத் தரிசித்தவர். ரூ. 1 கோடி திரட்டி அவருக்கு நினைவு மண்டபத்தைத் திருவண்ணாமலையில் உருவாக்கியவர். அப்படியிருந்தும் யோகி ராம்சுரத்குமாரை யாரென்றே தெரியாமலேயே அவர் இறந்த பிறகும் கண்டுபிடிக்க முடியாமல் கலங்கியவர்.

அருட்செல்வரின் ‘ஓம் சக்தி’யில் எழுதுவது பெருமை. கதையின் தலைப்பு ‘காசும் பிறப்பும்’ என்றார்.

அந்தக் கதை முழுக்க முழுக்க அகம் சார்ந்தது. உள்முகப் பயணத்திற்குரியது. அந்தக் கதையினுடைய போக்கு எப்படி இருக்கும் என்று தெரியாது. சுவாரஸ்யமாக அமைந்தது மட்டும் தெரியும்.

2002 செப்டம்பரிலிருந்து 2003 அக்டோபர் வரை அவருடைய ‘காசும் பிறப்பும்’ கதை ‘ஓம் சக்தி’யில் வெளியாகியது. பிறகு தீபாவளி மலர்களிலும் சிறுகதைகள் எழுதினார்.

இவ்வாறு ‘ஓம் சக்தி’யோடு தொடர்புள்ள ஓர் எழுத்தாளர் ஆன்மீகத்தில் நங்கூரமிட்டு நின்றவர். இலக்கியவாதி. தமிழிலக்கியத்திற்கு இழப்பு ஏற்படும் வகையில் 15.5.2018 அன்று மறைந்தார் என்ற செய்தி மனதை வருத்தியது. அவருடைய ஆன்ம சாந்திக்கு ‘ஓம் சக்தி’யின் பிரார்த்தனைகளை உரித்தாக்கிக் கொள்கிறோம்.

– இணையாசிரியர்

சிறுகதை

இரா. வேணுகோபாலகிருஷ்ணன்

# பொருத்தம்

“நீங்க கண்ணாயிரநாதர் கோவிலுக்குப் போயிட்டு வாங்க... உறுதியா உங்க கல்யாணம் மூணு மாசத்துக்குள்ள நடந்திடும். நான் என்னோட அனுபவத்திலே கல்யாணம் தள்ளிப் போன எத்தனையோ பேரை அங்கே அனுப்பியிருக்கிறேன். போயிட்டு வந்த எல்லாருக்கும் உடனே கல்யாணம் ஏற்பாடாகியிருக்கு. கண்ணாயிர நாதரை நம்புங்க... உங்க கவலையெல்லாம் காணாமப் போயிடும்” சோதிடர் ராமசாமி அழுத்தமாகச் சொன்னார்.

என் அம்மாவின் கண்களில் ஓர் ஒளி தோன்றியதைக் கவனித்தேன். புன்னகையோடு அம்மா என்னைப் பார்த்துக் கண்களால் ஏதோ சொன்னாள். ஆனால், எனக்கு எதுவும் தோன்றவில்லை. இதுவரை எத்தனை சோதிடர்களைப் பார்த்தாயிற்று... எத்தனை கோவில்களுக்குப் போய்ப் பரிகாரம் செய்தாயிற்று... ஆனால் என்ன பயன்?

இன்னும் மூன்று மாதம், ஆறு மாதம் என்று எத்தனையோ சோதிடர்கள் என் திருமணத்திற்குக் காலம் குறித்தார்கள். ஆனால், இன்றுவரை யார் சொன்னதும் நடக்கவில்லை. அவர்கள் சொன்ன காலம் கடந்தும் திருமணம் நடக்காமலிருப்பதை அந்தச் சோதிடர்களிடமே போய்க் கேட்டால், ஏதேதோ காரணங்களைச் சொல்லி, இதனால் தள்ளிப் போகிறது என்று மேலும் ஒரு தவணைக் காலத்தைச் சொன்னார்கள்.

யார் என்ன சோதிடம் சொல்லி என்ன பயன்? எனக்குத் திருமணம் நடக்கும் என்று எனக்கே நம்பிக்கையில்லை. வயது 36 ஆகிவிட்டது. வட்டாட்சியர் அலுவலகத்தில் வேலை. ஓரளவு நல்ல சம்பளம். வருகிற மனைவியையும் ஓரிரு குழந்தைகள் பிறந்தால் அவர்களையும் வைத்துக் காலம் தள்ளிவிட முடியும்தான். ஆனால், மனைவி என்று ஒருத்தி வருகிற வாய்ப்பைத்தான் காணோம்!

என் ஜாதகத்தைக் கொண்டு போய்ப் பெண் வீட்டாரிடம் கொடுத்த தரகர் என்னைப் பற்றிச் சொன்னதுமே, இந்தப் பையன் வேண்டாம் என்று தவிர்த்தவர்கள் ஏராளம். ஏதோ ஒரு சில இடங்களுக்குப் பெண்பார்க்கப் போயிருக்கிறேன். அவர்கள் என்னைப் பார்க்கும் வரை சிக்கல் இல்லை. என்னைப் பார்த்த பின்னர்தான் அவர்கள் தங்கள் மறுப்பை ஏதேனும் ஒரு வழியில் தெரிவித்தனர்.

எனக்கு மட்டும் ஏன் இந்தத் துயரம் என்று நான் நினைக்கவேயில்லை. ஏனெனில், படிக்காததாலும், பெரிய சம்பளத்தில் வேலை இல்லாததாலும் நாற்பது வயதைக் கடந்தும் பெண் கிடைக்காத விவசாயத் தொழில் செய்யும் நண்பர்கள் எத்தனையோ பேர் எங்கள் ஊரில் இருக்கின்றனர்.

நான் அரசுப்பணியில் இருந்தாலும், என்னிடம் உள்ள உடல் குறைபாடு தான் என்னை இப்படிப் பாடாய்ப் படுத்துகிறது.

எனக்குச் சற்றே கோண லான வாய். சிரித்தால் உதடுகள் இடது கண்ணை நோக்கிப் போகும். நான் நடப்பது என் இடுப்புக்கு மேல் பகுதியை இடது பக்கம் சாய்த்துத்தான். அது மட்டுமல்லாமல், வலது காலை விந்தி விந்தித்தான் நடக்க முடி யும். நேராக நிற்க முடியாத கோணலான உடல். இதனால்தான் ஊரில் எனக்குக் 'கோணையன்' என்ற பட்டப்பெயர்.

நான் நடந்து செல் லும்போது முன்னால் விட்டுப் பின்னால் சிரித்தவர்கள் பல பேர். என்னைப்போல் நடந்து காட்டிப் பரிகாசம் செய்த சிறுவர்கள் பல பேர். ஆனால், என்னால் என்ன செய்ய முடியும்? சிறிய வயதில் இதற்காகப் பல பேருடன் வாய்ச் சண்டை போட்டதுண்டு. பல நேரங் களில் தனியே அமர்ந்து அழுது தீர்த்த துண்டு.

அப்போதெல்லாம் என் அம்மாதான் எனக்கு ஒரே ஆறுதல். "அவங்க கிடக்கறாங்க சாமி... குறைங் கறது உடம்புல மட்டுமில்லே... மனசி லயும் இருக்கு. அவங்களுக்கெல்லாம் நல்ல மனசில்லை. ஆனா, உனக்குத் தங்கமான மனசு இருக்கு. நீ நல்லாப் படி ராசா... நீ படிச்சுப் பெரிய ஆளா ஆயிட்டாப் போதும் இப்ப உன்னைப் பழிக்கிறவங்களே உன்னைப் பாராட் டுவாங்க" என்பாள். நானும் என் குறையை நினைத்தும், பழிப்பதைப் பார்த்தும் வருந்துவதை விட்டு விட்டேன்.



"ஏனுங்க, இதக்கூட நாந்தான் சொல்லணுமா? அம்மா எதுவும் சொல்லலையா? அப்ப நீங்களே யோசிச்சுத் தெரிஞ்சுக்குங்க... அப்பா வர்றாருங்க, நான் அப்புறம் பேசறேன்."

அம்மா தந்த அந்த ஊக்கம்தான் என்னை ஓரளவு படிப்பில் முன் னேற வைத்தது. ஐந்தாறு வீடுகளில் பாத்திரங்கள் கழுவி, துணிகள் துவைத்து அப்பா இல் லாத என்னைப் படிக்க வைத்தாள் அம்மா. பி.காம். முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றேன்.

நான் மேலும் படித் திருக்கலாம். ஆனால், அம்மாவுக்குத் தொல் லையும் துன்பமும் கொடுக்க விரும்ப வில்லை. இத்தனை நாள்கள் எத்தனையோ இடையூறுகளையும் தொல்லைகளையும் சந்தித்து என்னை வளர்த்த அம்மாவை நான் நன்கு வைத்துக் காப்பாற்ற வேண்டு மென்று விரும்பினேன். எனவே, வேலை தேடலில் இறங் கினேன்.

அரசுப்பணியாளர் தேர்வாணை யத்தின் தேர்வு எழுதி வெற்றி பெற்ற தோடு, எனது உடற்குறைபாடும் வேலைக்கான ஒரு தகுதி(?)யாக இருக்க, விரைவிலேயே அரசு வேலை கிடைத்து விட்டது. அம்மாவை வேறு வீடுகளில் வேலை செய்யாமல் நிறுத்தி, வீட்டிலேயே நல்ல முறையில் வைத்திருக்கிறேன். அம்மா இன்று நன் றாக இருந்தாலும், எனக்குத் திரு மணம் ஆகவில்லையே என்ற குறை தான் எப்போதும் புலம்ப வைத்துக் கொண்டிருக்கிறது.

இதற்காகத்தான் அடிக்கடி ஏதோ ஒரு சோதிடரிடம் செல்வதும், அவர்கள் சொல்லும் கோவில்களுக்குச் சென்று பரிகாரங்கள் செய்வதுமாக இருக்கிறோம். எனக்கு ஒரு கட்டத்தில் இதெல்லாம் வெறுத்து விட்டாலும், அம்மாவின் ஆசைக்காகவும் வற்புறுத்தலுக்காகவும் உடன்பட்டுக் கொண்டே இருந்தேன்.

**அ**ம்மாவும் நானும் கோவையிலிருந்து இரவில் புறப்பட்டு மயிலாடுதுறைக்குச் சென்று, அங்கிருந்து வைத்தீசுவரன் கோவிலுக்குப் பேருந்து மாற்றிச் சென்று இறங்கினோம். அங்கிருந்து ஓர் ஆட்டோ பிடித்துக் காலையிலேயே குறுமாணக்குடி சென்றோம்.

“இதுதாங்க கண்ணாயிரமுடையார் கோவில். போயிட்டு வர்ற வரைக்கும் காத்திருக்கட்டுங்களா?” ஆட்டோ டிரைவர் கேட்டார்.

“ஆமாங்க, பஸ் வசதி அதிகமில்லாத இந்தக் கோவிலிலிருந்து திரும்பிப் போக நீங்க இருந்தாத்தான் வசதி. கொஞ்சம் காத்திருங்க... நாங்க வந்ததும் போயிடலாம்” என்றேன்.

“வெயிட்டிங் சார்ஜ் வரும்ங்க சார்...” என்றார் ஆட்டோ டிரைவர்.

“பரவாயில்லீங்க... இத்தனை தூரம் செலவு செஞ்சிட்டு வந்திட்டோம். இதப்போய்ப் பெரிசு படுத்துவோமுங்களா...?” என்றேன்.

கோவிலை நோக்கிப் போனோம். கூட்டமே இல்லை. வாயிலிலேயே குருக்கள் நின்றிருந்தார். “வாங்க... எந்த ஊர்லேருந்து வர்றீங்க?” என்று கேட்டார்.

“நாங்க கோயமுத்தூருங்கோ” என்றேன்.

“ஜோசியர் ராமசாமி அனுப்பினாருங்களா?”

“ஆமாங்க...” என்றேன். ஓ, சோதிடர் அடிக்கடி யாரையாவது அனுப்பி வைப்பார். அந்தப் பழக்கத்தில் கேட்கிறார் போல இருக்கிறது... என்று மனதுக்குள் நினைத்துக் கொண்டேன்.

“உள்ளே உட்காருங்க... நைவேத்தியம் தயாரானதும் பரிகாரப் பூசையை ஆரம்பிச்சிடலாம்” என்றார். உள்ளே சென்றோம்.

உள்ளே இருந்த மேடையில் ஒரு பெரியவரும், ஓர் இளம் பெண்ணும் அமர்ந்திருந்தனர். அவளுக்கு 27 – 28 வயதிருக்கலாம். ஒருக்களித்து அமர்ந்திருந்த அந்தப் பெண் கருப்பாக இருந்தாலும், மிகக் களையான முகத்தோடு வசீகரமாக இருந்தாள். என்னைப் பார்த்ததும் அவள் உதட்டில் லேசான புன்னகை வந்தது போல் தெரிந்தது. சரி, சரி எல்லோரும் என் கோணல் உடலையும், நடையையும் பார்த்தால் சிரிப்பது வழக்கம்தானே! அதில் இந்தப் பெண் மட்டும் விதிவிலக்காகவா இருப்பாள்? என எண்ணியவாறு தலையைக் குனிந்தபடி ஓர் ஓரமாய்ச் சென்று அமர்ந்தேன்.

அந்தப் பெரியவர் என் அம்மாவைப் பார்த்து, “அம்மா, எங்கிருந்து வர்றீங்க?” என்று கேட்டார்.

“கோயமுத்தூரிலிருந்துங்க”

“கோயமுத்தூர்ல எந்த ஊருங்க?”

“நாங்க ஆலாந்துறைக்குப் பக்கத்தில மங்கலப்பாளையமுங்க... நீங்க எந்த ஊருங்க?”

“நாங்களும் உங்க பக்கம்தான்... வடக்கே நரசீபுரமுங்க...” என்றார் பெரியவர்.

“ஓ... நம்மூர்ப்பக்கந்தானுங்களா? அம்மணி நம்ம பொண்ணுதானுங்களா?” என்றபடி அம்மா அவருடன் அமர்ந்து சரளமாகப் பேசத் தொடங்கினாள். அந்தப் பெண் அம்மாவைப் பார்த்துப் புன்னகைத்து விட்டு, மெல்ல என்னைத் திரும்பிப் பார்த்தாள். கண்களில் ஒரு குறும்புப் பார்வை. உதட்டில் ஒரு மெல்லிய சிரிப்பு.

எனக்கு என்னவோ போல் இருந்தது. மெல்ல எழுந்து கோவில் திருச்சுற்றைச் சுற்றி நடந்தேன். தென்மேற்கு மூலையில் நின்று கொண்டு கோவிலின் மேல்பகுதியைப் பார்த்தேன். வௌவால்கள் சில தொங்கிக் கொண்டிருந்தன.



சிறிது நேரம் அப்படியே நின்றவன், ஏதோ வளையல் ஓசை கேட்பது கண்டு திரும்பினேன். அந்தப் பெண் தான் வந்து கொண்டிருந்தாள். பார்த் தவன் ஒரு கணம் திடுக்கிட்டேன்.

அவள் ஒரு கையால் வலது முழங்காலைப் பிடித்தபடி விந்தி விந்தி நடந்து வந்து கொண்டிருந்தாள்.

அடப்பாவமே, இவளும் நம்மைப் போலப் பாவப்பட்டவள்தானா? இத்தனை நாளும் அடுத்தவர்களின் பரிதாபத்திற்கு உள்ளான நான் அன்று அவளுக்காகப் பரிதாபப் பட்டேன்.

மெல்ல என்னை நோக்கி வந்து கொண்டிருந்தாள். எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஒரே பதற்றமாக இருந்தது. அவள் என் அருகில் வந்த நேரம் பார்த்து, “பூசை ஆரம்பமாகப்போகுது, வாங்கோ” என்று குருக்கள் குரல் கொடுத்தார்.

எனக்கு அப்போது என்ன தோன்றியது, எப்படித் தோன்றியது என்று தெரியவில்லை. இயல்பாகவே கூச்சமும், பயமும் அதிகம் உள்ள நான், துணிந்து என் சட்டைப்பையில் கையை விட்டு, என் முகவரி அட்டை ஒன்றை எடுத்து அவள் கையில் திணித்து விட்டு, எதுவும் பேசாமல், திரும்பியும் பார்க்காமல், கண்ணாயிரமுடையார் சன்னதியை நோக்கிச் சென்றேன்.

பூசையின்போது கடவுளிடத்தில் வேண்டிக் கொள்வதைவிட, அவள் என்னை என்ன நினைப்பாளோ, அவள் அப்பாவிடம் என்ன சொல்வாளோ என்ற பதற்றமே உள்ளத்தில் நிலவியது. அவளை நிமிர்ந்து பார்க்கவும் துணிவில்லை.

பூசை முடிந்து திரும்பி வரும்போது, நாங்கள் நிறுத்தியிருந்த ஆட்டோவிலேயே அவர்களும் ஏறினார்கள். அவளது அப்பா, அவள், என் அம்மா மூவரும் பின் சீட்டில் அமர்ந்து கொள்ள, நான் டிரைவருடன் அவரது சீட்டில் ஒண்டிக் கொண்டேன்.

வைத்தீஸ்வரன் கோவிலுக்கு வந்ததும், நாங்கள் கும்பகோணம் போகிறோம் என்றாள் அம்மா. அவர்கள் சீர்காழிக்குப் போவதாகச் சொன்னார்கள். புறப்படும்போது அவளை நிமிர்ந்து பார்த்தேன். உதட்டில் அந்தப் புன்னகையைக் காணவில்லை. ஆனால் கண்கள்தான் ஏதோ சொன்ன மாதிரித் தெரிந்தது. என்னவென்று தெரியவில்லை. அவரவர் வழியே திரும்பினோம்.

"ஏப்பா, அந்தப் பொண்ணு பேரு காயத்ரியாம். நல்ல பொண்ணாத் தெரியுறா. நீ தனியே போனபோது, நாந்தான் உன்னைக் கூட்டிட்டு வரச் சொல்லி அனுப்பினேன். அவகிட்டப் பேசினாயா?"

"நான் எதுவும் பேசலைம்மா"

"சரி, சரி ஊருக்குப் போய்ப் பார்ப்போம். முதல்ல இப்பக் கும்பகோணம் போய், திருநாகேஸ்வரத்தில ராகு பகவானுக்குப் பாலாபிஷேகம் செய்யணும்" என்றாள் அம்மா.

"சரிம்மா" என்றேன்.

இரண்டு நாள்கள் கழித்து என் செல்லிடப்பேசிக்கு ஓர் அழைப்பு வந்தது. புதிய எண், யாரென்று தெரியவில்லை. எடுத்து 'ஹலோ' என்றேன்.

"ஹலோ, நான் காயத்ரி பேசுறேனுங்க..." இனிய குரல் கேட்டுத் திகைத்த நான், "யாருங்க... எந்த காயத்ரி? எனக்குத் தெரியலீங்களே...!" என்றேன்.

"என்னங்க, அதுக்குள்ள மறந்திட்டீங்களா? கண்ணாயிரநாதர் கோவில்ல பாத்தோமே...!"

"ஓ... நீங்களா... சொல்லுங்க... நல்லாயிருக்கீங்களா...?" இருக்கிற துணிச்சலையெல்லாம் திரட்டிப் பேசினேன்.

"நான் நல்லாயிருக்கிறனுங்க... அங்க நீங்க, அம்மா எல்லாம் நல்லாயிருக்கிறீங்களா...?"

"நல்லா இருக்கிறோமுங்க... அங்க அப்பா நல்லாயிருக்காருங்களா?"

"நல்லாயிருக்காருங்க... அப்பாதான் உங்களையும், அம்மாவையும் வீட்டுக்கு வரச்சொன்னாங்க..."

"வீட்டுக்குங்களா...? என்ன விசேஷமுங்க...?"

"ஏனுங்க, இதக்கூட நாந்தான் சொல்லணுமா? அம்மா எதுவும் சொல்லலையா? அப்ப நீங்களே யோசிச்சுத் தெரிஞ்சுக்குங்க... அப்பா வர்றாருங்க, நான் அப்புறம் பேசறேன்." செல் பேச்சுத் துண்டிக்கப்பட்டது.

ராமசாமி சோதிடர் சொன்னது போல், கண்ணாயிரமுடையார் நம்ம கோரிக்கையை நிறைவேற்றி விட்டார் போலிருக்கிறதே...! என்னால் குதிக்க முடியா விட்டாலும், என் உள்ளம் துள்ளிக் குதித்தது. "ஜோடிப் பொருத்தம் பிரமாதம்டா..." என எங்களுக்குப் பின்னால் ஊரார் கேலி பேசப்போவது இப்போதே கற்பனையில் தெரிந்தது. ●

# மெய்கண்டாரின் 'சிவஞான போதம்' ③

# சம்ஸ்கிருதமா? தமிழா?

மெய்கண்டாரின் 'சிவஞான போதம்' சைவ சமயத்தின் முப்பெரும் உண்மைகளைக் கூறிய சித்தாந்தமாகும். இந்தச் சித்தாந்த நூலின் மூல நூலாக ஸ்ரீவாகிச முனிவர் என்பவர் 'ஞானாமிர்தம்' என்று ஒரு நூல் எழுதியுள்ளதாகவும் அதனுடைய மொழிபெயர்ப்புத்தான் 'சிவஞான போதம்' என்றும் 'ஹிந்து மித்திரன்' டிசம்பர் 1–14, 2017 இதழில் வெளி யான கட்டுரைக்கு ஏராளமான எதிர்வினைகள் சைவர்களிடமிருந்து வரும் என்று எதிர்பார்த்தபடி மூன்று அறிஞர்களின் கட்டுரைகள் இதுவரை கிடைத்துள்ளன.

கம்பனில் ஆய்வுசெய்த முனைவர் அமுதன், தமிழறிஞர் முனைவர் ந.இரா. சென்னியப்பனார், பாண்டிச்சேரி தமிழறிஞர் தெ. முருகசாமி ஆகிய மூவரின் கட்டுரைகள் நமது சிந்தனைக்கு விருந்தாகும்.

– இணையாசிரியர்

52. மற்ற ஆகமங்களைக் கூறாமல், ரௌரவ ஆகமத்தில் இச்சூத்திரங்கள் உள்ளன என்ற தற்கும் ஒரு சிறு காரணம் உண்டு. இந்த ஆகமத்தில் இடைச்செருகல்கள் நிரம்ப இருந் திருக்க வேண்டும். ஏன் என்றால் கீழே பார்க் கலாம். அஷ்டப் பிரகரணங்களுள் ஒன்று ''பரமோக்ஷநிராச காரிகை'' என்பது. இதில் ரௌரவ ஆகமத்திலிருந்து இரண் டரைச் சூத்திரங்கள் (மேலே கூறி வரும் 12 சூத்திரங்களல்ல) மேற்கோள் காட்டப்பட்டு, சாங் கியர், வேதாந்திகள், பாஞ்ச ராத்திரிகள், பாதஞ்சலர், பாசு பதர் முதலிய மதத்தினர் கூறும் மோக்ஷலக்ஷணம் மறுக்கப்படுகின்றது. இம்மதங் கள் தோன்றிய காலத்தின் பிறகே இந்த 2 1/2 சூத்திரங் கள் இந்த ஆகமத்தில் இடம் பெற்றிருக்க வேண்டும். இதைப் போலவே, வேறு பல இடைச் செருகல்களும் இருந் திருக்கலாம். தமது பன்னிரண்டு வடமொழிச் சூத்திரங்களுக்கும் இந்த ஆகமம் இடந்தரும் என்று இவர் கருதி யிருக்கலாம்.


மெய்கண்டார்

53. இந்த வடமொழிச் சூத்திரங்களின் மூலபாடம் இவர் தமது பாஷ்யத்தில் கொடுத்துள்ளதே. இம்மூல பாடத்தின் உண்மை ரூபம் (Authenticity) முதலியவற்றை ஆராய்ந்தறிய வேறு வழியேயில்லை.

54. இவரே வடமொழிச் ''சூத் திரங்கள்'' என்று பெயர் கொடுத்தவர். இதன் காரணம் பெரிதும் ஆராய்ந்து சிந்திப்ப தற்கு உரியது. வடமொழி வழக் கில் வசனத் துணுக்கு களுக்குத்தான் சூத்திரம் என்ற பெயர் உண்டு (bits of prose). பௌஷ்கரம், மிருகேந் திரம், வடமொழிச் சிவஞான போதம் முதலிய நூல்களி லுள்ள செய்யுள்களைச் **சுலோ கம்** என்றும், இவையடங்கிய நூல்களைக் **காரிகை** என்றும்

கூறுவதே வடநூல் வழக்காறு. சுலோகத்தைச் ''சூத்திரம்'' என்று சிவாக்ரயோகிகள் கூறிய தன் காரணம் தமிழ்ச் சூத்திரத்தை வடமொழியில் மொழிபெயர்த்துத் தமிழில் சூத்திரம் என்று வழங்கிப் புகழ்பெற்றதை வடமொழியிலும் ''சூத்திரம்'' என்று சொல்லலாம் என்ற ஆசையேயாகும். இது கொண்டே, தமிழிலிருந்தே இச்சூத்திரங்கள் வடமொழிக்குச் சென்றன என்று கூறலாம்.

55. வடமொழியில் இந்தச் சூத்திரங்கள் எனப்படும் சுலோகங்கள் பன்னிரண்டும் அனுஷ்டுப் சந்தசில் (32 எழுத்துக்கள் கொண்டனவாக) யாக்கப் பெற்றமைக்கும் ஒரு காரணம் உண்டு. மதுரைச் சிவப்பிரகாசர் மூலக்கிரந்தம் பன்னிரெண்டென்றார். முப்பத்திரண்டு எழுத்துக்களின் தொகுதியைக் கிரந்தம் என்பது வடமொழி வழக்கு (விஷ்ணு புராணம் 6000 கிரந்தம், வால்மீகி ராமாயணம் 24000 கிரந்தம், ஸ்காந்தம் 100,000 கிரந்தம் என்றெல்லாம் சொல்லப் படுவதைப் பார்க்கலாம்). ''மூலக்கிரந்தம் பன்னிரண்டும்'' (ஒவ்வொன்று முப்பத்திரண் டெழுத்துக்கள் கொண்ட) பன்னிரண்டு சுலோகங்களாயின.

56. வடமொழியில் பன்னிரண்டு சூத்திரங்களாகவே இவை மொழிபெயர்க்கப் படாமைக்கு வேறொரு காரணமும் உண்டு. மெய்கண்டார் சூத்திரங்கள் பன்னிரண்டிலுள்ள ஆழ்ந்த கருத்துக்களையெல்லாம் வடமொழியில் பன்னிரண்டு சிறு சூத்திரங்களில் அடக்க முடியாமையே, பெரிய சுலோகங்களைக் கையாள வேண்டிய அவசியத்தை உண்டாக்கிற்று. இந்தச் சுலோகங்களைக் கொண்டபோதிலும், பற்பல வேறுபாடுகள் இருப்பதன் முக்கியக் காரணம், இவை 32 எழுத்தென்ற அளவுக்குட்பட்டமையேயாகும். வேறு சில காரணங்களும் (கீழே 120 பார்க்க) உண்டு.

57. சிவாக்கிரயோகிகள் இப்படி வரலாற்றைப் புனைந்தது நல்ல எண்ணத்தோடேதான் என்பதில் ஐயமில்லை. மெய்கண்டார் சூத்திரக் கருத்துக்கள் பரவ வேண்டும் என்ற பொது நோக்கம் அவருக்கிருந்தது போற்றற் குரியதே. அவர் காலத்திய நிலைக்கேற்ப, புரை தீர்ந்த நன்மை பயந்தமையால் பொய்மையும் வாய்மையிடத்ததாயிற்று.

58. பேரறிஞராகிய சிவஞான முனிவர் மொழி பெயர்ப்பு என்ற கொள்கையை ஏன் ஆதரித்தார்? இவர் சிவாக்கிரயோகிகளுக்கு 200 ஆண்டுகள் பிந்தியவர். இந்த 200 ஆண்டுகளுக்குள் இக்கொள்கை பலமாக வேரூன்றி விட்டது. திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்து வெளிவந்த பல உரைநூல்களிலும் இக்கொள்கை ஆதரிக்கப்பட்டது. மொழி பெயர்ப்புக் கொள்கை ஸ்ரீ கண்டருத்திரர் திருவாக்கென்ற செய்தியை அடிப்படையிற் கொண்டபடியால், அதனால் மக்களுக்கு ஏற்படும் நம்பிக்கையைக் குறைக்க முனிவர் மறுக்க முயலவில்லை. சித்தாந்தக் கருத்து நுட்பங்களை விளக்கவந்தவர் வரலாற்றின் பொய் மெய்களை ஆராய வேண்டிய அவசியமில்லை.

59. உமாபதி சிவாசாரியார் பௌஷ்கராகமத்திற்கு ஒரு பாஷ்யம் எழுதியதாகவும், அதில் ஐந்திடங்களில் இவ்வடமொழிச் சூத்திரங்களை மேற்கோள் காட்டியிருப்பதாகவும் மொழி பெயர்ப்புவாதிகள் ஒரு தடை கூறுவதுண்டு. இங்குக் கவனிக்க வேண்டியன பல உள :– (1) உமாபதி சிவாசாரியார் இப்பாஷ்யம் இயற்றினார் என்பதற்கு ஆதாரமே கிடையாது. (2) பௌஷ்கர விருத்தியை வெளியிட்ட கொ. சண்முகசுந்தர முதலியார் ''இப்பௌஷ்கரத்திற்கு உமாபதி சிவாசாரியாரால் உரையிட்டிருப்பதாய் வழங்குவதன்றி ஓரிடத்தினும் அவருரையென்று அத்தாக்ஷியுடன் வெளி வரக் காண்கின்றிலன். திருவண்ணாமலை ஆதீனம், யாழ்ப்பாணத்துச் சாலிவாடிபுரம் ஞானப்பிரகாசத் தம்பிரானால் சம்ஸ்க்ருத விருத்தி ஒன்று எழுதப்பட்டுள்ளது. இப் பிரதியே ஆதி சைவர்கள் முதலியோரிடத்தும் வழங்கிவரக் காணப்படுகின்றது'' என்று கூறுகிறார். (3) இப்போது வெளிவந்துள்ள பௌஷ்கர பாஷ்யம் இந்த ஞானப்பிரகாசத் தம்பிரான் எழுதியதே. ஆனால், உமாபதி சிவாசாரியார் இயற்றியதாகக் கூறப்படுகிறது. (4) உமாபதி சிவாசாரியார் கூறும் குருமரபு நூல்மரபு களிலுள்ள விஷயங்களுக்கும் (மேலே 27–30 காரணங்களைப் பார்க்க) அவருடைய சங்கற்ப நிராகரணம், சிவப் பிரகாசம் முதலிய நூல்களிலுள்ள

விஷயங்களுக்கும் மாறான பல கொள்கைகள் இந்த பாஷ்யத்திலுள்ள (கடவுள் உபாதான காரணம் எனல்; சிவ சமவாதத்தை ஆதரித்தல் முதலியன). (5) இந்த பாஷ்யத்தில் உமாபதி சிவாசாரியார் காலத்திற்குப் பிந்திய பல நூல்கள் மேற் கோளாகக் காட்டப்படுகின்றன. (தத்துவ சங்கிரகம் பாஷ்யம் பக்கம் 506; தத்துவப் பிரகாசம் மேற்படி பக். 17, 245; தத்வஸாரம் 242; ரத்நத்ரயம் 20, 22, 24, 26, 43, 97, 108, 164, 208, 210, 212 முதலிய பல பக்கங்களில்; மோக்ஷகாரிகை 237; பரமோக்ஷ நிராச காரிகை 234). (6) இந்த பாஷ்யம் பக்கம் 519–இல் மாதவர்கள் நூலாகிய "ந்யாயாம் ருதம்" மேற்கோள் காட்டப்பட்டுள்ளது. இது உமாபதி சிவாசாரியார் காலத்திற்கு 200 ஆண்டுகள் பிந்தியது. இதைப் பற்றிய ஆராய்ச்சியைச் சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாகிய "The Sivadwaita of Srikanta" என்ற நூலில் 77ஆவது பக்கத்திற் காண்க.

60. உமாபதி சிவம் எழுதியதாகவே வைத்துக் கொண்டாலும், மேற்கூறிய ஐந்திடங்களும் மொழிபெயர்ப்புக் கொள்கைக்கு ஆதரவு தர மாட்டா. இதைச் சிறிது ஆராய்வோம். இந்த ஐந்திடங்களில் மூன்றிடங்களில்தான் "சிவ ஞானபோதம்" என்று மேற்கோளில் கூறப்பட்டுள்ளது (பாஷ்யம் பக்கம் 29, 189, 256). மற்ற இரண்டு இடங்களில் (14, 447) இச்சிவஞான போதம் குறிக்கப்படவில்லை. இந்த பாஷ்யத்தில் ஏனைய ஆகமங்கள் குறிக்கப்படும் போது ஸ்ரீமந் ம்ருகேந்திரே, ஸ்ரீமந் மதங்கே, என்ற மரியாதை முறை காணப்படுகிறது.

ஆனால், மேற்கூறிய மூன்றிடங்களில் ஸ்ரீமந் ரௌரவே என்று குறிக்கப்படாமல் "சிவஜ் ஞானபோதே" என்று மட்டும் இருப்பதால், இந்த பாஷ்யம் எழுதினவர் தமிழ் சிவஞான போதத்தையே குறித்து, அதிலுள்ள சொற்றொடருக்குத் தாமே ஒரு மொழிபெயர்ப்பைத் தருகிறார் என்று கொள்வதில் என்ன தடையுள்ளது? "ஸ்ரீமந் ரௌரவே" என்று கூறாமல், "சிவஜ்ஞானபோதே" என்பதால் சிவஞான போதம் என்பது ஒரு தனிநூல் என்றே ஏற்படும். பன்னிரண்டு சூத்திரங்களை மட்டும் ஒரு தனி நூல் போல் ஏன் கூற வேண்டும்? மேலும் விரிப்பின் இது மிகமிகப் பெருகும்.

இனி மேலே 12, 13ஆம் காரணங்களை ஒட்டி, ஒவ்வொரு வடமொழிச் "சூத்திரத்தையும்" அதற்கு மெய்கண்டார்மீது சுமத்தப்படும் "மொழிபெயர்ப்பையும்" ஆராய்வோம். வடமொழிச் சூத்திரங்கள் ஸ்ரீகண்டருத்திரர் திருவாக்கென்று கொண்டு, அவற்றை மொழிபெயர்க்கும் தொண்டினில் மெய்கண்டாருக்கு எவ்வளவு மிகுதியாக அறியாமை, ஆகம வாக்கில் மதிப்பின்மை, ஆகம வாக்கை மாற்றக் குறைக்கச் சேர்க்கக் கூசாமை முதலிய குற்றங்கள் கற்பிக்க வேண்டு மென்பது விளக்கப்பட்டு, இக்குற்றங்கள் தோன்றுவதற்கு இடம்தரும் மொழி பெயர்ப்புக் கொள்கையே தவறென்பது நிலை நாட்டப்பெறும். இம்முறை மேல்நாட்டுத் தருக்க நூலில் Reductioad absurdum என்று கூறப்படும். ஒவ்வொரு சூத்திரமாக ஆராயலாம்.

61. முதல் சூத்திரம் "ஸ்த்ரீபுந்நபும்ஸகாதித்வாஜ் ஜகத; கார்யதர்சநாத், அஸ்தி கர்த்தாஸ ஹ்ருத்வைத தஸ்ருஜத்யஸ் மாத்ப்ரபுர்ஹர:" என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு : "பெண், ஆண், அலி ஆதியாயிருத்தலின் காரியமாகக் காணப்படுதலின், ஜகத்திற்குக் கர்த்தா உண்டு, அந்தக்கர்த்தா இதனைச் சங்கரித்து சிருஷ்டிக்கிறான், ஆகையால் ஹரன்பிரபு" என்பது. மெய்கண்டார் சூத்திரம் "அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின், தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம், அந்தம் ஆதி என்மனார் புலவர்" என்பது.

இனி ஒவ்வொரு சொல்லாக எடுத்துப் பார்ப்போம். "பெண்" என்று தொடங்காமல் "அவன்" என்று மெய்கண்டார் ஏன் தொடங்

### பிரமாண்ட முனீஸ்வரர்

**நா**மக்கல் மாவட்டத்தில் உள்ளது ஜேடர்பாளையம். இங்குள்ள வடகரை யாழ்வார் கிராமத்தில் உள்ள மன்னார் சாமி கோயிலில் 69 அடி முனீஸ்வரர் அருள்கிறார். இவரை ஒரு மண்டலம் தினமும் வலம்வந்து வழிபட்டு வர உடல் நோய்களும், மன நோய்களும் நீங்கும் என்பது நம்பிக்கை.

– சு. இலக்குமண சுவாமி

கினார்? முதற் கோணல் முற்றும் கோணல் என்பதை நன்கறிந்த சந்தான முதற்குரவர் ஆகமவாக்கிலுள்ள முறையை விளையாட் டாக மாற்றுவாரா? ''அவன், அவள், அது எனும் அவை'' என்று தொடங்குவதில் என்ன கஷ்டமுள்ளது?

62. ''ஆதியாயிருத்தலின்'' என்பதை ஏன் விட்டு விட்டார்?

63. இருத்தலின், காணப்படுதலின் என்று இரண்டு காரணங்களைக் கூறாமல், மூவினைமையின் என்று ஏன் கூறினார்.

64. பெண், ஆண், அலி என்று பொதுவாக உள்ளதை ''அவன் அவள் அது எனும் அவை'' என்று ஏன் சுட்டுப் பொருள்களாகக் கூறினார்?

65. ''காரியமாக'' என்று பொதுவாக உள்ளதை, ''மூவினைமையின்'' என்று ஏன் சிறப்பித்துக் கூறினார்? முத்தொழில், ஐந்தொழில் என் றெல்லாம் வகுக்கக்கூடிய ''காரியமாக'' என்ப தை ஏன் இப்படி மாற்றினார்?

66. ''மூலத்தில்'' இல்லாத ''மலத்துளதாம்'' என்பதை ஏன் சேர்த்தார்?

67. இவ்வாறு சேர்ப்பதால் ''மலத்துளதாம்'' என்ற கொள்கையை ஒப்புக்கொள்ளாத பலவாதி களுக்கு இடமில்லை என்பதை அறிந்தா, அறி யாமலா, வேண்டுமென்றா இதைச் சேர்த்தார்?

68. இப்பேற்பட்ட மிக முக்கியமானதொரு கொள் கையை, மொழிபெயர்ப்பென்ற சாக்குக் காட்டி ஆகமவாக்கில் சேர்க்கலாமா?

69. ''சங்கரித்துச் சிருஷ்டிக்கிறான்'' என்ற தொட ரில் இரண்டு செயல்கள் ஒன்றன்பின் ஒன் றாகக் கூறப்பட்டிருக்கின்றனவே தவிர, சங் காரகாரணன் என்பதனால் அவனே சிருஷ் டிக்கிறான் என்ற காரண காரிய முறை இல்லாதிருப்பவும், அம்முறை தோன்ற ''அந்தம் ஆதி'' என்று ஏன் கூறினார்?

70. ''ஹரன் பிரபு'' என்று சைவர்கட்கு மிக உகப் பைத் தரக்கூடிய சொற்களை விட்டு விடுவது மிகுசைவநாதராகிய மெய்கண்டாருக்கு அடுக்குமா?

''என்மனார் புலவர்'' என்று சேர்த்தது பற்றி மேலே 7 – 10 எண்ணுள்ள நான்கு காரணங் களைப் பார்க்கவும். சிவஞான பாடியம் முத லிய நூல்களில் மெய்கண்டார் சூத்திரங் கட்குக் கூறப்படும் பல நுட்பமான கருத்துக் களெல்லாம், வடமொழிச் சூத்திரங்களில் அமையவில்லை என்று ஆராய்ந்து பல நூறு காரணங்கள் காட்டலாம்.

71. இரண்டாம் சூத்திரம் ''அந்யஸ்ஸந்வ்யாப்தி தோநந்ய: கர்த்தாகர்மாநுஸாரத: கரோதிஸம் ஸ்ருதிம் பும்ஸாம் ஆஜ்ஞயாஸமவேதயா'' என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு : ''வியாப்தியாயிருத்தலால் அநந்யனான கர்த்தா, அந்யமாயிருந்து கொண்டு, சமவேத மாயுள்ள ஆஜ்ஞையால், புருஷர்களுக்கு, கர்மத்தை யனுசரித்து, புனருற்பவத்தைச் செய்கிறான்'' என்பது. மெய்கண்டார் சூத் திரம் ''அவையே தானேயாய் இருவினையின், போக்கு வரவு புரிய ஆணையின், நீக்கமின்றி நிற்குமன்றே'' என்பது.

''வியாப்தியாயிருத்தலால்'' என்ற காரணம் சைவ சித்தாந்தத்திற்கு முற்றிலும் விரோதம். கடவுளை வியாபகமாகவும் உயிர்களை வியாப்பியமாகவும், மலத்தை வியாப்தியா கவும் கொள்வதே சைவசித்தாந்தம். கடவுள் வியாப்தி என்ற கொள்கை கடவுளுக்கு (முதற் காரணம் என்ற) உபாதான காரணம் கூறும் சமயிகளுக்குப் பயன்படுவது. மெய் கண்டார், அருணந்தி சிவாசாரியார், உமாபதி சிவாசாரியார், சிவஞானசுவாமிகள் முதலிய சைவ சித்தாந்திகள் இதை ஒப்புக் கொள் வதில்லை. ஆனால் சிவாக்ரயோகிகள், யாழ்ப் பாணம் ஞானப்பிரகாசத் தம்பிரான் முதலி யோர் கடவுளுக்கு உபாதான காரணத்தையும் நிமித்த காரணத்தையும் சேர்த்துக் கூறுவர். இந்த நுட்பம் ஒன்றிலிருந்தே சிவாக்ர யோகி கள் வடமொழிச் சூத்திரங்களைச் செய் திருக்கக்கூடும் என்று எண்ணுவதற்கு ஒரு தனியான தூண்டுதல் ஏற்படும். பௌஷ்கர பாஷ்யத்தை ஞானப்பிரகாசர் இயற்றினார் என்பதற்கு ஆதரவுதானே போதரும். மெய் கண்டார் இக்கொள்கையுடைய வடமொழிச் சூத்திரத்தைக் கனவிலும் கண்டறியார்.

72. பொய் கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித மெய், அதாவது, இன்மை அன்மை மறுதலைகளுள் அன்மைப் பொருள் கொள்

ளும் சுத்தாத்வைத சைவசித்தாந்தம் ''வியாப்தியாயிருத்தலின் அநந்யன்'' என்ற சூத்திரத்தை மறுக்க வேண்டியது அவசியமாகையால், இச்சூத்திரத்தோடு சேர்ந்து வரும் ஏனைய பதினொரு சூத்திரங்களையும் இறைவாக்காக எங்ஙனம் துணிந்து ஒப்புக்கொள்ள முடியும்?

73. அவையாய், தானேயாய், அவையேதானாய் என்ற அந்வயத்துக்கு இடம் கொடுத்து, கலப்பினால் ஒன்றாய் பொருள் தன்மையால் வேறாய் தொழிற்பாட்டால் உடனுமாய் இறை நிற்கின்ற நுட்பம் மெய்கண்டார் திருவாக்கிலே காணப்படுகிறதே தவிர, வடமொழியிலில்லை.

74. வியாப்தியாயிருத்தலின் அநந்யன் என்று காரண காரிய முறையிருப்பது போல, எக்காரணத்தால் அந்யன் என்பதை வடமொழிச் சூத்திரம் கூறவில்லை.

75. முதல் சூத்திரத்திலுள்ள ஸ்த்ரீ நபும் ஸகாதிகளை விட்டு, பும்ஸாம் என்று மட்டும் இச்சூத்திரம் கூறுவது மலைவைத் தருகிறது.

76. கர்மத்தை அனுசரித்து என்று வடமொழியிற் பொதுவாயுள்ளது, மெய்கண்டார் திருவாக்கில் ''இருவினையின்'' என்று விளக்கம் பெறுகிறது.

77. மூன்றாம் சூத்திரம் ''நேதிதோ மமதோத்ரே காதக்ஷோபரதி போதத : ஸ்வாபே நிர்போகதோ போதே போத் த்ருத்வாதஸ்த் யணுஸ்தநௌ'' என்பது. இதன் நேர் மொழி பெயர்ப்பு ''இது இல்லை இது அல்ல என்பதாலும், எனதுடல் என்று அழுத்தமாகச் சொல்வதாலும், சொப்பனத்தில் கண் முதலியவற்றின் அறியும் தன்மையாலும், சுழுத்தியில் புசிக்கும் 'தன்மையின்மை'யாலும், விழிப்பில் அறிவிக்க அறிவதாலும், உடலினுள் ஆன்மா உண்டு'' என்பது.

மெய்கண்டார் திருவாக்கு ''உளதில தென்றலின் எனதுடல் என்றலின் ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில் உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின் மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா'' என்பது. வடமொழியில் ''இந்திரியங்களை அறிதலின்'' என்ற காரணம் இல்லை. ஐம்புலன் அறிதலின் ஒடுக்கம் அறிதலின் என்று இரண்டு காரணங்களும் மெய்கண்டார் வாக்கிலுண்டு. ஐம்புலன் அறிதலின் என்ற காரணம் இந்திரியான்மாவாதிகளை மறுப்பதற்கெழுந்தது (சிவஞானமாபாடியம் – சமாஜப் பதிப்பு – பக்கம் 323 – 325).

78. வடமொழியில் உண்டியில்லை என்ற காரணம் தான் உளது; உடம்பின் சேஷ்டிதம் இல்லை என்ற மற்றொரு காரணமும் மெய்கண்டார் திருவாக்கிலுள்ளது. இவ்விரண்டுமே பிராணான்மவாதிகளை மறுப்பன (பாடியம் – பக்கம் 327 – 329).

79. சமூகான்மவாதிகளை மறுப்பது ''உடம்பு மாயா காரியங்களால் ஆக்கப்பட்டமையால்'' என்பது. இதை ''மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா'' என்று மெய்கண்டார் கூறுகிறார் (பாடியம் – பக்கம் 332 – 335). வடமொழியில் ''தனுவினுள் ஆன்மாவுளது'' என்று வெறுமையாயுள்ளது.

80. நான்காம் சூத்திரம் ''ஆத்மாந்த : கரணாதந் யோப் யந்விதோ மந்த்ரிபூபவத் அவஸ்தா பஞ்சகஸ்தோ அதோமல ருத்தஸ்வத்ருக் க்ரிய:'' என்பது. இதன் நேர் மொழி பெயர்ப்பு ''அந்தக்கரணத்துக்கு அந்நியனாயினும், ஆன்மா தனது ஞானக்கிரியைகள் மலத்தினால் மறைக்கப்பட்டிருப்பதால், மந்திரியுடனிருக்கும் அரசன் போல, அந்தக் கரணத்தோடு கூடியிருப்பதால் ஐந்தவஸ்தைகளில் இருப்பவன் ஆகிறான்'' என்பது.

மெய்கண்டார் திருவாக்கு ''அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்று அவை சந்தித்தது ஆன்மா சகச மலத்துணராது அமைச் சரசேய்ப்ப நின்று அஞ்சவத்தைத்தே'' என்பது. அறியாமையின் காரணம் ஆணவ மலம் என்பதை ''சகச மலத் துணராது'' என்று மெய்கண்டார் விளக்குகிறார்.

வடமொழியில் பொதுவாக மலத்தால் மூடப்பட்ட என்றிருப்பதால், ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்களுள் எதனால் மூடப்பட்டதென்பது விளங்காது. மாயா மலம் மறைப்பது என்று கூறும் வாதிகளை வடமொழிச் சூத்திரம் கொண்டு மறுக்க இயலாது.

81. மலத்தால் மூடப்பட்ட கிரியை என்பதற்கு நேராக மெய்கண்டார் வாக்கில் ஒன்றுமில்லை.

●

‘சிவஞான போதம்’ மொழிபெயர்ப்பல்ல

# மூல நூலே – 1



## முனைவர் ந. இரா. சென்னியப்பனார்

தில்லைவாழ் அந்தணர்களில் ஒருவர் உமாபதி சிவம் ஆவார். சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கில் எட்டு நூல்களைப் பாடியவர். சந்தானக் குரவர்களில் இறுதியாக வைத்து எண்ணப்படுபவர்.

1. மெய்கண்டார், 2. அவரது மாணாக்கர் அருள்நந்திசிவம், 3. அருள்நந்தி சிவத்தின் மாணாக்கர் மறைஞானசம்பந்தர், 4. மறைஞான சம்பந்தரின் மாணாக்கர் உமாபதி சிவம் ஆவார்.

உமாபதிசிவம், தாம் பாடிய நூல்களில் ‘சிவ ஞானபோதம்’ மொழி பெயர்ப்பு என்று எங்கும் குறிப்பிடவில்லை.

*“தெரித்தகுரு முதல்வர் உயர்*
*சிவஞான போதம்*
*செப்பினர் பின்பு அவர்*
*புதல்வர் சிவஞான சித்தி*
*விரித்தனர்... ... ... ...”*



கா.சு.பிள்ளை



அவ்வை சு. துரைசாமிப்பிள்ளை

என்று உமாபதி சிவம் தாம் பாடிய ‘சிவப் பிரகாசம்’ என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

‘சந்தானக்குரவரில் முதல்வரான மெய் கண்டார் சிவஞான போதம் செப்பினார்’ என்றுதான் குறிப்பிட்டுள்ளாரே தவிர, மொழிபெயர்த்தார் என்று குறிப்பிடவில்லை.

மெய்கண்டாரின் நேரடி மாணாக்கரான அருள்நந்திசிவம், சிவஞானபோதத்திற்கு விளக்கமாக ‘சிவஞான சித்தியார்’ என்ற நூலைப் பாடியுள்ளார். அருள்நந்திசிவம் தம் குருநாதராகிய மெய்கண்டாரைச் சைவ சித்தாந்தம் பற்றி வினாவும் முறையில் பாடப்பட்ட நூல் ‘இருபா இருபஃது’ ஆகும். இரண்டு நூல்களிலும் சிவஞானபோதம் மொழி பெயர்ப்பு நூல் என்று அருள்நந்திசிவம் எங்கும் குறிப்பிடவில்லை.

நேரடி மாணாக்கரோ, சந்தானக்குரவரோ குறிப்பிடாத ஒன்றைப் பின்வந்த வடமொழிப் பற்றாளர் மொழிபெயர்ப்பென்று கூறிவிட்டார். அதனை வைத்துக்கொண்டு சிவஞான போதம் மொழிபெயர்ப்பு என்று சிலர் எழுதினார்கள்.

மறைமலையடிகளார், கா.சு.பிள்ளை, ம. பாலசுப்பிரமணியம், அவ்வை சு. துரைசாமிப்பிள்ளை முதலிய தமிழ்ப் பேரறிஞர்கள் சிவஞானபோதம் மொழிபெயர்ப்பு நூல் அன்று, தமிழில் தோன்றிய முதல் நூலே என்று நிலைநாட்டியுள்ளனர்.

அவற்றுள் ம. பாலசுப்பிரமணியம் 120 காரணங்களைக் காட்டிச் ‘சிவஞானபோதம் மொழி பெயர்ப்பு நூல் இல்லை, தமிழ் நூலே’ என்று உறுதி செய்துள்ளார்.

நீண்ட நாட்களுக்கு முன்பே இவையெல்லாம் முடிவு செய்யப்பட்டுள்ளன. மீண்டும் இந்தப் பிரச்சனையைக் கிளப்பும் நோக்கம்தான் என்ன? அந்நோக்கம் நல்நோக்கமாகத் தெரியவில்லை. அதில் ஏதோ உள்நோக்கம் தெரிகிறது. தமிழ் இப்போதும் 8 கோடி மக்களால் பேசப்படுகிற உயிருள்ள மொழி. யாராலும் பேசப்படாத செத்துப் போன மொழியல்ல.

●

## 'சிவஞான போதம்' மொழிபெயர்ப்பல்ல

# மூல நூலே – 2

முனைவர் தெ. முருகசாமி

**2018** ஏப்ரல் 'ஓம் சக்தி' இதழில் வந்த 'சிவஞான போதம்' பற்றிய கருத்தாடலில், சிவஞான போதம் தமிழ் நூலே என்பதாகப் பதிவு செய்கிறேன். இதுபற்றி 120 காரணங்களைக் கூறி உண்மை நிறுவும் சைவச்செம்மல் ம. பாலசுப்பிரமணியம் கருத்துகளுக்குக் கூடுதலாகச் சிலவற்றையும் சேர்த்துக் கொள்ளலாம்.

சமஸ்கிருதத்திற்கு வேதம் – பிரமாணம். தமிழுக்கு ஆகமம் பிரமாணம்.

வேதத்திற்குப் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையான சித்தாந்த நெறி கிடையாது. இருந்திருந்தால் அதன் வழியான ஆகமநெறி வழிபாடுகள் வடக்கே வளர்ந்திருக்க வேண்டும்; இல்லை!

தமிழ், சிவஞான போதத்தின் சாரமான பதி, பசு, பாசத் தொடர்பான நூல்கள் தமிழில் கிளைத்து மெய்கண்ட சாத்திரம் 14 எனப் பெயர் பெற்றது போல, வடக்கே சமஸ்கிருத சிவஞான போதம் கிளைக்கவில்லை; ஏன்?

ஏனெனில், அடிப்படையிருந்தால் தான் வேர் பிடித்து ஊன்றிக் கிளைக்க முடியும் என்பதால், அந்நிலை இல்லாத காரணத்தாலே அது பரவாதபோது தமிழ்ச் சிவஞான போதத்திற்குச் சமஸ்கிருத நூல் மூலமாக வாய்ப்பே இல்லை!

சித்தாந்த உண்மையை உணர்த்தும் சிவஞான போதம் வடக்கே இருந்திருந்தால், விவேகானந்தர் 'சித்தாந்தம் தெரியாமல் போச்சே' எனக் கவலைப் பட்டிருக்க மாட்டார்!

எந்த ஒரு மொழியிலும் இலக்கியம் கண்டதற்குத்தான் இலக்கணம் உருவாகும். அதன்படி சைவசமயக் குரவர்கள், திருமூலர், காரைக்கால் அம்மையார் முதலிய அருளாளர்களின் தோத்திரங்களின் பிழிவாக உருவாகியது தான் சாத்திர நூல்கள். இவை தமிழில் உருவாயின.

இந்த முறைப்பாட்டின்படி, சமஸ்கிருத சிவஞான போதத்திற்கு முந்தைய சமஸ்கிருதத்தில் அமைந்த தோத்திரம் உண்டா? இல்லை!

கட்டுரையில் குறித்த செய்தி ஒன்றில் "ஞானியார் சுவாமிகளும் நல்லுசாமிப் பிள்ளையும் சைவ சித்தாந்த மகா சமாஜத்தைத் திராவிட வாசனையால் பெருமன்றமாக மாற்றியது போல் சமஸ்கிருத சிவஞானபோதம் தமிழானது" எனக் குறித்தது உண்மையன்று. சிவத்திரு ஞானியார் சுவாமிகள் வரலாற்றைப் படித்தால் இதன் பேருண்மை விளங்கும்.

சைவ சித்தாந்தநெறி பரப்பும் ஓர் அமைப்பை ஞானியார் தலைமையில் உருவாக்க நினைத்த போது வடக்கே ஆரிய சமாஜம் என இருந்தது போன்ற பெயர் அமைப்பிலேயே மகாசமாஜம் உருவானது. இந்த உருவாக்கத்திற்கு வடக்கே உள்ள தத்துவக் கருத்தாடல் மூலம் அன்று.

இந்த மகாசமாஜம் தோன்றிய இடம் கடலூர் திருப்பாதிரிப் புலியூரில் உள்ள ஞானியார் திருமடம். இந்தப் பெயர் தான் காலப்போக்கில் பெருமன்றம் ஆனதேயன்றி, வடக்கே தோன்றிய சமாஜம் நல்லுசாமிப் பிள்ளையால் ஞானியாரால் பரப்பப்பட்ட நிலையில், திராவிட வாசனையால் மகாசமாஜம் என்றில்லாமல் பெருமன்றமானது என்பது பெரும் பிழையாகும்.

இதுபற்றிய தெளிவை ஞானியார் அடிகள் பற்றி வரலாறு எழுதிய திருக்கோவலூர் புலவர் பா. வேல்முருகன் என்பவரின் எழுத்தால் உணரலாம்.

உண்மையான வரலாறு இப்படியிருக்க, கற்பனையாக எழுதிய கவனச் சிதறல் போலத்தான் சமஸ்கிருத சிவ ஞான போதம் தமிழானது என்பது மான உண்மையில்லாக் கருத்து! ●



## ‘சிவஞான போதம்’ மொழிபெயர்ப்பல்ல

# மூல நூலே –3

மொழிப் பற்று என்னும் ஆசை வடமொழி வாணர்களுக்கு நம்மை விடப் பன்மடங்கு இருந்தது என்பதை வரலாறு மெய்ப்பிக்கிறது. தாங்கள் பேசும் வடமொழியை ஒரு மொழி என்று கருதாமல் அது, தேவ பாஷை ‘தெய்வ மொழி’ என்று ஆளும் அரசர் களையும் அவர்களை அணைந்து வாழும் பொது மக்களையும் வடமொழி வாணர்கள் நம்ப வைத்தனர். தேவ பாஷையாகிய சமஸ்கிருதத்தில் ஓதி னால்தான் இறைவனுக்கு இனிக்கும் என்ற மூட நம்பிக்கையை நம்பவைப் பதில் அவர்கள் வெற்றி பெற்றனர்.

வடமொழி வாணர்கள் தம் கூர் மதி யால் தமிழ் மொழியின் இனிமையால், தங்கள் மந்திரங்களுக்கு வரப்போகும் பேராபத்தை உணர்ந்தனர். செந்திறத்த தமிழோசை திருக்கோயில்களின் உள்ளே நுழையாதவாறு செய்ய முனைந் தனர் தெய்வங்களுக்குத் தெய்வங்கள் பேசும் தேவ பாஷையாகிய சமஸ் கிருதத்தை ஓதினால்தான் தெய்வங்கள் நம்பும் என்று அரசர்களை நம்ப வைத்து தேவாரம் முதலிய தீந்தமிழ்ப் பாக் களைத் திருக்கோயில்களிலிருந்து வெளி யேற்றினர்.

நம்பத் தகாத ஒன்று. உண்மையில் இங்கு நடந்திருக்கிறது. சொன்னால் நம்ப மாட்டீர்கள்! ஆனால் நம்பியாக வேண்டுமென்று சரித்திரம் சொல்கிறது. அரசு வழியாக மூவர் தேவார ஏடுகளை யெல்லாம் தில்லைத் திருக்கோயிலுக்குக் கொண்டுவரச் செய்தனர். அரசு ஆணையைப் பெற்று அவற்றையெல்லாம் ஓர் இருட்டறையில் குவித்துப் பூட்டு இட்டுப் பூட்டினர். உலகுக்கு ஞான ஒளி தரவந்த தெய்வ தேவாரப் பாடல்கள் இவ்வாறு இருட்டறையில் பல ஆண்டுகள் பூட்டப் பட்டுக் கிடந்தன.

தமிழகத்துக்கு இராசராசன் என்னும் பேரரசன் ஆட்சிக்கு வந்தான். அசம்பாவிதமாக தேவாரப் பாடல் களை அவன் கேட்க நேர்ந்தது. இந்தப் பாடல்கள் எங்கே கிடைக்கும் என்று அவன் வினவ, அவையெல்லாம் தில்லையில் ஓர் இருட்டறையில் பூட்டப் பட்டுக்கின்றன என்று அறிவித்தனர். உடனே இராசராசன் தில்லை சென்று பூட்டப்பட்டுக் கிடந்த அந்த அறையைத் திறக்க வைத்தான். அங்குக் கண்ட காட்சி! ஏடுகள் கரையான் புற்றாகிக் காட்சியளித்தன. எஞ்சியதையெல்லாம் திரட்டித் திருமுறைகளாகத் தொகுத் தான் மன்னர்மன்னன் இராசராசன்.

தில்லை மூவாயிரவர் அந்தத் திரு முறைகள் நாட்டில் பரவிவிடும் என்ற அச்சத்தால் அவற்றை வெளியே எடுத் துச் செல்லவிடாமல் தடுத்தனர். இதற்குப் பாடியவர்கள் வந்து கேட்டால் இவற்றை எடுத்துச் செல்லலாம் என்றனர். வட



முனைவர் அமுதன்

மொழி வாணர்களைவிடக் கூர்மதிமிக்க இராசராசன் தேவார மூவரின் திரு உருவச் சிலைகளைக் கொண்டு வந்து அறையின் முன் நிறுத்தினான். சிலைகளே தெய்வங்கள் என்று பூசை புரிந்து வரும் அவர்களால் மறுமொழி சொல்ல இயலவில்லை. வேறு வழியின்றி மிஞ்சியிருந்த ஏடுகள் கிடைத்தன.

இராசராசனுக்கு இதனால் **திருமுறை கண்ட சோழன்** என்ற திருப்பெயரை வரலாறு அவனுக்குச் சூட்டி மகிழ்ந்தது.

“தென்னாட்டுச் சிவனை நாங்கள் தான் கொடுத்தோம் என்றும் 12 சூத்திரப் பொருள்களை மொழி பெயர்த்துக் கொண்டு நாங்கள் தான் ஆன்மீகத்தை உலகிற்குக் கொடுத்தோம்” என்று அவர்கள் வாதாடத் தொடங்கியுள்ளனர்.

வீட்டுக்கு வாடகைக்கு வந்தவர்கள் வீட்டுக்குரியவர் வெளியூர் சென்றிருந்த போது வீடு எங்களுடையது என்று சொல்வதற்கும் மொழிபெயர்த்த 12 சூத்திரங்களை வைத்துக் கொண்டு சிவஞான போதம் எங்கள் நூல் என்று சொல்வதற்கும் என்ன வேறுபாடு?

நந்தனார், திருப்பாணாழ்வார் தொடங்கி, தமிழ்ச் சமய அன்பர்களுக்கு நிகழ்ந்து வரும் சோதனைகள் எத்தனை! எத்தனை! தமிழ் ஊர்ப் பெயர்களையெல்லாம் வடமொழி அன்பர்கள் மாற்றத் தொடங்கிவிட்டார்கள்.

பழங்கள் சூழ்ந்த மலை என்ற ஊர்ப் பெயர் பொருள் புரியாது ‘பழமலை’ என்பதற்குக் கிழத் தன்மை உடைய மலை என்று பொருள் கொண்டு பழமலையை ‘விருத்தகிரி’ என்று மொழி பெயர்த்தார்கள். அங்கிருக்கும் கடவுளை விருத்தகிரீஸ்வரன் என்று ஆக்கினார்கள். விருத்தகிரி என்றால் கிழத் தன்மையுடைய ஈசனிருக்கும் மலை என்று நரைத்த முடியைக் காட்ட ஈசன் தலையில் திருநீறு கொட்டிப் பூசை செய்கிறார்கள்.

வள்ளலார் இந்த விருத்தாசலத்திற்கு வந்தபோது, பழமலை நாதன் கிழமலை நாதனாகி நரைத்த தலையோடு கலங்கிய நிலையில் இருப்பதைக் கண்டு வருந்தினார். பிறப்பும் இறப்பும் மூப்பும் அற்ற இறைவனுக்கே கிழவனாகும் இந்தக் கதியா? என்று கண் கலங்கினார்.

**“பழமலையைக் கிழமலையாய்ப் பகருவது என் உலகே?”** என்று தன் ஏக்கத்தைத் திருவருட்பாவில் பதிந்து விட்டுப் போயுள்ளார்.

வடமொழி வாணர்களுக்குத் தமிழ் நூல்களுக்கு வடமொழிப் பெயரிட்டுத் தாங்கள் தான் நூலை வரைந்தவர்கள் என்னும் வழக்கம் மெய்கண்டார்க்கு முன்னாலேயே இருந்தது.

இரண்டு சான்றுகள், ஒன்று முழுக்க முழுக்கத் தென்மதுரையில் நிகழ்ந்த கூத்தப் பெருமானின் திருவிளையாடல்களை 64 ஆக விரித்துத் ‘திருவிளையாடற் புராணம்’ என்று இரண்டு புலவர் பெருமக்கள் (பெரும்பற்றப் புலியூர் நம்பியும் பரஞ்சோதி முனிவரும்) உளம் இனிக்கும் புராண காவியங்களாக இயற்றிப் போய் உள்ளனர்.

இதனை “ஹாலாய்ய மகத்துவம்” (ஹாலாய்யம் – ஆலவாய் (மதுரை)) என்று மொழிபெயர்த்துக் கொண்டு முதல் நூல் எங்கள் நூல் என்றனர். பக்திச் சுவை நனிசொட்டச் சொட்டப் பாடியுள்ள பெரிய புராணத்தை, வடமொழியில் மொழிபெயர்த்து வைத்துக் கொண்டு, பெரிய புராணம் ‘பக்த ஜன மகாத்மியம்’ என்ற வடமொழி நூலிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது என்று கூறத் தொடங்கிவிட்டனர்.

வடமொழி வாணர்களுக்கு வடக்கு தான் உயர்ந்தது என்றும் சூரியன் சஞ்சரிக்கும் பாதையில்கூட உத்தராயணமே உயர்ந்தது என்றெல்லாம் கூறித் தமிழர் மனத்தில் திணிக்கத் தொடங்கினர். தென்திசையை ‘யமன் திசை’ என்று நம்ப வைக்க ஓயாது முயன்றனர்.

உண்மையில், தென்திசை என்பது உலகின் இறைஞானம் பிறந்த திசை, அந்த நன்றியுணர்வினால்தான் தட்சிணாமூர்த்தியாகிய தென்திசைக் கடவுள், கல்லாலின் கீழிருந்து ஞானம் உரைத்ததை நினைவூட்டி, ஆலமர் கடவுளும் ஆனந்த கூத்தனாகிய நடராச மூர்த்தியும் தென்திசை நோக்கியே எத்திசை நோக்கிய ஆலயமாயினும் இன்றும் காட்சியளிக்கின்றனர்!

தென்னாடு உடைய சிவன் இன்றைய தென் னாட்டுக்குள் அடங்கிய சிவன் அல்லன். அன்று வாழ்ந்த 49 தென்னாடு களையும் உள்ளடக்கிய குமரிக் கண்டத்தைக் குறிப் பது அது. கிழக்கே ஆஸ்தி ரேலியாவையும் மேற்கே தென்ஆப்பிரிக்காவிற்குக் கீழ் உள்ள மட காஸ்கர் தீவுகளையும் உள்ளடக்கிய தென்னாடு அது.


மாணிக்கவாசகர்

அன்றிருந்த நாடுகள் அத்தனைக்கும் கடவுள் உணர்வை உண்டாக்கிய சிவம் ஆதலால் 'எந்நாட்டவர்க்கும் இறைவா!' என்று போற்றினார் மணிவாசக அடிகள்.

பரத நாட்டியம் வல்ல பத்மா சுப்பிர மணியம் அவர்களுக்கு, ஆஸ்திரேலியா வில் நடன நிகழ்ச்சி நிகழ்த்த அழைப்பு வந்தது. காஞ்சிப்பெரிய சுவாமிகளிடம் ஆசிபெற வந்தார் அவர். விடைபெறும் போது சுவாமிகள் சொன்னார்கள்: "ஆஸ்திரேலியப் பழங்குடிகள் ஆடும் கூத்து நடனத்துக்கு என்ன பெயர் என்று கேட்டுவிட்டு வந்து எனக்குச் சொல்!" என்று வேண்டினார்.

நடன நிகழ்வு முடிந்து சுவாமி களைப் பார்க்க வந்த பத்மா சுப்பிர மணியத்தை "நான் சொன்னதைக் கேட்டு வந்தாயா?" என்றார் சுவாமிகள். "அந்த நடனத்தின் பெயர் சிவ நடனம்" என்று சொன்னார்கள் என்றார் அந்த நடன மங்கை!

தென்னாட்டவர் கண்ட சிவத்தைத் தன் நாடு கண்டதாக ஆகமாச் சூத்திர மாகப் பதிந்து கொண்டு, உலகுக்குப் பரப்ப ஒரு சமயக் களவு நிகழ்ந்திருக் கிறது. அதன் விளைவாகத்தான் தென் தமிழில் மெய்கண்டார் கண்ட 'சிவ ஞான போதம்' எனும் செம்பொருள் ஞானம், ரௌரவ ஆகமத்தில் 12 சூத்திர மாக முன்பே இருந்தது. அதைத்தான் மெய்கண்டார் தமிழில் பெயர்த்தார் என்று புனைகதையாகப் பரப்பத் தொடங்கினர்.

"பொய்கண்டறியாத புனிதமெனும் அத்துவித
மெய்கண்டார் இன்னருளை மேவு நாள்
எந்நாளோ?"

என்று தாயுமானவர் முத லான மெய்ஞ்ஞானிகள் போற்றும் "மெய்" கண்டா ரைப் போற்ற இயலா விடினும் தூற்றாமல் இருப் பது நல்லது.

"உலகுக்குத் தமிழர் கொடுத்த ஒப்பற்ற கொடை சைவ சித்தாந்தம்" என்று வெள்ளை நிறமும் வெள்ளை மனமும் கொண்ட ஜி.யு.போப் முதலிய பேரறி ஞர்கள் போற்றிப் போயுள்ளனர்.

ஜி.யு.போப் கூறியுள்ள வாசகங்கள் இவை : "புராணங்கள், நீதி இலக்கியங் கள், சாத்திரங்கள், தத்துவ நூல்கள், இலக்கண, இலக்கியங்கள் என வட மொழியில் பல்வகை நூல்கள் உள்ளன. ஆனால் வடமொழியில் உள்ள இவற் றைக் காட்டிலும் அழகியலும் கவி யழகும், ஆழ்பொருளும் தத்துவச் சிறப் பும் கொண்ட தமிழ் நூல்கள், வட மொழி நூல்களுக்கு முன்பே எழுந்த முதல் நூல்கள், தமிழ் மொழியில் முன்பே இருந்தன என்பதை இலக்கிய ஆய்வாளர்கள் கருத்தில் கொள்ள வேண்டும்" (ஜி.யு. போப் - xxxi).

சிவஞானபோதம் மொழிபெயர்ப்பு நூல் என்பார், முக்கியமாக இவ்வேண் டலைக் கருத்தில்கொள்ள வேண்டும். போப்பின் வேண்டல் இது!

தமிழ் ஆய்ந்த பேரறிஞர்கள் மேற் பார்வையில், தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிட்ட கலைக் களஞ்சியமாகிய வாழ்வியற் களஞ்சியம் இவ்வாறு கூறுகிறது: **"மெய்கண்டார் தம் நூலினை வடமொழியிலிருந்து மொழிபெயர்த் தார் என்னும்யானது என்பதும் சிவ ஞான போதம் வழக்கு உள்ளது. அவ் வழக்குப் பொய்தமிழ் முதல் நூலே என் பதும் இன்று அறிஞர் பலரும் ஏற்றுக் கொள்ளும் முடிபாகும்"** (வாழ்வியற் களஞ்சியம் : தொகுதி 9 – பக்–54)

எனவே, குமரியொடு வடஇமயம் வரை ஒரு மொழிவைத்து உலகாண்ட தமிழ்ப் பெரு ஞானம், சைவம் என்றும் வெல்லும்; ஏனெனில் அது கண்டதும் சொல்வதும் சத்தியம்! சத்தியத்தை வெல்வார் இன்னும் தோன்றவில்லை. ●

# பயணம் தனியே!

இயகோகா சுப்பிரமணியம்



வெற்றி வரும்போது
தொற்றி உன்தோளைப்
பற்றி வருவார்கள் பலரும் – நிலை
சற்று சரியுதெனில்
முற்றும் புறந்தள்ளிக்
குற்றம் சொல்வார்கள் தினமும்!

அள்ளித் தரும்போது
துள்ளிக் குதித்து விடி
வெள்ளி எனச்சொல்லி மகிழ்வார் – ஓர்
எல்லை தனைவகுத்து
இல்லை என்றவுடன்
தொல்லை இவனென்று இகழ்வார்!

குறைகள் எதுவுமற்ற
இறைவன் இவனெனக்கு
முறையில் உறவு என்று நெருக்கும்! – உயிர்
மறையும் போதுவந்து
பிரியும் சொத்தில்பங்கு
குறையுதென்று கண்டு வெறுக்கும்!

வறுமை தின்றாலும்
வளமை என்றாலும்
தனிமை மட்டும்தான் துணையே – நீ
ஜனனம் அடைந்ததுவும்
மரணம் அடைந்தவுடன்
பயணம் போவதும் தனியே!



மாநாட்டில் நிறுவனர் மா. ரங்கநாதன், மாறன்ஜி, மது. இராமகிருஷ்ணன், கோ. சித்தர், சர்வோதயா அசோக்குமார், அகிம்சா கார்த்திகேயன் மற்றும் பிரமுகர்கள்.

## ஆனைமலை காந்தி ஆசிரமத்தில்

# இயற்கை வாழ்வியல் மாநாடு!

**நா**ம் அன்றாடம் பயன்படுத்தும் பொருள்களில் பெரும்பாலானவை உடல் நலத்திற்குத் தீங்கு விளைவிக்கும் இரசாயனக் கலப்புள்ளவையாக உள்ளன. இவற்றால் சுற்றுச்சூழலுக்கும் பெரும் கேடுகள் ஏற்படுகின்றன. நாம் வாழும் இந்த மண் அடுத்த தலைமுறைக்கும், மனிதர்களல்லாத பிற அனைத்து உயிர்களுக்கும் சொந்தமானது என்ற எண்ணமே இல்லாமல் நாம் உலகை நச்சாக்கி வருகிறோம்.

இந்தத் தீமைகள் குறித்துச் சுற்றுச் சூழலியல் ஆர்வலர்களும், ஆய்வாளர்களும் பல எச்சரிக்கைகளைத் தந்து, நம்மை நல்வழிப்படுத்தி நமக்கும் உலகிற்கும் நலம் தருவதற்கு முயன்று வருகிறார்கள். நாம் அதைப் பின்பற்றி நடத்தல் வேண்டும்.

அவ்வகையில், பொள்ளாச்சி ஆனைமலையில் அமைந்துள்ள மகாத்மா காந்தி ஆசிரமத்தில் சென்ற மே 5, 6 ஆகிய இரு நாட்கள் மகாத்மா காந்தி நினைவு 'ஆன்மீகம், சைவ உணவு, இயற்கை விவசாயம் மற்றும் இயற்கை வாழ்வியல் மாநாடு' நடைபெற்றது.

மாநாட்டின் முதல் நாள் மகாத்மா காந்தி ஆசிரமத்தின் நிறுவனர் திரு. மா. ரங்கநாதன் அனைவரையும் வரவேற்றார்.

காந்தி கிராம கிராமியப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் முனைவர் ந. மார்க்கண்டன் தலைமை உரையாற்றினார். அவர் தனது உரையில், "இயற்கையில் நிறைய உள்ளன. நம் தேவைக்கு மட்டுமே அதில் எடுத்துக் கொள்ள வேண்டும். இயற்கை வேளாண்மையை அரசு ஊக்குவிக்க வேண்டும். ரசாயன உரங்கள், பூச்சி மருந்துகளைத் தடை செய்ய வேண்டும். இவற்றால் மண் மலடாகி விட்டது.

இயற்கை உணவு ஆரோக்கியத்தை அளிக்கும். வேளாண் பல்கலைக்கழகம் இயற்கை வேளாண்மையை அங்கீகரித்துக் கற்றுத்தர வேண்டும். பள்ளிக் கல்வி முடிக்கும் மாணவன் தொழிற்கல்வி எதுவும் தெரியாமலேயே வெளியே வருகிறான். பொது அறிவும், நாட்டு வரலாறும் தெரியாமல் இருக்கிறான். பல்கலைக் கழகங்களால் அவற்றின் சுற்றுப்புறம் தன்னிறைவு அடைய வேண்டும் என்றார் காந்தி" எனக் கூறினார்.

ஆர்ஷ வித்யா பீடத்தின் ததேவானந்த சரஸ்வதி சுவாமிகள் ஆன்மீக உரையாற்றினார். அவர் தனது உரையில், "உணவுப் பழக்கவழக்கம் நமது குணங்களை மாற்றும். எளிமையாகச் செரிப்பதை, இயற்கையாகக் கிடைப்பதை உண்ண வேண்டும். மனமே அனைத்திற்கும் காரணம். மனம் பக்குவப்பட வேண்டும். ஆன்மிகத்தின் உச்ச நிலை ஞானம் அடைவது" என்றார்.

தஞ்சை லோகோவின் இயற்கை உணவு அங்காடியின் நிறுவனர் திரு. கோ. சித்தர் அவர்கள் 'வளமான உணவும், நலமான வாழ்வும்' என்ற தலைப்


மாநாட்டில் கலந்து கொண்டோர்.

பில் உரையாற்றினார். அவர் தனது உரையில், "நம் பிள்ளைகளை வளர்ந்த நாடுகளுக்குக் கூலித் தொழிலாளி களாகத் தயாரித்து வருகிறோம். அலோ பதி மருந்துகள் நோயை வளர்ப்பவை யாக உள்ளன" என்று கூறினார். அத் துடன் உடலுக்கு நலம் தரும் இயற்கை உணவு வகைகளைப் பற்றி விளக்கமாக எடுத்துக் கூறினார்.

ஹீலர் மகேஷ்குமார், 'இல்லறம் இனிமையாகட்டும்' என்ற தலைப்பில் உரை நிகழ்த்தினார்.

பிற்பகல் நிகழ்வில் கோ. சித்தர் அவர்கள் 'மகப்பேறு ஒரு வரம்' என்ற தலைப்பிலும், திருமதி சுபாஷினி ஸ்ரீதர் 'இயற்கை விவசாயத்தில் பெண்களுக் கான தொழில்கள் மற்றும் விற்பனை' பற்றியும், திருமதி அகிலாண்டேஸ்வரி, 'இயற்கை உணவும், உண்ணா நோன்பும்' பற்றியும், உரை நிகழ்த்தினர்.

இரண்டாம் நாளான *6.5.2018* அன்று திரு. ஹீலர் பாஸ்கர் அவர்கள், நாம் பயன்படுத்தும் பொருள்களை இயற்கை முறையில் தயாரிப்பது பற்றி விளக்கமாக எடுத்துரைத்தார். சிவகாசி 'தாய்வழி இயற்கை உணவக' நிறுவனர் மாறன்ஜி அவர்கள், 'நோய் தீர்க்கும் பாரம்பரிய உணவுகள்' என்ற தலைப் பில் அந்த உணவுகள் தயாரிப்பு முறை யையும், பயன்களையும் விளக்கினார். திருமதி பூ. சாய்தேவி 'என் சுவாசம் என் குழந்தை' என்ற தலைப்பில் பேசினார்.

பிற்பகல் நிகழ்வில் பொள்ளாச்சி இயற்கை வேளாண் விஞ்ஞானி மது இராமகிருஷ்ணன் அவர்கள் இயற்கை வேளாண்மை குறித்து உரையாற்றினார். திரு. பாலா அவர்கள் காய்கறி மருத் துவம் பற்றியும், 'ஓசை' சுற்றுச்சூழல் அமைப்பின் திரு. காளிதாசன் அவர்கள் சுற்றுச்சூழல், இயற்கை பற்றியும், உரை யாற்றினர்.

மாலை, திருமதி வசந்தா ரங்கநாதன் அவர்கள் மாநாட்டுத் தீர்மானங்களை வாசித்தார். ஆசிரம நிறுவனர் திரு. மா. ரங்கநாதன் அவர்கள் நன்றியுரையுடன் மாநாடு இனிதே நிறைவுற்றது.

மாநாட்டில் கலந்து கொள்ள வந்திருந்தவர்கள் அனைவரும் இயற்கை ஆர்வலர்களாக இருந்தனர். நாம் வாழ்க்கையில் தவிர்க்க வேண்டியவை எவை? சேர்த்துக்கொள்ள வேண்டி யவை எவை என்பதை அனைவருக்கும் இந்த மாநாடு சிறப்பாக எடுத் துரைத்தது.

பிளாஸ்டிக் தண்ணீர் பாட்டில்கள், பாலிதின் பைகள், இரசாயனப் பற் பசைகள், சோப்புகள், ஷாம்புகள் முதலி யன ஆசிரமத்திற்குள் அனுமதிக்கப்பட வில்லை. அங்கேயே தூய்மையான குடி நீர் மண்பானையிலிருந்து வழங்கப் பட்டது. உடலுக்கு நலம் தரும் இயற்கை உணவுகளே இரண்டு நாள்களும் வழங்கப்பட்டன. இரண்டு நாள்களும் ஓர் ஒழுங்கான, கட்டுப்பாடான, இயற் கையான வாழ்வு அங்கே இருந்தது.

மகாத்மா காந்தி ஆசிரமத்தைத் தொடங்கி, இந்த ஆண்டு *50* ஆண்டுப் பொன்விழாவைக் கண்டுள்ள நிறுவனர் திரு. மா. ரங்கநாதன் அவர்களின் ஆசிரமத் தொண்டு பாராட்டத்தக்கது.

**– ஆர்.வி.**

நல்வாழ்த்துக்களுடன்!



ஜோதி ஜோதி ஜோதி சுயஞ் → ஜோதி ஜோதி ஜோதி அருள்
ஜோதி ஜோதி ஜோதி பரஞ் → ஜோதி ஜோதி ஜோதி சிவம்

# ஏ.பி.டி. இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

**சக்தி பைனான்ஸ் பில்டிங், டாக்டர் நஞ்சப்பா ரோடு,**
**கோயமுத்தூர் - 641 018 போன் : 0422-2233982, 2233983**

விவாதம்

# வேண்டும் நீட் தேர்வு வேண்டாம் சோதனை!

**த**மிழ்நாட்டில் 'நீட்' தேர்வு என்ற தேசியத் தகுதி மற்றும் நுழைவுத் தேர்வு நடத்துவதற்குச் சென்ற ஆண்டே நீதிமன்றத்தால் தீர்ப்பளிக்கப்பட்டது. ஏனெனில், நீட் தேர்வு தமிழ்நாட்டு கிராமப்புற மாணவர்களைச் சிரமப் படுத்தக்கூடியது என்றும், நகர மாண வர்களுக்கு இதில் அவ்வளவு சிரமம் இருக்காது என்றும் அனைத்து அரசியல் கட்சிகளின் தலைவர்களும்

உச்சநீதிமன்றம் உரிய நேரத்தில் தீர்ப்பை வழங்காமல், கடைசி நேரத்தில்தான் நீட் தேர்விற்கு ஆதரவாகத் தீர்ப்பு வழங் கியது. இவ்வாறு, காலதாமதமான இந்தத் தீர்ப்பால், மாணவர்கள் அதிர்ச்சி அடைந்தனர். அதனால், பல பேர் நீட் தேர்வை எழுத முடியாமல் பின்தங்கி விட்டனர்.

ஏறக்குறைய 80 ஆயிரம் மாணவர்





தேசிய கீதத்தைப்போல ஒரே குரலில் பாடியதைப் போலக் கூறினார்கள்.

கூறியது மட்டுமல்ல, நீட் தேர்வை வரவிட மாட்டோம் என்று மாநிலக் கட்சிகள் சவால்விட்டுப் பேசின. மத்திய ஆளும் கட்சி அமைச்சர்களும் இதே போல நீட் தேர்வை மத்திய ஆட்சி மூலம் நிறுத்தி விடுவோம் என்றும் தினந்தோறும் வாக்குறுதி அளித்தனர். நீதிமன்றத்தில் வழக்குத் தாக்கலாகியது.

கள் நீட் தேர்வை எழுதினார்கள். நீட் தேர்வில் அந்த மாணவர்கள் பெற்ற மதிப்பெண்கள் அடிப்படையில் மருத் துவக் கல்விக்கான இடங்கள் ஒதுக் கப்பட்டன.

தமிழ்நாட்டிலுள்ள மருத்துவக் கல்விக்கான இடங்கள் 4657. அவற்றில் அகில இந்திய மாணவர்களுக்கு 10 சதவீதம் இட ஒதுக்கீடும் உண்டு. அவை போக, மிச்சமுள்ள இடங்கள்தான் நீட்

தேர்வு மூலம் நிரப்பப்பட்டது. இவற்றில் பிற்படுத்தப்பட்ட சாதியினர், மிகவும் பிற்படுத்தப்பட்ட சாதியினர், தாழ்த்தப் பட்ட சாதியினர், மலைவாழ் மக்கள் ஆகியோருக்கு இட ஒதுக்கீடுகள் உண்டு.

ஏறக்குறைய 69 சதவீத இடங்கள் இந்த அடிப்படையில் நிரப்பப்படு கின்றன. மீதமுள்ள 31 சதவீத இடங்கள் பொதுப்போட்டி மூலம் நிரப்பப்படு கின்றன. இதிலேயே ஒரு குறைபாடு. உச்சநீதிமன்றம் இட ஒதுக்கீட்டுக்கான வரையறையை 50 சதவீதத்திற்கும் அதிக மாக இருக்கக்கூடாது என்று நிர்ண யித்துள்ளது.

மற்ற மாநிலங்களில் இட ஒதுக்கீடு 50 சதவீதம்தான் இருக்கிறது. ஆனால், தமிழ்நாட்டில் மட்டும் இந்த 50 சதவீதம் என்பது 69 சதவீதமாக அமல் படுத்தப்பட்டு வருகிறது. கூடுதலாக உள்ள 19 சதவீதத்தைச் சமாளிக்க அதிக இடங்களை உருவாக்கி 69 சதவீதத்தைக் குறைக்காமல் நீதிமன்றத் தீர்ப்பைச் சட்டப்படி மதித்து நடைமுறையில் அது மறுக்கப்பட்டது.

இதனால், பொதுப் போட்டிக்குக் கிடைக்க வேண்டிய இன்னொரு 50 சதவீதம் குறைந்து போய், 31 சதவீத மாகவே தொடர்ந்தது. இதுவே இன் னும் தீர்க்கப்படாத வழக்காக நீடித்துக் கொண்டிருக்கிறது.

இந்தச் சூழ்நிலையில், நீட் தேர்வும் சென்ற ஆண்டே வந்துவிட்டது. நீட் தேர்வை கிராமப்புற மாணவர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியாக அநேகமாக அத்தனை அரசியல் கட்சிகளும் சித்தரித்தன. இன்றைய பொருளாதாரச் சூழ்நிலையில், நகரத்திலிருக்கிற ஏழை மாணவன் வசதிகள் குறைந்த வீட்டில் தான் வாழ்கிறான், படிக்கிறான். படிப் பிலும் அவன் பின்தங்கித்தான் இருக் கிறான்.

அதேசமயம் கிராமப்புறத்திலிருக்கிற வசதியுள்ள மாணவன் தொலைக் காட்சி, செல்போன், இருசக்கர வாகனம் ஆகிய பின்னணிகளோடு எல் லாத் தகவல்களும் பெற்றுக்கொள்ளக் கூடியவனாக இருக்கிறான்.

இன்னும் சொல்லப்போனால் நாமக்கல், ராசிபுரம், கவுந்தப்பாடி முதலிய கிராமப்புறங்களிலுள்ள மேல்நிலைப்பள்ளிகளில்தான் +2 தேர்வில் அதிக மதிப்பெண்களை எடுப் பதற்கான சிறப்புக் கல்வி தரப்படுகிறது என்று, நகர்ப்புற மாணவர்களையே பெற்றோர்கள் அங்குக் கொண்டு போய்ச் சேர்க்கிறார்கள்.

கிராமம், நகரம் என்கிற இந்த வேறு பாடு, மாணவர்களின் அறிவு வளர்ச் சிக்கு எந்த வகையிலும் காரணமாக அமைவதில்லை. எல்லா கிராமங்களும் நகரங்களோடு இணைக்கப்பட்டிருக் கின்றன. பேருந்துகள் ஓடுகின்றன.



தொலைபேசி, வாட்ஸ் அப் தொழில் நுட்பங்கள் வந்துவிட்டன. இதனால், நவீன விஞ்ஞானச் செய்திகளை எல்லா மாணவர்களும் பெறுவதற்கான வாய்ப்பு கூடுதலாகத்தான் இருக்கிறது.

கிராமம் என்பதனாலேயே அவன் கீழ்நிலையில் இருப்பதாகவும், நகரம் என்பதாலேயே அவன் நவீனமாக இருப் பதாகவும் நாம் கற்பனை செய்ய வேண் டிய அவசியமில்லை.

சென்ற ஆண்டு நீட் தேர்வு வராது

என்று வாக்குறுதி அளிக்கப்பட்டு, மாணவர்கள் அதற்குத் தயார் நிலையில் இல்லாமலிருந்தபோது, நீட் தேர்வு வந்துவிட்டது. மாணவர்கள் எழுதினார்கள். அவ்வாறு எழுதிய அந்த மாணவர்களில் பின்தங்கிய கிராமப்புறப் பகுதிகளில் உள்ள மாணவர்கள் அதிக இடங்களைப் பெற்றார்கள் என்பதைக் கவனிக்கத் தவறக் கூடாது.

இந்தச் சூழ்நிலையில்தான், அனிதா என்ற ஒரு தலித் மாணவி நீட் தேர்வு எழுத முடியாமல் ஏமாந்து விட்டார். இந்த ஆண்டு அந்த மாணவியை எழுத வைத்து நீட் தேர்வில் வெற்றிபெற வைத்திருந்தால், அவர் ஒரு மருத்துவராகி மகத்தான சாதனையைச் செய்திருப்பார். ஆனால், அந்தப் பெண்ணின் தற்கொலை அரசியலாக்கப்பட்டு விட்டது. ஆனாலும், நீட் தேர்வைத் தடுக்க முடியவில்லை.

சென்ற ஆண்டு நடந்த நீட் தேர்வு மாணவர்களுக்கு அதிர்ச்சியைத் தந்ததற்குக் காரணம், வராது என்று நினைத்தவர்களுக்கு இத்தேர்வு வந்து விட்டதுதான்.

ஆனால், நீட் எதிர்ப்பாளர்கள் எல்லாருமே விஞ்ஞானி மயில்சாமி அண்ணாதுரையைப் போன்றவர்களோ, அப்துல் கலாமின் உதவியாளர் பொன்ராஜைப் போன்றவர்களோ அல்ல. அரசியல் கட்சிகளை நடத்திக் கொண்டிருப்பவர்கள்தான் இவ்வாறு சொன்னவர்கள்.



அதனால், நீட் தேர்வு மீண்டும் அரசியலாக்கப்பட்டது. அதனால் உச்ச நீதிமன்றத் தீர்ப்பின்படி இந்த ஆண்டு நீட் தேர்வை நடத்த தமிழக அரசு உரிய நடவடிக்கைகளை எடுத்தது. அந்த நடவடிக்கையில் ஏறக்குறைய 400–க்கும் அதிகமான நீட் தேர்வு மையங்களை உருவாக்கி மாணவர்களுக்குப் பயிற்சி தந்தார்கள். அதன் விளைவாக மாணவர்கள் தைரியமடைந்தார்கள். நீட் தேர்வை எதிர்கொள்ளத் தயாரானார்கள்.

சென்ற ஆண்டு எழுதியவர்கள் 80 ஆயிரம் பேர். இந்த ஆண்டு எழுதியவர்கள் 1 லட்சத்து 5 ஆயிரம் பேர். நீட் தேர்வை எழுதுவதற்கான 3 மணி நேரத் தேர்விற்கு சி.பி.எஸ்.இ. இயக்ககம்தான் மையங்களை நிர்ணயித்தது.

நீட் தேர்வு மையங்களை மாணவர்கள் ஒருமுறை தேர்ந்தெடுத்து விட்டால் அதை மாற்ற முடியாது என்று விதிக்கப்பட்டது. அதனால், கவனத்தோடு அந்த மையங்களை மாணவர்கள் தேர்ந்தெடுத்தார்கள்.

அவ்வாறு தேர்ந்தெடுத்தபோது ஏறக்குறைய 1 லட்சம் மாணவர்கள் தமிழ்நாட்டிலேயே தேர்வு மையத்தைத் தேர்ந்தெடுத்தார்கள். அதற்கு மேல் உள்ள 5 ஆயிரம் மாணவர்களுக்குத் தமிழ்நாட்டு மையங்களில் இடம் ஒதுக்க முடியவில்லை என்றும், கால தாமதம் ஆகிவிட்டது என்றும் சி.பி.எஸ்.இ. காரணம் கூறியது.

அதனால், இந்த 5 ஆயிரம் மாணவர்களுக்குக் கேரளாவிலும், ராஜஸ்தானிலும் மையங்கள் ஒதுக்கப்பட்டன. அந்த மாநில மாணவர்கள் எழுதிய அம்மையங்களிலேயே தமிழ்நாட்டு மாணவர்களும் அங்கு அத்தேர்வை எழுதினார்கள்.

இந்த மாணவர்களைப் பிற மாநிலங்களுக்கு அனுப்புவதைப் பற்றிக் கடுமையான விமர்சனங்கள் எழுந்தன. காரணம், கேரளாவிற்குச் சென்ற ஒரு மாணவனின் தந்தை மாரடைப்பால் மரணமடைய நேரிட்டு விட்டது.

இன்னும் இரண்டு மாணவர்களின் தகப்பனார்கள் மதுரையில் மரணமடைந்து விட்டனர்.

இந்த மரணங்களை எடுத்துக்காட்டி, நீட் தேர்வையே நிராகரிக்க வேண்டும் என்ற கோரிக்கையை மீண்டும் அரசியல் கட்சிகள் எழுப்பின. ஆனால், அது நடக்கவில்லை. இனி, தொடர்ந்து நீட் தேர்வு நடத்தப்படும். அதற்கேற்பத் தமிழ் நாட்டு மேல்நிலைப் பள்ளிப் பாடங்களும் மாற்றியமைக்கப்பட்டு விட்டன. இனி இந்தப் பிரச்சனை எழாது.

ஆனால், ஒரே ஒரு விஷயத்தை மட்டும் நாம் குறிப்பிடாமல் இருக்க முடியாது. நீட் தேர்வை எழுதச் சென்ற மாணவர்கள் தமிழகமாக இருந்தாலும், பிற மாநிலங்களாக இருந்தாலும் கடுமையான சோதனைக்கு உட்படுத்தப் பட்டார்கள்.

தேர்வு எழுதச் செல்லும் மாணவர்கள் 11 பொருட்களைக் கொண்டுவரக் கூடாது என அறிவித்தார்கள். பேப்பர், ஜியோமெட்ரிக் பாக்ஸ், பிளாஸ்டிக் பை, பேனா, ஸ்கேல், ரப்பர், கைப்பை, தொப்பி, பெல்ட், மோதிரம், காதணி, மூக்குத்தி, செயின், நெக்லஸ், பெண்டன்ட், பேட்ச், கைக்கடிகாரம், பிரேஸ்லெட், செல்போன், கேமரா, தண்ணீர் பாட்டில் முதலிய பொருள்கள் தடை செய்யப்பட்டன.

இவை மட்டுமல்ல. தலையில் பூ வைக்கக்கூடாது. ஹீல்ஸ் காலணிகள் அணியக்கூடாது. ஷூ அணியக்கூடாது. இடுப்பு பெல்ட் அணியக்கூடாது. இவ்வளவு கட்டுப்பாடுகளோடும்தான் இந்த மாணவர்கள் சென்ற மார்ச் மாதம் நடந்த ப்ளஸ் டூ தேர்வு எழுதினார்கள். அங்கு மட்டும் ஏனோ இச்சோதனைகள் நடத்தப்படவில்லை.

நீட் தேர்வில் முழுக்கைச் சட்டை அணிந்து வந்தால் அது அரைக்கைச் சட்டையாக வெட்டப்பட்டது எதற்காக? மோதிரம் அணிந்து வந்தால் அது எந்த வகையில் நீட் தேர்வைப் பாதிக்கும்? கழுத்தில் தொங்கும் செயினும், கைக்கடிகாரமும் நீட் தேர்வுக்கு எப்படி எதிராகும்?

இவையெல்லாம், யாரோ அடிமையை ஓர் எஜமானன் சோதிப்பதைப் போல இந்த மாணவர்களை இந்தத் தேர்வர்கள் சோதிப்பது கண்டனத்திற்குரியது. 'தி இந்து' தமிழ் நாளிதழ் தலையங்கம் எழுதி இதைக் கண்டித்தது. தினத்தந்தி, தினமணி பத்திரிகைகளும் கண்டித்தன. இது சோதனை செய்வது போல இல்லை. அவமானப்படுத்துவது போலவும், அச்சுறுத்துவதைப் போலவும் இவை இருந்தன என்று அவை சுட்டிக் காட்டின.

இந்த மாணவர்களைத் தேர்வு எழுதுவதற்கு அரை மணி நேரத்திற்கு முன்பு இந்தச் சோதனைக்கு உட்படுத்தினால் அவர்கள் மன உளைச்சலுக்கு ஆளாவார்களா, மாட்டார்களா?

மன அமைதியில் எழுதப்பட வேண்டிய நுட்பமான ஒரு தேர்வை மனதைக் குழப்பி அச்சுறுத்தி அந்த மாணவர்களை உள்ளே அனுப்பினால், அவர்கள் சகஜ நிலைக்குத் திரும்புவதற்கே வெகு நேரமாகும். அதனால், அவர்கள் விடையெழுத வேண்டிய பல கேள்விகளுக்குக் காலப் பற்றாக்குறையால் பதில் எழுதாமல் விட்டுவிடத்தான் நேரிடும்.

இனிமேலும் நீட் தேர்வு வேண்டும். ஆனால், இதுபோன்ற சோதனைகள் தான் கூடாது. ப்ளஸ் டூ தேர்வு எழுதுவதைப் போலவே நீட் தேர்வையும் எழுதுவதற்கு மாணவர்களுக்கு உரிமை உள்ளது. இந்த உரிமையைப் பறிக்க சி.பி.எஸ்.இ.–க்கு அதிகாரம் கிடையாது.

இச்சோதனைகள் மாணவர்களைக் காப்பி அடிப்பதைத் தடுப்பதற்காகத் தான் என்று கூறப்படுமானால், 12 ஆண்டுகள் அம்மாணவர்களுக்குக் கற்பித்த பலன் அவனைக் காப்பி அடிப்பவனாகத்தான் நாம் உருவாக்கி இருக்கிறோம் என்றும், கல்வி முறையிலேயே ஏதோ களங்கம் உள்ளது என்றும்தான் கூற நேரிடும்.

இதுபற்றி வாசகர்களாகிய நீங்கள் என்ன எண்ணுகிறீர்களோ, அதை எழுதுங்கள் ஜூன் 12–க்குள்.

**– பி.சி.**

# லிங்காயத்து அரசியல்

## விவாதக் கடிதங்களில் சில... சில... சில...

இந்தியாவில் பெரும்பான்மையான இந்துக்களில் ஓர் அங்கமாகிவிட்ட லிங்காயத்துக்களும், வீர சைவர்களும் தனி மதமாக்கப்பட்டால் அவர்கள் சவலைப் பிள்ளைகளாகி விடுவார்கள்! குஜராத்தில் பட்டேல் சாதியினருக்கு ஆசை வார்த்தை காட்டி மூக்கறுபட்ட காங்கிரசுக்கு, கர்நாடகாவில் நிச்சயம் மூக்கு உடையும்! கேவலமான அரசியல் வாக்குறுதிகளை அள்ளியிறைத்து ஆட்சியைப் பிடிக்க முயலும் காங்கிரசை குஜராத்தில் துணிச்சலோடு நேருக்கு நேர் சந்தித்த மோடிக்குக் கர்நாடகாவில் ஏன் பயம் வந்தது? காவிரி விஷயத்தில் பம்முகிறாரே!

– இரா. கல்யாணசுந்தரம், மதுரை.

இந்தியா பல மதங்கள், பல இனங்கள், பலமொழிகள், கலாச்சாரம் வேற்றுமையில் ஒற்றுமை காணும் இந்தியா. இதுபோன்ற எவ்வளவோ சாதிகளும், மொழிப் பிரச்சனைகளும் வருகின்றன. ஒன்றுபட்ட இந்தியர் என்பதுதான் சரியே தவிர, இன்று லிங்காயத்துக்குக் கொடுத்தால், நாளை வேறொருவர் வேண்டுமென்று குரல் கொடுப்பர். சலுகைகள் வாங்கி முன்னேறி என்ன செய்துவிட முடியும்? உழைத்துத் தமது மக்கள் ஒவ்வொருவரும் முன்னேற ஊக்கப்படுத்த வேண்டுமே தவிர, 130 கோடி மக்களையும் பிரித்தால் இந்தியா என்ன வாகும்?

– பார்வதி ரங்கசாமி, கல்வடங்கம்

சைவ சமயக் கோட்பாட்டிலிருந்து ‘லிங்காயத்து’ பிரிப்பதைச் சைவ மடாதிபதிகளும், சமயத் தலைவர்களும், துறவிகளும் எங்ஙனம் ஏற்றுக் கொள்கிறார்கள் என்பது ஒரு சாமான்ய இந்துவின் சந்தேகமாகும். கிறிஸ்தவ மதம், இசுலாமிய மதங்களில் அரசியல் இருக்கின்றதா? அறவே இல்லை என்பதே உண்மை. அரசு மற்றும் அரசியலிலோ, ‘லிங்காயத்து’ என்ற துணையான சைவ மதத்தினை உண்டாக்கினால், அது ஏற்றுக்கொள்ளப்படுவது நிச்சயம் காலத்தின் கைகளில் இருந்து வெகுஜன ஆன்மிகத்தினரால் தீர்மானிக்கப்படும்.

– வே. முத்துகிருஷ்ணன், தாராபுரம்.

கர்நாடகாவைத் தற்சமயம் ஆண்டு வருபவர்கள் ஓட்டினைக் கருத்தில் கொண்டு அறிவித்துள்ள புதிய மதங்களுக்கான இட ஒதுக்கீட்டுச் சலுகைகள் தவறான முன்னுதாரணமாக அமைவது நாளைய உண்மை! கர்நாடகாவின் இந்த விதிமீறல் மற்றும் அரசியல் சட்டத்திற்கு எதிரான இச்செயலினை உச்சநீதிமன்றம் முதலிய உயரிய அமைப்புகள் தொடக்கத்திலேயே தட்டிக் கேட்டு, கர்நாடகாவின் சதியை முறியடிக்க வேண்டும். அப்போதுதான் ஜனநாயக நெறிமுறைகள் காப்பாற்றப்படும். அதேசமயம் மற்றவர்களுக்கும் ஒரு பாடமாக அமையும்.

– இரா. வளையாபதி,
தோட்டக்குறிச்சி.

‘பரமனை நினைவூட்டவல்ல சின்னமாகத் திருவெண்ணீரும், உருத்திராக்கமும் உளது’ எனச் சிவஞானபோதம் கூறுவதை, ‘லிங்காயத்துகள்’ தம் வசம் கொண்டிருப்பதைத் தவறு என்று கூற இயலாது. பிரிவுகள் பலவாகக் கொண்டிருந்த இந்து மதம், ஆதிசங்கரரால் சுருக்கப்பட்டது சரிதான். தவிர, அது பிறனிலிருந்து வரும் உண்மை எதனையும் ஏற்பதில் தயங்குவதில்லை

என்பதைக் காஞ்சிப் பெரியவர் நிரூபணம் செய்தே இருக்கிறார். பா.ஜ.க.–விற்குத் தெற்கே நுழைவாயில் கர்நாடகா என்றே கண்கூடாகத் தெரியும் பட்சம் நீதிபதி எச்.என். நாகமோகன்தாஸ் குழு அறிக்கைதனைக் காங்கிரஸ் ஏற்றது, முள்ளை முள்ளால் எடுப்பது போலாகும் எனலாம்.

– எஸ்.ஜி. இசட்கான், திருப்பூர்.

**நா**ளாக, நாளாக நீர்த்துப் போய்க் கொண்டிருக்கும் பலவற்றிலும், தற்போது முன்னிலையில் இருந்து கொண்டிருப்பது அரசியல் என்பதற்குச் சமீபத்திய சான்றுதான் கர்நாடகாவில் அங்கீகரிக்கப்பட்டுள்ள சிறுபான்மையின அந்தஸ்துப் பெற்று உருவாக்கப் பட்டுள்ள புதிய இரு மதங்கள்! நாலாந்தர அரசியல்வாதிகள்தான் சாதி, மத உணர்வுகளைத் தூண்டிவிட்டுக் கலவரங்களை உருவாக்கி வெற்றிபெற முயற்சி செய்வார்கள். ஆனால், இன்றைய நிலைமையோ வேறு விதமாய் உள்ளது. முன்னணிக் கட்சிகளும், அரசியல்வாதிகளும் இவ்வகையான செயலைச் செய்யத் தொடங்கி விட்டன.

– வெ. பாண்டுரங்கன், திருநின்றவூர்.

**லி**ங்காயத்து அரசியல் என்பது தேவையில்லாதது. மதவழிப்பட்ட நாடாக இந்தியாவை உருவாக்க அனுமதிக்கக்கூடாது. தமிழ்நாட்டின் வீரசைவர்கள் அரசியல்வழிப்பட்டவர்கள் இல்லை. ஆனால், கன்னடத்தில் அரசியலில் பங்குகொண்டு அந்த மதத்தைச் சொல்லியே வாக்கு வாங்கி ஆட்சி புரிவதும் உள்ளது. தற்போதும் தேர்தல் காரணத்தால் அப்படி ஒரு சலுகையைச் சரியாகச் செய்து விட்டதற்கு மதச்சார்புடைய மத்திய அரசும் துணையானால் நாடு துண்டாடப்படுவதற்கான கன்னக்கோல் சாத்துதலாக அமைந்துவிடும்.

– தெ. முருகசாமி, புதுச்சேரி.

**லி**ங்காயத்துக்களுக்குத் தனி மதம் வேண்டும் என்ற கோரிக்கை, தேர்தல் காலத்தில் வந்துள்ளது. லிங்காயத்துக்களின் 17 சதவீதம் வாக்குகளைக் குறிவைத்துச் செய்யப்படுகின்ற பலகீனமான அரசியல் இது. அரசியல் சட்டத்திற்கு விரோதமானதை மதமாக உருவாக்க முடியாது. புதிய மதம் என்றால், புதிய சட்டம் உருவாக்கப்பட வேண்டும். இது வெறும் வாக்கு வங்கி அரசியல். தேர்தல் கால வாக்குறுதிகளில் நிறைவேற்ற முடியாத வாக்குறுதிகளில் ஒன்று. தேர்தலில் வெற்றி பெறவும், மக்களை ஏமாற்றி ஓட்டுக்களைப் பெறவும் இப்போது மதத்தையே கருவியாகப் பயன்படுத்தப் பார்க்கிறார்கள். இதுபோன்ற தேர்தல் கால வாக்குறுதிகளால் மக்களுக்கு எந்தப் பயனும் ஏற்படப் போவதில்லை. மக்கள் மிகுந்த எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால், ஏமாறப் போவது மக்கள் மட்டுமே.

– கே. என். பிச்சைமணி,
பொள்ளாச்சி.

**இ**ந்துக்களின் கடவுளான சிவனை வழிபட்டு, இந்துக்களாக இத்தனை காலம் இருந்து வந்த லிங்காயத்துக்களுக்குத் தனி மத அந்தஸ்து வழங்கப்பட்டிருப்பது ஏற்புடையது அல்ல. இனி, இவர்களைப் போல மற்ற பிரிவினரும் தனி மதம் வேண்டுமெனப் போராடினால், தேச ஒற்றுமை குலைந்து இந்து மதம் பெரும்பான்மையை இழக்கும் அல்லவா? எந்த ஓர் அரசும் மக்களை ஒன்றிணைக்கும் பணியைச் செய்ய வேண்டுமே தவிர, ஓட்டு வங்கிக்காக மதத்தின் பெயரால் பிரிவினையை ஏற்படுத்துதல் கூடாது.

– வெ. ஜெயலட்சுமி, கோவை.

**க**ர்நாடகாவில் லிங்காயத்துகளையும், வீரசைவர்களையும் தனி மதமாக்கும் கொள்கையை ஆதரிக்கவில்லை என்பதை மட்டும் அடிப்படையாகக் கொண்டு பா.ஜ. கட்சியைப் பாராட்ட முடியாது. ஒரு நல்ல அரசியல் கட்சிக்கு நீதி, நேர்மை, ஒழுக்கம், நடுநிலைமை, நிர்வாகத்திறமை மிகவும் இன்றியமையாதவை. இந்த அடையாளம் பா.ஜ. கட்சியிடம் முழுமையாக இருக்கிறதாவெனில், இல்லை என்பதுதான் நிதர்சனம். பா.ஜ. சந்தர்ப்பவாத

அட்டைப்பட விளக்கம்

**அர்ச்சுனனுக்கு விஸ்வரூப தரிசனம்!**




மகாபாரதப் போரில், போர் செய்யத் தயங்கிய அர்ச்சுனனுக்குக் கீதையைக் கூறிக் போர் செய்ய வைத்தார், கிருஷ்ண பரமாத்மா. அப்போது, எல்லா உலகங்களும், எல்லா உயிர் வடிவங்களும், எல்லா இறைஉருவங்களும் நானே! எல்லாச் செயல்களையும் செய்பவன் நானே! என்று கூறிய கிருஷ்ணன், தேவர்கள் அனைவரின் வடிவாகத் தாமே விளங்கும் விஸ்வ ரூபக் காட்சியை அர்ச்சுனனுக்குக் காட்டியருளினார். அந்த விஸ்வரூபக் காட்சியே இம்மாத 'ஓம் சக்தி'யின் அட்டைப் படத்தில் காணலாகின்றது.

– ஆர்.வி.

அரசியல்தான் நடத்துகிறது. வட மாநிலங்களில் சிறுபான்மையினர் கடுமையாகத் தாக்கப்படுகிறார்கள். குறிப்பாக, தலித் இன மக்கள் சொல்லொணாத் துயரங்களுக்கு ஆளாகிறார்கள்.

– உ.மு.ந. ராசன் கலாமணி,
கோபிசெட்டிபாளையம்.

கர்நாடகாவில் லிங்காயத்தைத் தனி மதமாக அறிவித்து அதற்கு இட ஒதுக்கீடு அளிப்பதற்கு முன்னோட்டமான நடவடிக்கையை எடுத்ததன் மூலம் ஊருக்கு ஊர் மதச்சண்டைகள் நடப்பதற்கு வழிகாட்டியுள்ளது கர்நாடக காங்கிரஸ் ஆட்சி. லிங்காயத்து மதம் அந்த மதத்தின் பெரும்பான்மை மக்கள் விரும்பினால் தனி மதமாக இருப்பதில் தவறு இல்லை. ஆனால், லிங்காயத்துகளுக்குத் தனி இட ஒதுக்கீடு கூடாது. ஏனெனில், சிவ வழிபாடுதான் என்றாலும், இந்து மத – சைவ சமயத்தின் – வினை, முன் ஜென்மம், மறு ஜென்மம் கொள்கையைப் பசவரும் லிங்காயத்துத் தத்துவமும் ஏற்கவில்லை என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது. சைவ சமயத்தின் பல பிரிவுகள் போல் ஒரு தனிப்பிரிவாக இருக்கலாம், இயங்கலாம். அதைத் தனி மதமாக்கியது தவறு.

சித்தராமையாவின் கர்நாடகத்திற்குத் தனிக்கொடி, கர்நாடகத்திற்குத் தனி மாநில கீதம் ஏற்புடையது. ஆனால், லிங்காயத்து தனி மதம், தனி மத இட ஒதுக்கீடு ஏற்புடையது அல்ல.

– மு. வேதரத்தினம், புதுக்கோட்டை.

லிங்காயத்து அரசியலைக் கர்நாடகம் மிகத் தீவிரமாகப் பிரச்சாரம் செய்வது தவறானது. நம் நாடு ஒரு ஜனநாயக நாடு. இதில் தேர்தலின்பொழுது – ஓட்டுச் சேகரிக்க முயலும்பொழுது, மக்களுக்கு நல்லது செய்வேன் என்று சொல்லி ஓட்டுக் கேட்பதுதான் நியாயமான அரசியல். மக்களுக்கும் யார் வந்தாலும் நம் எதிர்பார்ப்புகள் நிறைவேறும் என்ற நம்பிக்கை வரவேண்டும். அந்த நம்பிக்கையுடன் மக்களும் ஓட்டு அளிக்க முன்வருவர். அதைவிட்டு, இது போல மத அறிவிப்புச் செய்வது மக்களுக்கு அந்த மதத்தின்மீதே வெறுப்பு வர வழிவகுக்குமே தவிர, நம்பிக்கையினைத் தராது.

– உஷா முத்துராமன், மதுரை.

அரசியலில் தேர்தல் வெற்றிக்காகக் கட்சிகள், செய்ய முடியாத செயல்களை எல்லாம் செய்வதாக வாக்குறுதி அளிக்கின்றன. காவிரி விசயத்தில் கர்நாடகக் காங்கிரஸ் அரசோ, உச்சநீதிமன்றத் தீர்ப்பையே மதிக்காமல் புறக்கணிக்கிறது. இதனை உச்சநீதிமன்றமே கண்டிக்காமலும், நடவடிக்கை எடுக்காமலும் வேடிக்கை பார்க்கிறது. தமிழகத்தைத் தவிர, வேறு எந்த மாநிலத்திலும், எந்தக் கட்சியும் இந்த உச்சநீதிமன்ற அவமதிப்பை ஒரு பொருட்டாகவே எண்ணவில்லை. இப்படிப் பல விதி மீறல்களை, ஜனநாயகப் படுகொலைகளை மத்திய, மாநில அரசுகள் நாளும் செய்து வரும்பொழுது, கர்நாடக

ஆளும் காங்கிரஸ் அரசு புதிதாக இரு மதங்களை அறிவித்திருப்பதைத் தவறு என்று யார் சொல்வார்கள்?

– புலவர் கருமலைத் தமிழாழன், ஒசூர்.

லிங்காயத்து என்ற அமைப்பு இந்துக்களுக்குச் சேராத கூட்டம். இந்துக்களுக்கு எதிரியும் அல்ல. இவர்களது 17 % காங்கிரசுக்கு ஆதரவு என்றே நம்பலாம். கர்நாடகத் தேர்தல் மதங்களைப் புரட்டிப் போடுவது எனலாம். இந்திய ஜனநாயகம் கேலிக்கூத்துக்கு முதல் காரணம், கர்நாடக அரசே. மதத்தின் பெயரால் வாக்குச் சேகரித்தல் மிகவும் கண்டனத்திற்குரியது. அரசியல் பிழைப்பில் வாழ்பவர்கள் செய்யும் விளையாட்டு அரசியல் எனலாம் அல்லது அரசியல் வியாபாரிகள் எனக் கூறலாம். இந்த விதி மீறலுக்கு அரசே காரணம். எனவே, சட்ட விதிகளை மீறிச் செய்வது குறுகிய உள்நோக்கம் என்றே தீர்ப்பினைக் கூறலாம்.

– லிங்கம் சின்னசாமி, தாராபுரம்.

இந்திய மண்ணில் சாதி, மதம் ஏதுமில்லை. இங்கு அனைவரும் இந்தியரே என்று விபரமறியாத பாமர மக்கள் வேண்டுமானால் சொல்லிக் கொண்டிருக்கலாம்! ஆனால், இங்கே ஒவ்வொரு அரசியல் கட்சியும் உள்ளாட்சித் தேர்தல், சட்டமன்ற, நாடாளுமன்றத் தேர்தல் இப்படி ஒவ்வொரு தேர்தலையும் சாதி அடிப்படையில்தான் வேட்பாளர்களை நிறுத்தித் தேர்தலில் போட்டியிட்டு வருகின்றனர். இந்த அடிப்படையில்தான் தற்போது கர்நாடக சட்டமன்றத் தேர்தலிலும் 'லிங்காயத்து' இன மக்களைத் தேர்தலில் வெற்றி பெறுவதற்காகப் பகடைக்காயாகக் காங்கிரஸ் பயன்படுத்தியிருக்கிறது. இதேபோன்று கர்நாடக மாநிலத்திற்குத் தனிக்கொடி, தனி தேசிய கீதம் இவற்றையெல்லாம் காங்கிரஸ் மீண்டும் அம்மாநிலத்தில் ஆட்சியைப் பிடிப்பதற்கு உருவாக்கி இருக்கிறது.

– நன்னிலம் இளங்கோவன், மயிலாடுதுறை.

ஆன்மிகம்

# சீர்காழி திரிவிக்கிரம நாராயணர் திருக்கோயில்

பேரா. எஸ். கோகுலாச்சாரி


ராஜ கோபுரம்

பொதுவாக திருமங்கையாழ்வார் ஒரு திருத்தலம் சென்று கண்டு சேவித்து – எம்பெருமான் மீது பாசுரங்களைப் பாடுவார்.

ஆனால், ஒரு சிறிய விவாதத்தின் காரணமாக ஓர் அழகான பாசுரம் அணி அலங்காரமாகப் பிறந்தது சீர்காழி என்கிற காழிச்சீராம விண்ணகர திவ்யதேச யாத்திரையில் தான்!

தில்லை திருச்சித்ரகூடம் – சோழ நாட்டு நுழைவாயிலில் உள்ள திருத்தலம்.

பாலாற்றங்கரை, பெண்ணையாற்றங்கரை (தென்பெண்ணை) கெடிலநதிக் கரைத் தலங்களை எல்லாம் தரிசித்துவிட்டுச் சோழநாட்டின் முதல் தலமாகிய தில்லைத் திருச்சித்ரகூடத்திற்கு வருகிறார் ஆழ்வார். வழியில் உடல் வருத்தித் தவம் செய்து கொண்டிருந்தவர்களை எல்லாம் கூட, ஏன் வீணாகத் தவம் செய்கிறீர்கள்? உங்கள் வேண்டுகோளைக் கேட்டு அருள்புரிவதற்காகவே எழுந்தருளியிருக்கக் கூடிய தில்லைத் திரு




சசித்ரகூடத்திற்குச் சென்று சேர்மின்கள் என்று ஆற்றுப்படுத்த, அவர்கள் தவம் கலைந்து, ஆழ்வாரோடு இணைந்து கோஷ்டியாக வந்து கொண்டிருக்கிறார்கள்.

தில்லைத் திருச்சித்ரகூடத்திலே நுழையும் போதே, மிகச் சிறப்பாக பிரம்மோற்சவம் நடந்து கொண்டிருக்கிறது. வீதிவலம் வரும் பெருமாளைக் கண்குளிரச் சேவித்து, தெய்வப் புள்ளேறி



வருவான் சித்திரக்கூடத்திலுள்ளான் என்று மங்களாசாசனம் செய்கிறார் ஆழ்வார்.

நிவா நதி அல்லது ஸ்வேத நதி என்று போற்றப்படும் திருவெள்ளாற்றங்கரைத் திருத்தலம் திருச்சித்ரகூடம்.

திருச்சித்ரகூடத்தில் மூலவரையும், உற்சவரையும் சில தினங்கள் தங்கி சேவித்து மகிழ்கிறார்

ஆழ்வார். பின் தன் பயணத்தைத் தொடர்கிறார். அடுத்து கங்கையின் புனிதமாய்க் காவிரி நதிக்கரையில் தன் திருத்தலப் பயணத்தைத் தொடர்கிறார். காவிரியின் கிளை ஆறுகள் படர்ந்திருக்கும் தஞ்சை / நாகை மாவட்டத் தலங்கள் ஆழ்வாரை வரவேற்கவும், ஆழ்வாரின் அருந்தமிழைக் கேட்கவும் காத்திருக்கின்றன.

சீர்காழி என்று இன்று அழைக்கப்படும் திருக்காழிச்சீராம விண்ணகரம் தாடாளன் (திரிவிக்கிரம நாராயணர்) திருக்கோயில் 108 வைணவத் திருத்தலங்களில் ஒன்று.

இத்திருத்தலம் உரோமச முனிவர் தவமிருந்து பெருமாளின் திரிவிக்கிரம அவதாரக் காட்சி கண்ட திருத்தலம்.

மிகப்பெரிய அடியார் குழாத்தோடு வரும் ஆழ்வாரை வரவேற்கக் காத்திருக்கிறார்கள்.

காழிச்சீராம விண்ணகரத்தில் சைவசமயத்தின் ஞானசம்பந்த நாயனார் அப்போது இருந்தார். (இவர் தேவாரம் பாடிய ஞானசம்பந்தரா எனத் தெரியவில்லை). இவருடைய அடியார்கள், நம் ஞானசம்பந்தர் இருக்க, அவர் பெருமைக்கு விஞ்சும் விருதை ஒருவர் ஓதிக் கொண்டு செல்வதா என்று திரளாக வந்து ஆட்சேபிக்க, ஞானசம்பந்தரும் ஆழ்வாரிடம் எங்கே ஒரு குறள் பாடுக என்க, அதையே முதல் வரியாகக் கொண்டு கம்பீரமான குரலில் எண்ணலங்காரத்தோடு ஆசுகவியாக அரும்தமிழ் பொழிகிறார்.

“ஒரு குறளாய் இருநிலம் மூவடி மண் வேண்டி
உலகனைத்தும் ஓரடியால் ஒடுக்கி, ஒன்றும்
தருக எனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாள் அணைவீர்! தக்க கீர்த்தி
அருமறையின் திரள் நான்கும் வேள்வி ஐந்தும்
அங்கங்கள் அவையாறும் இசைகள் ஏழும்
தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்
சீராம விண்ணகரம் சேர்மின் நீரே!”

இந்தப் பாசுரத்தின் நுட்பத்தை விளக்கினால், அதுவே ஒரு தனிக் கட்டுரையாக விரியும். ஆயினும் ஒரு குறள் பாடு என்று கேட்டுக் கொண்டவர்கள், சேர்மின் நீரே ! என்று அவன் பெருமையை அனுபவித்து அன்றோ அறிய வேண்டியது என்னதான் வார்த்தைகளால் வர்ணித்தாலும் அறிய முடியுமா! என்று சொல்லும் நயம் அற்புதமாக அமைந்திருக்கிறது.

இப்பாடலைக் கேட்டு ஞானசம்பந்தர், ஓர் அழகான வேலை ஆழ்வாருக்குப் பரிசளிக்கிறார். இதற்கு முன்னால் ஓரிரண்டு இடத்தில் வேலை இணைத்துப் பாடியிருந்தாலும் ஞானசம்பந்தர் பரிசளித்த வேலின் சிறப்பையும் இணைத்து இதற்குப் பிறகு வரும் திருநாங்கூர் திவ்யதேசப் பாசுரங்களிலே ‘வேல் கலியன்’ என்ற பதத்தை இணைத்தே பாடுகிறார் ஆழ்வார்.

சீர்காழியில் நுழைந்ததும் வாமன அவதாரம்தான் ஆழ்வாரின் நினைவுக்கு வருகிறது. காரணம், சர்வேஸ்வரனான தான் தாழ, உலகம் வாழ என எடுத்த அவதாரம் அல்லவோ அது!

அடியார்களின் குறைகளைப் போக்க, யாசகம் கேட்கவும் தயங்காதவன் எம்பெருமான் என்பதைக் காட்டுகின்ற தலமல்லவா காழிச்சீராம விண்ணகரம்! அங்கே சென்று சேவிக்கும் பாக்கியம் பெற்ற நமக்கு என்ன குறை இருக்க முடியும்?

அழகான ராஜகோபுரம். நேர் எதிரே ஆஞ்சநேயர் சந்நிதி.

அளந்தவன் வாமனன். நடந்தவன் இராமன். இருவரும் நடத்தையால் வென்றவர்கள். அருள்தர நின்றவர்கள். இவர்கள் நிற்கும் அழகைக் காண திறல் விளங்கு மாருதியும், இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன் என நின்று அருள்பாலித்துக்






கொண்டிருக்கிறார்.

ஆலயத்துக்குப் போகும்போது, எம்பெருமான் திருவருளும், சேவித்துத் திரும்பும்பொழுது, ஆஞ்சநேயரின் அருட்பார்வையும் நம்மீது விழுகிறது.

சின்ன ஆலயம்தான்.

உள்ளே நுழைந்தவுடன் வலதுபுறம் இராமர் சந்நிதி. இடதுபுறம் மடைப் பள்ளி. அழகான பிரகாரம். இடது புறம் தாயார் சந்நிதி. வலதுபுறம் வழக்கம் போல ஆண்டாள் சந்நிதி. கொடிமரம். பலிபீடம். கருடாழ்வார் சந்நிதி. மகாமண்டபம் போக மேலே சில படிகள் ஏற வேண்டும்.

ஏறியவுடனே பெருமானின் கம்பீர மான தரிசனம். முதலிலே சொன்ன ஒரு குறளாய் பாசுரத்தையும் அதன் பொருள் சிறப்பையும் மனதில் ஓட விட்டுக் கொண்டு, தூக்கிய திருவடி யின் அழகிலே வைத்த கண் வாங்கா மல் பார்த்து மனம் சிலிர்க்கலாம்.

திரிவிக்கிரம கோலத்தில் பெரு மாள் ஒரு பாதத்தை உயரத் தூக்கிய போது, பாதம் நோகுமே என்று அவரை பதக்கமாகத் தாயார் தாங்குவ தாக மரபு. இத்திருத்தலத் தாயார் தரி சனம் காணும் பெண்கள் கணவரிடம் அன்பு காட்டுவர் என்பது தொன் நம்பிக்கை.

காலத்தில் அழியாத இத்தலம் ஒரு காலத்தில் சிதைந்தது. அந்நிலையில் இங்குள்ள உற்சவ மூர்த்தியை மூதாட்டி ஒருத்தி தன் தவிட்டுப் பானையிலே வைத்துப் பாதுகாத் தாள். இந்த விபரத்தை அறிந்து கொண்ட திருமங்கையாழ்வார், அந்த உற்சவமூர்த்தியைப் பெற்று இவ்வா லயத்தில் அமைத்தார். வருடத்திற்கு ஒருமுறை வைகுண்ட ஏகாதசித் திரு நாள் அன்று தவிட்டுப்பானை தாடாளனின் மூர்த்தியைச் சேவிக்க லாம்.

கருவறை உற்சவமூர்த்தி அற்புத

மான அழகு. சுந்தர சொரூபம். உபய நாச்சிமார்கள் இருபுறமும். சந்தான கோபாலகிருஷ்ணனையும் தரிசிக்கலாம்.

பலிபீடம் அருகில் உள்ள தனிச் சந்நியில் சீதா சமேத இராம லட்சுமணர். உற்சவ மூர்த்திகள் கொள்ளை அழகு. குலசேகராழ்வாரும் உடன் இராமசரிதம் பாடிக் கொண்டே இருக்கும் அழகும் சேவிக்கலாம்.

எம்பெருமானாரோடு ஓர் அற்புதத் தொடர்பு இத்தலத்துக்கு உண்டு. பெரிய திருமொழிப் பாசுரம். சீர்காழிப்பாசுரம்தான்.

"தெட்டபழம் மதுச் சொரியும் காழிச்

சீராம விண்ணகரம் சேர்மின் நீரே !"

இதற்கு விளக்கம் அருளிய எம்பெருமானார் 'தெட்டபழம் என்றால் என்ன என்று தெரியவில்லை. பார்ப்போம்' என்றார்.

ஒருமுறை சீர்காழிக்கு யாத்திரை வரும்போது, நாவல் மரங்கள் செழித்து வளர்ந்திருந்தன. கீழே சில பிள்ளைகள் நின்று கொண்டு,

தெட்ட பழமாகப் பறித்துப் போடுங்கள் என, உடையவர் காதுகளில் அச்சொல் விழுந்து உடனே அந்தப் பிள்ளைகளிடம் ஓடி, தெட்ட பழம் என்பதற்குப் பொருள் என்ன என்று கேட்க, அவர்கள் 'நன்கு கனிந்த பழம்தான் தெட்டபழம்' என உடையவர் ஒரு சொல்லுக்கு (அந்தந்தப் பிரதேசத்தில் பயன்படுத்தப்படும் சொல்) சரியான விளக்கம் கிடைத்ததை எண்ணிப் பெருமகிழ்ச்சி கொண்டார்.

நான்முகன் தன் ஆயுள் பற்றிய செருக்கினால் இருக்க, அந்தக் கர்வத்தை அடக்க உரோமச முனிவர் தவமியற்றிய தலம் இது. இதன் விளைவாக மூன்றரைக் கோடி பிரம்மதேவர் பெற்ற ஆயுளைப் பெற்றார். அது மட்டுமன்றி, உரோமசமுனிவர் வேண்டுதல்படி உலகளந்த காட்சியைக் காட்டி தாடாளன் ஆனார் பெருமாள்.

திருக்கோவலூரில் வலது திருவடித் தூக்கிக் காட்சி தரும் பெருமாள் திருஊரகத்தைப் போல இங்கே இடது பாதம் தூக்கிப் பஞ்சாயுதங்களுடன் காட்சி தருவது வேறு எங்கும் காண முடியாத காட்சி.

தாயார் பெயர் : மட்டவிழ்குழலி. லோகநாயகித்தாயார். விமானம்: புஷ்கலா வர்த்தக விமானம். தல விருட்சம் : பலாமரம்.

இத்திருக்கோயிலின் முன் மண்டபத்தே இடது கரத்தில் குடையும், வலது கரத்தில் தான முத்திரையும் கூடிய அழகான வாமன மூர்த்தியையும், வேல் சாய்த்துக் காட்சி தரும் திருமங்கையாழ்வாரையும் தரிசிக்கலாம்.

கருவறைக்கு முன் உள்ள சிறு மண்டபத்தில் வரிசையாக ஆழ்வார்கள் எழுந்தருயிருக்கும் காட்சி கண் கொள்ளாக்காட்சி.

ஒருமுறை ஆற்காடு நவாபின் வீரர்கள் இந்த உற்வமூர்த்தியை எடுத்துச் சென்று அரண்மனைக்குள் மறைக்க, சிதம்பரப் படையாட்சி என்ற ஒரு பக்தர் துணிவோடு சென்று அதனை மீட்டு வந்ததால், இன்றும் அவர் மரபினர்க்கு ஏழாம் நாள் உற்சவத்தில் மரியாதை நடக்கிறது.

இவ்வளவு சிறப்புப் பெற்ற தாடாளன் திருவடியை சீர்காழி சென்று நாம் சேவிப்போம். வாருங்கள்.

**முக்கிய உற்சவங்கள்** : வைகாசியில் பிரம்மோற்சவம். ஆடிப்பெருக்கில் பெருமாள் புறப்பாடு. ஆடி வளர்பிறை ஏகாதசி தைலக்காப்பு. ஆவணியில் (ஏகாதசி) பவித்ரோத்ஸவம். மார்கழியில் அத்யயன உற்சவம். பங்குனியில் ராமநவமி உத்ஸவம்.

●

ஆன்மிகம்

# இரவக்குறிச்சியில் ‘ஆதிநாதர் தீர்த்தங்கரர்’

அரவக்குறிச்சி வட்டத்தில் மொட்டையாண்டவர் திருக்கோவில் என்று மக்களால் அழைக்கப்படும் முருகன் கோயில் அமைந்துள்ளது.

கோயில் அமைந்துள்ள இடம் ஒரு சிறிய கரட்டுக் குன்று இருக்குமிடம் ஆகும். குன்று நோக்கியுள்ள சிறிய ஏற்றப் பாதையில் மேலே செல்லுமுன் சமதளத்திலேயே மிகப் பெரிய தொரு பாறை காணப்படுகிறது. மதுரை – ஆனைமலை நரசிங்கப் பெருமாள் கோயிலில் அமைந்துள்ள பாறை போலச் சரிந்து பெரிய சுவர் போலத் தோற்றமளிக்கிறது.


நின்ற கோலத்தில்
இரு பெண்களுக்கு நடுவில்
ஆதிநாதர் தீர்த்தங்கரர் சிற்பம்

பாறையில் சற்றேறத்தாழ ஏழு அடி உயரத்திற்கு மூன்று சமணச் சிலைகள் ஒரே இடத்தில் புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. மூன்று சிற்பங்களும் நின்ற கோலத்தில் காட்சியளிக்கின்றன. நடுவில் ஓர் ஆண் உருவமும், அதன் இரு பக்கங்களிலும் இரு பெண் உருவங்களும் வடிக்கப்பட்டுள்ளன.

நடுவில் இருக்கும் ஆண் சிற்பத்தின் தலைக்கு மேல் சமணத்துக்கே உரிய முக்குடை அமைப்புக் காணப்படுகிறது. சமணத் தீர்த்தங்கரர் சிலைகளில் இது போன்ற முக்குடை அமைப்பைக் காணலாம்.

இங்குள்ள சிற்பத்தில் ஆடை அணியாத சமணத் துறவியின் நின்ற கோலமும், அவரின் தலைக்கு மேல் காணப்படும் முக்குடை அமைப்பும் இச்சிற்பம் ஒரு சமணத் தீர்த்தங்கரரின் சிற்பம் என்பதை உறுதிப்படுத்துகிறது.

ஆதிநாதர் என்பவர் ரிஷபதேவர் வஞ்சி மாநகர ஆன்நிலையப்பருக்கு அருகிலே இருக்கிறார். தீர்த்தங்கரர் என்னும் உயர்நிலை பெற்ற இருபத்து நான்கு பேரின் சிற்ப, ஓவிய உருவங்களுக்கு அடையாளமாக அவர்களின் தலைக்கு மேல் முக்குடை அமைப்புக் காணப்படும். ஆத்தி சூடி அமரும்



டாக்டர் நாக. கணேசன், ஹூஸ்டன், அமெரிக்கா

பார்சுவ நாதருக்கு மட்டும் முக்குடையும் அதன்கீழே அவரைக் காக்கின்ற நாகமும் தலைமேல் காட்டப்பட்டிருக்கும்.

சமணத் தீர்த்தங்கரரின் இரு பக்கங்களிலும் இரு பெண்ணுருவங்கள் உள்ளன. சமணத்தின் முதல் தீர்த்தங்கரர் ஆதிநாதர் என்னும் ரிஷப தேவர் ஆவார். இவர் ஓர் அரசர். இவருக்கு மக்கள் இரு மகன்களும், இரு மகள்களும். பாகுபலி மூத்த மகன்; பரதன் இளைய மகன். பிராமி, சுந்தரி இருவரும் மகள்கள். ஆட்சியை மக்கள் இருவருக்கும் பிரித்துக் கொடுத்துவிட்டு ரிஷபதேவர் துறவறம் மேற்கொள்கிறார்.

சக்கரவர்த்தியாகும் எண்ணத்தில் பரதன், பல நாட்டு அரசர்களை வெல்கிறார். உடன்பிறந்த பாகுபலியையும் கொல்ல நினைக்கிறார். மனம் வெறுத்த பாகுபலி, தன் பங்குக்கான ஆட்சிப் பரப்பையும் உடன் பிறந்தானுக்குக் கொடுத்துவிட்டுக் காட்டுக்கு ஏகித் தவத்தில் ஈடுபடுகிறார். சகோதரிகள் பிராமி, சுந்தரி ஆகிய இருவரும், தவத்தைக் கைவிடுமாறு பாகுபலியை வேண்டிக் கொள்கின்றனர்.

உடன்பிறந்த சகோதரிகள் காட்டுக்குச் சென்று அண்ணனைச் சீறாட்டுத் தெளிவிக்கும் இந்நிகழ்சியை அடிப்படையாகக் கொண்டு, நடுவில் பாகுபலியும், அவரது பக்கங்களில் அவரது சகோதரிகளும் நின்று கொண்டிருப்பது போன்ற தோற்றத்தில், வடஇந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் பல்வேறு இடங்களில் சமணச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

ஆனால், இதைவிடச் சிறப்பாக இந்தச் சிற்ப அமைப்பை வடிக்கலாம் என்று பெண் கல்வியை வலியுறுத்தும் ஸ்ரீபுராண நிகழ்ச்சியாக அரவக்குறிச்சியில் வடிவமைத்துள்ளனர். கண்ணபிரான் கையில் வெண்ணெய் ஏந்தும் காட்சியாக இந்தியா முழுதுமே சிற்பங்கள், ஓவியங்கள் பல உண்டு.

அதனை மாதிரியாக எடுத்து, சம்பந்தர் புராணம் ஏற்பட்ட போது, தனக்கு முலைப்பால் ஊட்டிய உமையாளைக் கோபுரத்தில் காட்டுவது போலத் தமிழ்ச் சிற்பிகள் வடித் துள்ளனர்.

காரைக்கால் அம்மையார் வடிவம் காளியினதே. அது போல, இங்கே பாகுபலியை எடுத்துவிட்டு, பெண் கல்வியைப் பரப்பும் வகையில் சேரர் தலைநகர் வஞ்சி மாநகரம் அருகே ஆதிநாதர் தீர்த்தங்கரர் சிற்பம் அமைந்துள்ளது, பழைய சேர நாட்டின் சிறப்பு. இந்தியாவிலேயே ஒரு புதுமையான ஜைனக் கலைக் கருவூலம். 'குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும் மஞ்சள் அழகும் அழகல்ல' என நாலடியிலும்,



வஞ்சிமா நகரருகே
மாதர் கல்வி




விஞ்சும் சிலை காட்டும்
சீபுராணம்

"இடை வனப்பும் தோள் வனப்பும்
ஈடின் வனப்பும்
நடை வனப்பும் நாணின் வனப்பும் –
படைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல
எண்ணோடு
எழுத்தின் வனப்பே வனப்பு"

*என ஏலாதியிலும், சமண முனிவர்கள் பெண் கல்வியின் அவசியத்தை வலியுறுத்துவதற்கேற்ற சிற்பம்.*

*சமண சமயம் போதிப்பதற்காக, சிலப்பதிகாரத்தில் குடக நாட்டில் தவப்பள்ளிக்குச் சென்று கோவலனும், கண்ணகியும் கவுந்தி அடிகளுடன் காவேரி ஆறு பாயும் நாட்டின் வளம் முழுதும் பாடுவதாக அமைத்ததும் இதன் காரணமாகவே. "இவளோ, கொங்கச்செல்வி, குடமலையாட்டி" என்று அடிகள் கூறுவது காவிரி நாட்டின் முதல் பகுதி குடகும், கொங்கும் கண்ணகியை முதலில் வழிபட்டோர் எனக் கூறிச் சிறப்பித்தார்.*

*அரவக்குறிச்சி ஜைன சிற்ப வமைதியை (Iconography) நோக்குங்கால் மூன்று அம்சங்கள் முக்கியமாக வெளிப்படுகின்ற (1) வள்ளுவர், பாகுபலி போன்றவர்களுக்கு இருக்கும் ஒரு குடை இதில் இல்லை. தீர்த்தங்கரருக்கு உள்ள முக்குடை இருக்கிறது. (2) பாகுபலி சிற்பங்கள் எல்லாவற்றிலும் துறவு நீண்ட காலம் மேற்கொண்டமையால் கால்களைச் சுற்றிச் செடிகொடிகள் காட்டப்படும்.*

*பாகுபலி திருப்பாதத்தின் அருகிலே புற்றும், நாகமும், தழைகளும், கொடிகளுமாய் இருக்கும். அவை தீர்த்தங்கரர் சிற்பமாகிய இதில் இல்லை. (3) சுந்தரி, பிராமி தந்தையுடன் நிற்கையில் கைகளில் கல்விக்கான முத்திரை காட்டப்படுகிறது. பனை ஏடும், கையில் எழுத்தாணியும் கொண்டு இரு பெண்களும் நிற்கின்றனர். இந்தப் பெண்டிரின் ஹஸ்த முத்திரை இங்கே வடிக்கப்பட்டுள்ளது ஸ்ரீபுராணக் காட்சி என்பதை ஐயந்திரிபற விளக்குகிறது.*

*பொலிவுடைய இச்சிற்பச் சிறப்புக்கு இரு அட்ட நாகபந்தங்கள் செய்தேன். 1) வஞ்சிமா நகரருகே மாதர் கல்வி. 2) விஞ்சும் சிலைகாட்டும் சீபுராணம்.* ●

## குயில் கிடைக்குமா?

புதுச்சேரியில் ஒரு கிராமம் அருகே நடந்த ஒரு விழாவில் கலந்து கொண்ட 'புரட்சிக் கவிஞர்' பாரதிதாசன், அங்கிருந்த சிலரிடம் "இங்குக் 'குயில்' கிடைக்குமா?" எனக் கேட்டார்.

அதற்குக் கூட்டத்தில் இருந்த கிராமவாசி ஒருவர், "குயில் சரிவரக் கிடைப்பதில்லை. எப்போதாவது நரிக்குறவர்கள் கொக்கு, முயல் சுட்டுக் கொண்டு வரும்போது சில நேரங்களில் குயிலையும் கொண்டு வருவார்கள்" எனப் பதில் கூறினார்.

பாரதிதாசன் கேட்டது, தனது கவிதைப் பத்திரிகையான 'குயிலை'ப் பற்றி. ஆனால் கிராமவாசி பதில் கூறியது காட்டில் பறக்கும் குயிலைப் பற்றி. இதனால் ஆத்திரமடைந்த பாரதிதாசன், அந்தக் கிராமவாசியை ஒரு முறை முறைத்துவிட்டு வேகமாக அங்கிருந்து நகர்ந்துவிட்டார்.

– அரக்கோணம் ராஜாராம்

# இம்மாத ராசி பலன்

**"என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்**
**என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!"**

'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**

**1.6.2018 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| | | சூரியன் புதன் | சுக்கிரன் |
| | 08.6.2018 சுக். – கடகம்<br>10.6.2018 புதன்– மிதுனம்<br>15.6.2018 சூரி.– மிதுனம்<br>25.6.2018 புதன் – கடகம் | | ராகு |
| செவ்வாய் கேது | | | |
| சந்திரன் சனி (வ) | | குரு (வ) | |

## மேஷம்



**மே**ஷ ராசி அன்பர்களுக்கு, மாதத்தின் முற்பாதியில் சூரியன் – புதன் இரண்டில் சஞ்சரிப்பதால், சொந்த பந்தங்களால், ரத்த சம்பந்தப்பட்ட உறவுகளால் நன்மையுண்டு. மாதத்தின் பிற்பாதியில் தொழில், உத்தியோகத் துறைகளில் ஆதாயம் உண்டு. புதிய முயற்சிகள் நன்மை பயக்கும். சனி வக்கிரகதியில் சஞ்சரிப்பதால், சிற்சில குழப்பங்களும், தடைகளும் மன வருத்தத்தை ஏற்படுத்தலாம். 10–இல் செவ்வாய் – கேது சஞ்சரிப்பதால், உத்தியோக வழியில் புதிய செல்வாக்கு, அதிகாரம் சிலருக்கு ஏற்படும். இருப்பினும் வீண் பிரச்சனைகளுக்கு இடம் கொடுக்காமல் தொழில் தலத்தில் நடந்து கொள்வது நல்லது.

குரு வக்கிர கதியில் சஞ்சரிப்பதால், சுப காரியங்கள் ஜூலை 10–ஆம் தேதி வரை தடையாகலாம். பின்னர் ஈடேற வாய்ப்புண்டு. ராகு 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், பெரியோர்களுக்கு அற்ப நோவுகள் வந்தகலும். விதி நிர்ணயக் கிரகங்களான சனி, ராகு, குரு, கேது முதலியவை உங்கள் ராசிக்குச் சுபங்களையோ, நன்மைகளையோ கொடுக்கக்கூடிய நிலை தற்சமயம் காணப்படவில்லை. 10–ஆம் தேதி வரை புதன் 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஏற்கனவே செய்த தவறு ஒன்றை நினைத்து வருத்தப்பட நேரிடலாம்.

## ரிஷபம்



**ரி**ஷப ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் சூரியன் சமமான நன்மை, தீமைகளைக் கொடுக்கும் வாய்ப்புண்டு. மாதத்தின் முற்பாதியில் ஒரு சிலருக்குச் சொத்து சுகங்கள் பரிவர்த்தனை மூலம் நன்மை உண்டாகக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் எதார்த்தமான உங்களது செயல்பாடுகள் ஒரு சில எதிர்ப்புகளை ஏற்படுத்தலாம். சனி வக்கிரகதியில் சஞ்சரிப்பதால் தொழில், உத்தியோகத் துறைகளில் சில குழப்பங்கள் ஏற்படும் வாய்ப்புண்டு.

குரு வக்கிரகதியில் சஞ்சரிப்பதால் நோய், கடன்கள் முதலியவற்றிலிருந்து இன்னும் ஒரு மாத காலத்திற்குத் தப்பித்து விடுவீர்கள். பின்னர் சுமார் 3 மாத காலம் வரை சற்றுச் சிரமங்கள் ஏற்படலாம். ராகு 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், பயணங்கள் அனுகூலப்படும். துணிச்சல் மிகு முயற்சிகள் நல்ல பலனைக் கொடுக்கும். 9–இல் செவ்வாய், கேது இன்னும் சில மாதங்களுக்கு இணைவு பெற்றுச் சஞ்சரிக்க இருப்பதால் வீண் பயம் இருந்து வரும். மதவாதம், தீவிரவாதம், இனவாதம் தொடர்புடைய கருத்துக்களைப் பகிரங்க

மாகப் பேசுவது நல்லதல்ல. புது முயற்சிகள் இம்மாதம் தொடங்குவது சிறப்பல்ல.




**மி**துன ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் சுபச் செலவு, விரயம், அலைச்சல் முதலியவை தவிர்க்க இயலாது. மாதத்தின் பிற்பாதியில் எதிர்ப்பு, பல்வேறு பிரச்சனைகள் கவலை கொடுக்கும். 8–இல் செவ்வாய் – கேது சஞ்சரிப்பதால், மின்சார சாதனங்கள், நெருப்பு, சிறு விபத்து முதலியவை ஏற்படலாம், கவனம் தேவை. மேலும் தேவையற்ற கோபதாபங்கள் ஏற்படும். பிறர் மீது போர் செய்வீர்கள். இரண்டில் ராகு சஞ்சரிப்பதால், அதிகப்படியான செலவுகள், அத்தியாவசியச் செலவுகள் ஏற்படும்.

குரு 5–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், மிகவும் வயது கூடியவர்கள் புத்தி சலனம் அடைவர். சிலர் புத்திரர்களால் கவலையடைவர். புதன் 10–ஆம் தேதி வரை 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், உங்களின்கீழ் பணி செய்பவர்கள் உங்களை வஞ்சிக்கக்கூடும் அல்லது ஏமாற்றக்கூடும். 11–ஆம் தேதி முதல் உங்கள் ராசிமீது புதன் சஞ்சரிப்பதால், ஆரோக்கியம் கூடும். தன்னம்பிக்கை அதிகரிக்கும். 7–இல் சனி வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், குடும்பத்தில் அவ்வப்போது பிரச்சனைகள் தோன்றி மறையும். சிறப்பான மாதமல்ல.




**க**டக ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் லாபத்தையும், நண்பர்கள் மூலமான உதவியையும், உத்தியோகம், தொழில் முதலியவற்றில் வருமானத்தையும் கொடுக்கக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் சுப விரயம், சுபச்செலவு, அலைச்சல், பயணம் முதலிய பலன்களை ஏற்படுத்தக்கூடும். சனி 6–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், ஏதேனும் வியாதிகள் சம்பவிக்கக்கூடும். வயிற்று உபாதைகள், இடுப்பு, தொடைப் பகுதிகளில் பாதிப்புகள் ஏற்படலாம்.

4–இல் குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் சுய வியாபாரம் செய்பவர்கள் அதிருப்தி அடைவர். சிலர் இருப்பிடம் முதலியவற்றை மாற்றுவர். செவ்வாய் – கேது 7–இல் சஞ்சரிப்பதால் கணவன் – மனைவி தகராறு தவிர்க்க இயலாது. இளம் வயதினர் காதல் திருமணம் செய்வர். ஒரு சிலர் மதம் மாறிக் காதல் வயப்படுவர். அடுத்த 6, 7 மாதங்கள் இல்லற வாழ்வில் குழப்பம் ஏற்பட வாய்ப்புள்ளதால் கவனம் தேவை. ராசி மீது ராகு சஞ்சரிப்பதால், பணக்காரன் ஆகிவிட வேண்டும் என்ற ஆசை அதிகப்படும். ஆனால், ஆசை அதிகமானாலும் அடைவது கடினமாகும். புதன் 11–ஆம் தேதி முதல் தொழில் சம்பந்தமாகத் தற்காலிகமான பிரிவுகளை ஏற்படுத்தலாம். மாதத்தின் முற்பாதி சிறப்பானது.




**சி**ம்ம ராசி அன்பர்களுக்கு இம்மாதம் அதிர்ஷ்டகரமானது. மாதத்தின் முற்பாதியில் 10–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால் தொழில், உத்தியோகத் துறைகளில் எதிர்பார்ப்புகள் ஈடேறும். மாதத்தின் பிற்பாதியில் லாபஸ்தானத்தில் சூரியன் சஞ்சரிப்பதால், பொருள் வரவும், நண்பர்கள், தொழில் பிரமுகர்கள் மூலமான அனுகூலமும், நினைத்த காரியம் தங்கு தடையின்றி ஈடேறுவதும் ஏற்படக்கூடிய பலன்களாகும். குரு 3–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், தன வரவும் உண்டாகும். பிள்ளைகளால் எதிர்பாராத நன்மையும் ஒரு சிலருக்கு ஏற்படும்.

8–ஆம் தேதி வரை சுக்கிரன் ஸ்திரீகளால் ஆதாயத்தை ஏற்படுத்தக்கூடும். செவ்வாய், கேது 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் எவ்வித எதிர்ப்பையும் சமாளிக்கலாம். வேலை நிமித்தமாகவோ அல்லது வேறு காரணங்களாலோ கூட்டாளிகள் மற்றும் குடும்பத்தில் தற்காலிகப் பிரிவுகளைச் சிலர் அடைவர். புதன் இம்மாதம் சாதகமாகச் சஞ்சரிப்பதால், ஒப்பந்தப் பணிகள் செய்வோர் கலை, இலக்கியத் தொடர்புடையவர்கள் மேன்மை அடைவர். 12–இல் ராகு சஞ்சரிப்பதால் குல தெய்வம் துணை நிற்கும். எதிரிகள் ஏமாந்து விடுவர். திருமணம் முதலிய சுப காரியங்கள் ஜனன ஜாதகத்தில் குரு வக்கிரம் பெற்றவர்களுக்கு நிறைவேறும்.

**க**ன்னி ராசி அன்பர்களுக்கு இம்மாதத்தின் முற்பாதியில் அவ்வப்போது சிற்சில தடைகள் ஏற்பட்டாலும், மாதத்தின் பிற்பாதியில் சக காரியங்களும் அனுகூலப்படும். தொழில், உத்தியோகத் துறைகளிலும், பொருளாதார விஷயங்களிலும்

## கன்னி



எதிர்பார்ப்புகள் நிறைவேறும். புதிய முயற்சிகளை மாதத்தின் பிற்பாதியில் தொடங்க நிச்சய வெற்றி உண்டு. சனி வக்கிரம் பெற்று 4–இல் சஞ்சரிப்பதால், புதிய வசதி வாய்ப்புகள் எதிர் பாராத வகையில் ஒரு சிலருக் குக் கிடைக்கும் வாய்ப்புண்டு. குடும்பச் சூழ்நிலைகளில் நல்ல மாற்றங்கள் நிகழக்கூடும்.

குரு 2–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், வரவேண்டிய நிலுவைத் தொகைகள் கிடைப்பதில் கால தாமதம் ஆகலாம். சுப காரியங்கள் ஆனி மாதம் 26–ஆம் தேதி வரை தள்ளிப் போகலாம். செவ்வாய் – கேது 5–இல் சஞ்சரிப்பதால், சில நேரங்களில் குழப்பம் தலைதூக்கும். சுதந்திர மாகச் செயல்பட இயலாது. ராகு 11–இல் சஞ்சரிப்ப தால் உங்கள் நண்பர்கள் மூலம் குறிப்பாக மூன்றா வது மனிதர்களால் உதவியும், ஆதாயமும் இருந்து வரும். 8–ஆம் தேதி வரை பெண்களிடம் வெறுப்பை வெளிப்படுத்த வேண்டாம். 9–ஆம் தேதி முதல் சுக்கிரன் சில அதிர்ஷ்ட வாய்ப்பையும் பெண்களால் நன்மையையும் ஏற்படுத்தக்கூடும்.

## துலாம்



**து**லாம் ராசி அன்பர் களுக்கு, மாதத்தின் முற்பாதி யில் எதிர்பாராத சம்பவங் களும், எதிர்பாராத செலவு களும் ஏற்படக்கூடும். தேக நலிவுகள் ஏற்படலாம். மருத்துவ ரிடம் ஆலோசனை பெற வேண் டிய சூழ்நிலைகள் ஏற்பட வாய்ப்புண்டு. மாதத்தின் பிற்பாதியில் காரியத் தடைகள் ஏற்படும். தடைகளுக்குப்பின் காரிய சித்தி ஏற்படும். செவ் வாய் – கேது 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், பெற் றோர்களுக்கு எதிர்வரும் 6, 7 மாதங்களுக்குப் பிரச்சனைகள் தோன்றக்கூடும். தாய்வழி வர்க்கத் தார் பாதிப்பை அடைவர். சனி வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், அவ்வப்போது குழப்பங்களுக்கு ஆளாவீர்கள்.

ஜன்ம ராசியில் ஜூலை 10 வரை குரு வக்கிரகதியில் சஞ்சரிப்பதால், அதுவரை சுதந்திர மாகச் செயல்படுவீர்கள். பின்னர் பிறருக்குக் கட்டுப்பட்டு வாழவேண்டிய கட்டாயச் சூழ்நிலை கள் ஏற்படும். ஒரு சிலர் பிரிவுகளை அடைவர். சுக்கிரன் 9–ஆம் தேதி முதல் 10–ஆம் வீட்டில் சஞ் சரிப்பதால் தொழில், உத்தியோக ஸ்தலங்களில் உங்கள் காரியங்களுக்குப் பெண்கள் முட்டுக் கட்டை போடலாம். பெண்களால் உபத்திரவம் வரலாம். புதன் கல்வி, போதனை, சுய வியாபாரம் செய்பவர்களுக்குக் கூடுதலான நன்மைகளைச் செய்யும். ராகு 10–இல் சஞ்சரிப்பதால், பயணங்கள் ஏற்படலாம். சுப காரியங்கள் தாமதமாகும்.

## விருச்சிகம்



**மா**தத்தின் முற்பாதியில் சூரியன் 7–ஆமிடத்தில் சஞ் சரிப்பதால், அவ்வப்போது மனதில் சஞ்சலம் தோன்றும். குடும்பப் பிரச்சனைகள் கவலை கொடுக்கும். மாதத் தின் பிற்பாதியில் எதிர்பாராத செலவுகள் ஏற்படும். உடல் உபத்திரவங்கள் ஏற்படும். சனி வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், பணத்தேவை மிகும். குடும்பப் பிரிவுகள் சிலருக்கு ஏற்படும். விற்கிரயங்களில் இழுபறி நிலை ஏற்படும். குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், பணத்தட்டுப்பாடு குறையும். நண் பர்கள், பெரிய மனிதர்கள் தொடர்புகளால் தொழில் துறையில் நல்ல வாய்ப்புகள் வந்தடையும்.

இராகு 9–இல் சஞ்சரிப்பதால், தொலைதூர வியாபாரங்கள், ஏற்றுமதி இறக்குமதித் தொழில் துறைகளில் இருப்பவர்கள் நன்மை அடைவர். செவ்வாய், கேது சேர்க்கை பெற்று 3–இல் உச்சம் பெற்றுச் சஞ்சரிப்பதால், அடுத்த 6, 7 மாதங்கள் சகல காரியங்களும் அனுகூலமாகும். உத்தியோக வழியில் சிறப்பு ஏற்படும். மனோ தைரியத்தால் வெற்றிகள் பல அடைவீர்கள். பூமி சம்பந்தப்பட்டுச் சிலருக்கு லாபம் ஏற்படும். 9–ஆம் தேதி முதல் சுக் கிரன் 9–இல் சஞ்சரிப்பதால் அலங்காரப் பொருள் சேர்க்கை ஏற்படும். ஒரு சிலருக்குத் திருமண வாய்ப்புக் கூடி வரும்.

## தனுசு



**த**னுசு ராசி அன்பர் களுக்கு, இம்மாதம் பெரும் பாலும் அனுகூலமான பலன் களே ஏற்படும் வாய்ப்புண்டு. மாதத்தின் முற்பாதியில் தொழில் வகையிலும், பொரு ளாதார விஷயங்களிலும் நன்மை ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் குடும்பத்தில் மகிழ்ச்சியும், புதிய நட்பு வட்டாரங்களில் ஈடுபாடு கொள்ளுதலும் ஏற்படும். செவ்வாய் வாக்கு ஸ்தானத்தில் உச்சம் பெற்றுச் சஞ்சரிப்பதால், திறமையான வாதப் பிரதிவாதங்களால் வெற்றியும் அடைவீர்கள். பூர்வ புண்ணிய வசத்தால் சொத்து சுகம் எதிர்வரும் 6, 7 மாதங்களுக்குள் அடைவீர் கள். ஜன்ம ராசியில் சனி வக்கிரம் பெற்றுச்

சஞ்சரிப்பதால், தடைகள் அகன்று விடும். புதிய முதலீடுகள் செய்யக்கூடிய வாய்ப்பும் வரும் காலங்களில் உருவாகும்.

குரு ஜூலை 10 வரை சில அதிருப்திகளை ஏற்படுத்தினாலும், பின்னர் பொருள், தனம் சேர்க்கை ஏற்படும். சுக்கிரனின் சஞ்சாரத்தால் விலையுயர்ந்த பொருள் ஒன்றை அடமானம் வைக்கவோ, விற்கவோ செய்வீர்கள். மேலும் மருத்துவச் செலவு ஒன்றும் வரும். ராகு 8–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், மாற்று மதக்காரர்களிடம் இன்னும் சிறிது காலத்திற்குக் கவனம் வேண்டும். 2–இல் கேது சஞ்சரிப்பதால், சிலருக்குச் சாஸ்திரப் பற்று அதிகரிக்கும். கல்யாணக் காரியங்கள் ஆனி 26–க்கு மேல் நிறைவேறும்.

## மகரம்



**ம**கர ராசி அன்பர்களுக்கு சூரியன் இம்மாதம் முற்பாதியில் காரியத்தடைகளை ஏற்படுத்தும். சந்ததியினரால் கஷ்ட நஷ்டம் ஏற்படும். புத்தி, சலனம் ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் மனக்கஷ்டம் அகலும். தொழில், உத்தியோகத் துறைகளில் அனுகூலம் ஏற்படும். பண வருவாய் ஏற்படும். எதிர்ப்புகள் அகன்றுவிடும். சனி வக்கிரம் பெற்றுள்ளதால், பாக்கித் தொகைகள் வசூல் ஆகும். சிலர் பழைய நண்பர்களோடு தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வர். ஜூலை 10 வரை தொழில் துறையில் கவலைப்பட ஒன்றுமில்லை. பின்னர் 3, 4 மாதங்கள் கவலையுண்டு.

இராகு 7–இல் சஞ்சரிப்பதால், வாழ்க்கைத் துணைவரது உடல் நலத்தில் அக்கறை வேண்டும். ராசி மீது செவ்வாய் – கேது சஞ்சரிப்பதால் இரத்த அழுத்தம் உள்ளவர்கள் ஒழுங்காக மருந்து, மாத்திரைகளை எடுத்துக்கொள்ள வேண்டும். மத்திம வயது உள்ளவர்கள், இளவயதினர் வண்டி, வாகனங்களைக் கையாள்வதிலும், தொழில் வியாபாரங்களிலும் நிதானத்துடன் செயல்பட வேண்டும். வீண் கோபதாபங்களைத் தவிர்க்க வேண்டும். நம் கலாச்சாரம், பண்பாடு, பழக்கவழக்கங்களை மனதில் கொண்டு நடந்து கொள்ள வேண்டும். அடுத்த 6 மாதங்களுக்கு இப்பலன் பொருந்தும். 9–ஆம் தேதி முதல் சுக்கிரன் 7–இல் சஞ்சரிக்க இருப்பதால், ஸ்திரீகளால் எதிர்ப்பும், வெறுப்பும் ஏற்படும். புதிய காரியங்களை மாதத்தின் பிற்பாதியில் தொடங்க நன்மையுண்டு.

## கும்பம்



**கு**ம்ப ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் 4, 5–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதால் செலவு, விரயம், அலைச்சல், தடுமாற்றம், குழந்தைகளால் செலவு, அரசாங்கப் பீடை ஏற்படக்கூடும். செவ்வாய் – கேது 12–ஆம் வீட்டில் இணைவு பெற்றுச் சஞ்சரிப்பதால், ஞாபக மறதியால் இழப்பு, கெட்ட கனவுகள் தோன்றுவது, தூக்கமின்மை முதலிய பலன்களை ஏற்படுத்தலாம். உங்கள் தொழிலை விட்டுவிட எண்ணம் ஏற்படலாம். சனி வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் பணியாளர்கள், நண்பர்கள் வகையில் பிரச்சனைகள் எழக்கூடும். முதியவர்கள், பெரியோர்கள் உங்களுக்கு எதிராகத் திரும்பக்கூடும்.

குரு வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், பொருள் முடக்கம், காரியங்கள் தடைப்படுதல் முதலிய பலன்கள் ஏற்படக்கூடும். ராகு 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், உணவுப் பழக்கங்களில் கவனம் தேவை. பிறரது சொத்து சுகங்களைப் பராமரிப்பவராக இருந்தால், நேர்மையுடன் நடந்து கொள்வது நல்லது. சுப காரியங்கள் இன்னும் ஓரிரு மாதங்கள் கழித்து நிறைவேற வாய்ப்புண்டு. எதிர்பாராத தருணத்தில் சிலர் வேற்றிடம் செல்ல வேண்டிய சூழ்நிலை வரலாம். சுக்கிரன் 6–இல் சஞ்சரிப்பதால், பெண்கள் மீது வெறுப்பு ஏற்படும்.

## மீனம்



**மீ**ன ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் மனோ தைரியமும், உற்சாகமும், தொழில்துறை, பொருளாதார விஷயங்களில் திருப்தியும் ஏற்படக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் உடல் உபாதை, அலைச்சல், குடும்பப் பிரச்சனைகள் தோன்றக்கூடும். சுக்கிரன் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், பயணங்களில் உங்களது உடைமைகள், ஆடம்பரப் பொருள்களைப் பத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

குரு 8–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், திருமணக் காரியங்கள் எதிர்பாராமல் கூடிவரும் வாய்ப்புண்டு. குரு ஜனன ஜாதகத்தில் வக்கிர நிலையில் உள்ளவர்களுக்கு இப்பலன் பொருந்தும். சனி 10–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், தொழில் துறையில் சங்கடங்கள் தற்காலிகமாக நீங்கிவிடும். செவ்வாய் – கேது 11–இல் சஞ்சரிப்பதால், பூமி லாபம், உத்தியோகப் பிராப்தி சிலருக்குக் கிட்டும். ஒரு சிலருக்குப் பெரியோர், ஞானவான்கள் நட்பும், உதவியும் கிட்டும். அரசாங்க உத்தியோகஸ்தர்களால் நன்மையுண்டு. புதிய முயற்சிகளை மாதத்தின் முற்பாதியில் தொடங்க வெற்றி ஏற்படும். பொதுவில் நன்மையான மாதம்.

# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 36 ஜூன் 2018 இதழ் : 5

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**

ஆசிரியர் & வெளியிடுபவர் : **ம. மாணிக்கம்**

*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **த. ராஜ்குமார்**

*Printer* : **T. RAJKUMAR,**

**Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ்,

E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,

கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**

கதை, கவிதைகளில் வரும் பெயர்களும்,
சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ
ஆசிரியருக்கு உரிமை உண்டு.

**தனிப் பிரதி ரூ.15/-**
**ஆண்டு சந்தா ரூ. 265/-**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/-**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.–யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**

வெளியிட்டோர் :
**சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail :
omsakthieditorial@gmail.com




**சமையல்**

# ஜவ்வரிசி தோசை

**தேவையானவை :**

***ஜவ்வரிசி*** *: 1 கப், புழுங்கல் அரிசி : 1 1/2 கப், பெரிய வெங்காயம் : 100 கிராம், பச்சை மிளகாய் : 5, இஞ்சி : சிறிய துண்டு, கறிவேப்பிலை : சிறிதளவு, உப்பு : தேவைக்கேற்ப, சமையல் எண்ணெய் : 200 கிராம்.*

**செய்முறை :**

1. அரிசி, ஜவ்வரிசியைத் தனித்தனியாக ஒரு மணி நேரம் ஊற வைக்கவும். வெங்காயத்தைத் தோலுரித்துப் பொடியாக நறுக்கவும். பச்சை மிளகாய், இஞ்சியைப் பொடியாக நறுக்கவும்.
2. அரிசியை மிக்ஸியில் போட்டு அரைத்து, பின்பு ஜவ்வரிசியையும் சேர்த்து அரைத்து வைக்கவும்.
3. அதில் மிளகாய், இஞ்சி, உப்பு சேர்த்து, வெங்காயத்தை எண்ணெய் விட்டு வதக்கிப் போட்டு நன்று கலந்து வைக்கவும்.
4. தோசைக் கல்லை அடுப்பில் வைத்துச் சூடானதும், எண்ணெய் தடவி, மாவுக் கலவையைத் தோசைகளாக வார்த்துச் சுற்றிலும் எண்ணெய் விட்டு, முறுகலாக வெந்ததும் எடுக்கவும்.

ருசியான 'ஜவ்வரிசி தோசை' தயார்.

– **அ. திவ்யா,** காஞ்சிபுரம்.



விஞ்ஞான ஆராய்ச்சியால் வளர்ந்து வரும் மருத்துவக் கண்டுபிடிப்புகளால் பலவித நோய்கள் குணமாக்கப்பட்டு வரும் இந்தக் காலத்தில், 'மருந்தே இல்லாமல்' வெறும் கைகளால் தொட்டுக் குணமாக்கப்படும் முறைக்கு 'ரெய்கி' (Reiki) என்று பெயர். இந்த Reiki Hands - on - Healing Therapy பல காலமாக நடைபெற்று வருகிறது.

**சிகிச்சை முறை :** உடலில் உள்ள ஆதாரச் சக்கரங்கள் (CHAKRA) எனப்படும் சக்தி மையங்களுக்கு ஏற்பட்டுள்ள தடையை அகற்றி, அவற்றின் இயக்கங்களைச் சமன் செய்து, அதனால் உணரப்படாத ஆழமாகப் புதைந்திருக்கும் வியாதிகளும் தானாகவே மறைந்து விடுகின்றன.

**யார் மேற்கொள்ளலாம்? :** பலவித மருத்துவ முறைகளால் நிவாரணம் ஏதும் கிடைக்காமல் அவதிப்படுபவர்கள்.

பரிசோதனை மூலம் உபகரணங்களால் கண்டறியப்பட முடியாத நோயுடன் கஷ்டப்படுபவர்கள்.

வாழ்நாள் முழுதும் மருந்து மாத்திரை உட்கொண்டு வாழ்க்கையை நடத்திக் கொண்டு உள்ளவர்கள்.

மருத்துவச் செலவைச் சமாளிக்க முடியாதவர்கள்.

மருத்துவர் அறியப்படாத ஓர் உறுப்பு உடலில் இருப்பதாய் வைத்துக் கொள்வோம். அந்தப் பாகம் பாதிக்கப்பட்டால், ஒருவர் நோய்வாய்ப்படலாம். அதற்கான சிகிச்சை இதுவரை கண்டறியப்படாததாகவே இருக்கும். இந்த நேரத்தில் பிரபஞ்சச்



# ஆரோக்கிய வாழ்விற்கு 'ரெய்கி'

நாளமில்லாச் சுரப்பிகளைத் தூண்டி ஹார்மோன் உற்பத்தியைச் சீர் செய்து ஆரோக்கியத்தை நிலை நாட்டுகிறது.

பல நோய்களுக்கு மனதில் ஏற்படும் விகாரங்களே காரணம் எனக் கண்டறியப்பட்டுள்ளது. மனதில் ஏற்பட்டுள்ள எதிர்மறை ஆற்றலை ரெய்கி சிகிச்சை மூலம் களைந்து, உடலின் ஆரோக்கியத்திற்கு வழி வகுக்கிறது.

உடலில் உள்ள சக்தி மையங்களைச் சீராக இயக்குவதன் மூலம் நோயின் மூல காரணமே சரி செய்யப்படுவதால், நோய்கள் மீண்டும் தலை தூக்கா வண்ணம் சூழ்நிலை உருவாக்கப்படுகிறது. அதாவது, நோய்க்கு நிரந்தரத் தீர்வு கிடைக்கிறது. இதனால், மேலெழுந்த வாரியாக சக்தியாய் ரெய்கி அவரைக் குணப்படுத்தும்.

**பக்க விளைவுகள் :** இந்தச் சிகிச்சை முறையில் மருந்து ஏதும் பயன்படுத்தாததனால், எதிர்மறைப் பக்கவிளைவுகளுக்கு இடமே இல்லை. சொல்லப்போனால், உணரப்படாத உடல், மனப் பிரச்சனைகளும் தீர்ந்து விடும்.

**தகுதி :** வேறு எந்த மருத்துவத்தை மேற்கொண்டாலும் அவற்றோடு ரெய்கி சிகிச்சையையும் எடுத்துக் கொள்ளலாம். விரைவில் குணமடைய வாய்ப்புண்டு. எந்த மருத்துவ முறைக்கும் ரெய்கி சிகிச்சை முறை எதிரி அல்ல.

**எந்த எந்த நோய்களை ரெய்கி குணமாக்கும்? :** அநேகமாய் எந்த நோயானாலும் ரெய்கி குணமாக்குவதைப் பலர் கண்டறிந்



துள்ளனர். என் அனுபவத்தில், தீராத தலைவலி, தூக்கமின்மை, ஆஸ்துமா, இளைப்பு, சைனஸ், தைராய்டுப் பிரச்சனைகள், மூட்டு வலி, மார்பகப் புற்றுநோய், மார்பகக் கட்டிகள், கீமோதெரபியால் ஏற்படும் பக்க விளைவுகள், சுறுசுறுப்பின்மை, படிப்பில் கவனமின்மை, மனச்சோர்வு, மன அழுத்தம் ஆகியவை குணமாக்கப்பட்டுள்ளன.

சமீப காலங்களில் அதிகரித்து வரும் மார்பகப் புற்றுநோய், அதற்காகக் கொடுக்கப்படும் கீமோதெரபியால் ஏற்படும் அவதியும், பெண்களைத் தொல்லைகளாக்குகின்றன. இதற்கு ரெய்கி சிகிச்சை கை கொடுத்துப் பிரச்சனைக்கு இனிமையான தீர்வை அளிக்கும். ஆண்மைக் குறைபாடு, குழந்தையின்மை, கருப்பைப் பிரச்சனைகள், நீரிழிவு முதலியவற்றிற்கும் நிவாரணம் கிடைக்கப்பெறலாம். மேலும், கர்ப்பிணிப் பெண்கள் ஆரோக்கியமான, அறிவுள்ள குழந்தையைச் சுகப்பிரசவம் மூலம் பெற்றெடுக்கலாம். நீடித்த, நாட்பட்ட நோய்களுக்கும் நிரந்தர நிவாரணம் பெற ரெய்கி சிகிச்சை உதவும்.

**பயிற்சி** : ஆர்வமுள்ள யார் வேண்டுமானாலும் முறையான தீட்சை பெற்றுக் கற்றுக் கொள்ளலாம். கல்வித் தகுதியோ, மருத்துவ அறிவோ தேவையில்லை. புத்தகத்தைப் பார்த்துப் படித்துக் கொள்ளும் முறையல்ல இது. தகுதி பெற்ற குருவிடம் தீட்சை பெற்றாலே இந்தச் சிகிச்சையைச் செய்ய முடியும்.

**பயன்கள்** : தீட்சை பெற்ற பலர் தங்கள் உடலில் தேங்கியிருந்த டாக்சின் நச்சுப்பொருள்



ஆர். வெங்கடரமணன்



வெளியேற்றப்பட்டு மிகுந்த ஆரோக்கியத்துடன் வாழலாம்.

ரெய்கி நிபுணராக வீட்டிலேயே ஒருவர் இருந்தால், குடும்பத்தில் பல நோய்களுக்கு உடனடி நிவாரணம் பெற முடியும்.

குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் 'ரெய்கி' சிகிச்சை அளித்து, நோயைப் போக்கி, மேலும் வராதபடி நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகரித்து வீட்டில் ஆரோக்கியத்தை நிலை நாட்டலாம்.

தீட்சை பெற்றவர் சுயமாகவே சிகிச்சை செய்து கொள்ளலாம்.

தொலைவிலிருந்து சிகிச்சை அளிக்கும் முறையின் மூலம் எங்கோ உள்ளவர்களுக்குக் கூடப் பிரபஞ்ச சக்தியைச் செலுத்தி உடனடி நிவாரணம் பெற உதவலாம். உதாரணமாக, வேறு ஊரில் உள்ள ஒரு நபர் கடுமையான வலியால் துடிப்பதாக வைத்துக் கொள்வோம். ரெய்கி கற்றுக் கொண்டவர் அவர் இருந்த இடத்திலிருந்து கொண்டு வேறு ஊரில் உள்ள நபருக்கு வலி நிவாரணம் அளித்து உதவலாம்.

நியாயமான குறிக்கோள், நிறைவேறத் தாமதமானால் ரெய்கி மூலம் துரிதப்படுத்திக் குறிக்கோளை அடையலாம்.

மன உள்ளுணர்வையும், நோய் எதிர்ப்பாற்றலையும் வலுவாக்க ரெய்கியைப் பயன்படுத்தலாம்.

வெறும் கைகளாலேயே உடலைத் தொட்டு ரெய்கி சக்தியைச் செலுத்தி நோயைக் குணப்படுத்தும் மிக எளிய முறை இது.

ஆராய்ச்சி மூலம் பெற்ற அறிவு மாறக் கூடியது. இதனால் கிடைக்கும் மருத்துவமும் வரையறைக்குட்பட்டது. ஆனால், என்றும் மாறாத, எங்கும் நிறைந்துள்ள ரெய்கி என்னும் பிரபஞ்சச் சக்தியினால் கிடைக்கும் பயனோ, அளவற்றது. மாறாதது.

ஆகவே, விஞ்ஞானத்தினால் கிடைக்கப் பெறாத ஆரோக்கியம், அருள் சக்தியான ரெய்கியின் மூலம் கிடைப்பது சாத்தியம். •



பழைய பிரதி

# "கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம்" நூல் வெளியீட்டு விழா!

**கோ**வையில் 13.5.2018 ஞாயிறன்று 'கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம்' நூல் வெளியிட்டு விழா, கோவை தொழில் வர்த்தக சபை அரங்கில் சிறப்பாக நடைபெற்றது.

இவ்விழாவிற்குக் கோவை இந்திய தொழில் வர்த்தக சபைத் தலைவரும், 'சிறுதுளி' அமைப்பின் நிறுவனருமான திருமதி. வனிதா மோகன் அவர்கள் தலைமை தாங்கினார். சென்னை 'பொற்றாமரை விருது' அமைப்பினரும், பி.ஜே.பி. கட்சியின் மாநிலங்களவை எம்.பி.யுமான திரு. இல. கணேசன் அவர்கள் இந்நூலை வெளியிட்டுச் சிறப்பித்தார்.

இந்நூலின் முதல் பிரதியை கோவை கே.பி.ஆர். கல்வி மற்றும் தொழில் நிறுவனங்களின் தலைவர் தொழிலதிபர் திரு. கே.பி. ராமசாமி அவர்கள் பெற்றுக் கொண்டு சிறப்பித்தார்.

இந்த நூலைத் தயாரித்து, இந்த விழாவை ஏற்பாடு செய்தவர் 'நமது நம்பிக்கை' பத்திரிகையின் ஆசிரியர் 'கலைமாமணி' மரபின் மைந்தன் முத்தையா அவர்கள்.

இந்த நூல் உருவாக்கத்தில் பணியாற்றிய 'ஓம் சக்தி' ஆசிரியர் கவிஞர் பெ. சிதம்பரநாதன் அவர்களுக்கு இவ்விழாவில் சிறப்புச் செய்யப்பட்டது.

'கொங்கு நாடடில் இந்திய சுதந்திரப் போராட்டம்' என்ற இந்த நூலை, 30 ஆண்டுகளுக்கு முன்பு கோவையில் காங்கிரஸ் தலைவராக இருந்த திரு. கே.பி. திருவேங்கடம் அவர்கள்தான் முதலில் தயாரித்தார். அவருக்கு உறுதுணையாக ஒண்டிப்புதூர் தியாகி பி. சுப்பிரமணியம் அவர்களும், திருப்பூர் எம்.எல்.ஏ. தியாகி பி. வேலுசாமி அவர்களும் இருந்தார்கள்.

இந்த நூல் தயாரிப்பில் இதனை இலக்கிய மணம் கமழுமாறு செய்ய பேரா. இராம. இருசுப்பிள்ளை அவர்களும், அருட்செல்வரின் தொண்டராகிய கவிஞர் பெ. சிதம்பரநாதன் அவர்களும் பணி செய்தார்கள்.

திரு. கே.பி. திருவேங்கடம் அவர்கள், அருட்செல்வரைச் சந்தித்துத் தன்னால் உருவாக்கப்பட்ட தட்டச்சுப் பிரதியை எடுத்துக் கொண்டு வந்து அவரிடம் ஒப்படைத்தார். அவருடன் கூடவே, திருப்பூர் பி. வேலுசாமி அவர்களும், ஒண்டிப்புதூர் பி. சுப்பிரமணியம் அவர்களும் வந்திருந்தனர்.

தட்டச்சுப் பிரதியைப் பார்த்த அருட்செல்வர், 'மிக அருமையான ஒரு பணியை நீங்கள் செய்திருக்கிறீர்கள். முதலில் எனது பாராட்டுக்கள்' என்று தெரிவித்தார்.

'கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம்' என்ற இந்த நூலுக்கு முன்பே, 'பெரியார் மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு' நூலும், நெல்லை சோமையாஜுலு தலைமையில் 'நெல்லையில் சுதந்திரப் போராட்ட வரலாறு' நூலும் வெளியாகிவிட்டன. இந்த இரண்டு நூல்களையும் படித்துப் பார்த்த அருட்செல்வருக்கு, கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு எழுதப்பட வேண்டுமே என்ற எண்ணம் ஏற்பட்டது.

அப்படி அவர் எண்ணிய காலம் 1970–கள் எனலாம். 1980 வாக்கில்தான் தியாகி கே.பி. திருவேங்கடம் அவர்கள் ஐயாவைச் சந்திக்க

*தொடர்ச்சி 92-ம் பக்கம்*

# புத்தக மதிப்பீடு

## நான் கண்ட அந்தமான்

ஆசிரியர் : நந்தவனம் சந்திரசேகரன், வெளியீடு : இனிய நந்தவனம் பதிப்பகம், *17*, பாய்க்காரத் தெரு, உறையூர், திருச்சி *– 620 003*, பக். *112*, விலை ரூ. *100/–*, செல் : *94432 84823*.

**‘நா**ன் கண்ட மியான்மர்’ எனும் பயணக் கட்டுரைக்கு அடுத்து இந் நூலாசிரியரின் இரண்டாவது பயணக் கட்டுரை நூல் இது. சென்ற ஜனவரி மாதம் அந்தமான் பயணம் மேற் கொண்ட அவர், அந்தமானின் அழகு, அங்குள்ள கலவையான கலாச்சாரம், அதன் வரலாறு, செல்லுலார் சிறை அனுபவம், அந்தமான் ஆதிகுடிகள், இலக்கிய விழாக்கள், தீவுப் பயணங்கள், அந்தமானில் தமிழிலக்கியம் எனக் குறைவான பயண நாட்களில் நிறை வான செய்திகளை இந்நூலில் பதிவு செய்திருப்பது சிறப்பு. பல நாடுகளுக்கு இந்நூலாசிரியர் பயணம் மேற்கொண்ட அனுபவம் இருப்பதால், அதுபற்றிய நுணுக்கமான செய்திகளை உரிய முறையில் முழுமையாகத் திரட்டித் தர முடிந்திருக்கிறது. அந்தமானில் உள்ள முக்கிய இடங்களின் புகைப்படங் களையும் இந்நூலில் இடம்பெறச் செய் திருப்பது கூடுதல் சிறப்பு.

## மரபுத் தோட்டம்

ஆசிரியர் : பூ.அ. இரவீந்திரன், வெளி யீடு : கீதா பதிப்பகம், அன்புநகர் 3–ஆம் வீதி, இடையர்பாளையம், கோவை – *25*, பக். : *108*, விலை ரூ.*100/–*, செல் : *98425 81878*.

**‘ம**ரபுத் தோட்டம்’ எனும் இந்நூலில் நாற்பது தலைப்புகளில் உள்ள மரபுக் கவிதைகளைக் கவனத்தோடு கருத் தூன்றிப் படித்தால் – தமிழ்மொழிப் பற்று ஏற்படும். இயற்கையை நேசிக்கும் மனப்பான்மை உருவாகும். உடல்நலம் பற்றிய அக்கறை உண்டாகும். இசை நுணுக்கங்கள் தெரியும். வறுமையைப் புரிந்துகொள்ள முடியும். மனிதத்தை விளங்கிக் கொள்ள முடியும். கிராமத் தின் அழகை ரசிக்கத் தூண்டும். சமூக அமைப்பினைச் சீர்தூக்கிப் பார்க்க முடியும். புலமை மிகு சான்றோர்களைப் பற்றிய கருத்தோட்டமுள்ள கவிதை வீச்சை ரசிக்க முடியும். இப்படி இந் நூலை ஒரு மரபுத் தோட்டமாக மட்டு மல்லாமல், தமிழ் மணம் கமழும் மரபுப் பூந்தோட்டமாகவும் ஆக்கியுள்ளார் நூலாசிரியர் பூ.அ. இரவீந்திரன். கற் போரைக் களிப்புறச் செய்யும் இனிய மரபுக் கவிதைகள்.

## கவிதை வெளியினிலே

ஆசிரியர் : பேரா. இரா. மோகன், வெளியீடு : வானதி பதிப்பகம், *23*, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை – *17*, பக். : *202*, விலை ரூ. *130/–*, போன் : *044–2434 2810*.















**எ**மக்குத் தொழில் கவிதை என்று பாடிய கவிஞனைப் போல் எமக்குத் தொழில் எழுத்து என்று பறைசாற்றிக் கொண்டு, பல மாதங்களில் ஒரு நூல் என்றில்லாமல், ஒரு மாதத்தில் பல நூல்கள் படைத்துத் தமிழிலக்கியப் பணி செய்து வருபவர் பேரா. இரா. மோகன். இந்நூலில் பதினாறு கவிஞர்களின் கவிதைப் படைப்புகளை ஆய்ந்து சுவைமிகு கட்டுரைகளாக வடித்துக் கொடுத்துள்ளார். ஜெயகாந்தன், குலோத்துங்கன், கவிதாசன், பிருந்தா சாரதி, வல்லம் தாஜூபால், ஏர்வாடியார், நெல்லை சு. முத்து, ப. தர்மராஜ், மா.உ. ஞானவடிவேல், அ.ச. முனியாண்டி, இரா. இரவி என்று கவிதைப் படைப்பாளிகளின் முத்தான கவிதை வரிகள் நூலாசிரியரின் நுண்மாண்நுழைபுல ஆய்வில் மேலும் செழுமை பெறுகின்றன; பன்முகப் பரிமாணம் கொண்டு இலங்குகின்றன. கவி ஆளுமைகளின் கவித்திறனைப் பறைசாற்றும் நூல்.

## எல்லோரும் நலம்வாழ
## ஏர்வாடியாரின் சிந்தனைகள்

*ஆசிரியர் : பேரா. இரா. மோகன், வெளியீடு : வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை – 17, பக். : 270, விலை ரூ. 170/–, போன் : 044 – 24342810.*

**இ**லக்கிய வட்டத்தில் ‘கவிதை உறவு’ என்றாலே ஏர்வாடியார்தான் நினைவுக்கு வருவார். காரணம், தமது எழுத்தால் மன நெகிழ்வையும், பொழிவால் மன மகிழ்வையும் உண்டாக்கக் கூடியவர் என்பதால். அவருடைய படைப்புகளில் வெளிப்படும் எழுத்துகள், வார்த்தைகள், வாக்கியங்கள் எவையும் சேதாரமாகக் கூடியவை அல்ல; மனத்தில் சேகரித்து வைக்கக் கூடியவை. அந்தளவுக்கு அவருடைய கருத்துச் சிந்தனைகள் நம்மை வசீகரிக்கும். அப்படிப்பட்ட அவருடைய படைப்புகளிலிருந்து நாளொன்றுக்கு ஒரு சிந்தனை வீதம் மொத்தம் 365 சிந்தனைகள் (ஜனவரி 1–லிருந்து டிசம்பர் 31 வரை) பேரா. இரா. மோகன் அவர்களால் இந்நூலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இதில் அனுபவக் கீற்றுகள், நம்பிக்கை நாற்றுகள், சிந்தனை மின்னல்கள், மணிமொழிகள், சான்றோர் அலைவரிசை, நகைச்சுவை நந்தவனம், உதிரிப்பூக்கள் எனப் பல தலைப்புகளில் உள்ள ஏர்வாடியாரின் சிந்தனைகள் – என்றும் நம் சிந்தனையை விட்டு அகலாதவை என்று சொல்லலாம்.

## வெற்றி நம் கையில்

*ஆசிரியர் : விமலா ரமணி, வெளியீடு: விஜயா பதிப்பகம், 20, ராஜ வீதி, கோவை – 641 001, பக். 72, விலை ரூ. 60/–, போன் : 0422 – 2382614.*

**‘வெ**ற்றி நம் கையில்’ எனும் இந்நூலில் முப்பத்தொரு கட்டுரைகள். கட்டுரைகள் ஒவ்வொன்றும் இரண்டு பக்கங்களுக்கு மிகாது. அளவான பக்கங்களில் அறிவார்ந்த சிந்தனைகள். கட்டுரையாகவும் அதேசமயம் கதையாகவும் அமைந்த மொழிநடை. ஒவ்வொரு கட்டுரையிலும் கூடுதல் சிறப்பாக அறிஞர்களின் சிந்தனைக் கூறுகள். அவை நம் உள்ளத்தை வளப்படுத்துவன மட்டுமல்லாமல், வலுப்படுத்தக் கூடியனவாகவும் உள்ளன. கறைபடிந்த உள்ளம் கனிவடையும்படியான சுவையான வாழ்வியல் செய்திகள் நம்மை வசீகரிக்கின்றன. அடிக்கடி படிக்கத் தூண்டும் படியான இக்கட்டுரைகளை வழங்கிய நாவலாசிரியை விமலா ரமணி அவர்களிடமிருந்து மேலும் இதுபோன்ற கட்டுரைகள் வெளிவருவது சமுதாய நலம் பயக்கும். நூலின் அட்டைப் படமே இந்நூலினைப் படிக்கத் தூண்டும்.

**– எம்.எஸ்.**

# வாசகர் கடிதம்

**2018** மே 'ஓம் சக்தி' அட்டையில் வருண பகவானை மழையோடு தொடர்புபடுத்திக் காட்டி யிருக்கும் மணியம்செல்வனின் தூரிகைக்கு என் அன்பான பாராட்டுகள்!

– மேலை. தமிழ்க்குமரன், மேலைச்சிவபுரி.

**சு**ரங்கம் பகுதியில் வெளியான அருட் செல்வரின் கருத்தான தென்னக நதிகள் இணைப்புத் திட்டம்தான் இப்போதைய தீர்வுக்குச் சரியானதாகும். அவர் சொல்படி சிந்தித்தால் நதிகள் இணைப்புத் திட்டம் சாத்தியமானதே!

– யூ. பைஸ் அஹமத், நாமக்கல்.

**க**விஞர் சிற்பியின் 'அமைதி என்ற புதுமை' எனும் பாரதிதாசனின் படைப்புப் பற்றிய கட்டுரை சிறப்பாக உள்ளது. இனிய பல புதிய செய்திகள்!

– எஸ். முத்தம்மாள், திருவிடைமருதூர்.

'**ஓ**ம் சக்தி' மே மாத இதழில் "மார்க்சியம் நாத்திகமா?" என்ற வினாவில் பொன்னீலன் அவர்களின் கருத்து ஆத்திகச் சார்புடையதாக இருந்தது பாராட்டுக்குரியது.

– தெ. முருகசாமி, புதுச்சேரி.

"**மா**நில சுயாட்சிக்கு ஒரே தீர்வு" என்ற கவிஞர் புவியரசு அவர்களின் சிந்தனைகள் மலர்ந் தால், மாநிலங்களுக்கிடையே உள்ள அனைத்துப் பிரச்சினைகளையும் மாநிலங்கள் பேசித் தீர்த்துக் கொள்ளலாம்.

– நன்னிலம் இளங்கோவன், மயிலாடுதுறை.

**டா**க்டர் க. பழனித்துரையின் 'இந்தக் கேள்விக்கு என்ன பதில்?" – சிறப்பான சிந்திக்க வைக்கும் வழிகாட்டல். சமுதாயச் சிந்தனையுடன் ஒருவர் செயல்பட அற்புதமான ஆலோசனை.

– என்.ஜே. கந்தமாறன், சென்னை.

**க**விஞர் சிற்பி எழுதி வரும் "பாரதிதாசன் கவிதைப் பெருவெளி"யில் பாரதிதாசனின் நற் சிந்தனைகளை எடுத்துக்காட்டியிருப்பது மனத் தைத் தொட்டது!

– ஜெயா ராஜாமணி, மதுரை.

'**ஓ**ம் சக்தி' மே மாத இதழில் வெளியாகி யிருந்த கரூர் ஜவுளித் தொழில் பற்றிய நேர் காணல் அற்புதம். ஜவுளி ஏற்றுமதியின் முந்தைய – இன்றைய நிலை பற்றித் தெளிவாக எடுத்துச் சொல்லப்பட்டிருந்தது.

– கமலக்கண்ணன், சின்னத் தாராபுரம்.

**பொ**றியாளர் ஏ.சி. காமராஜ் அவர்களின் "நவீன நீர்வழிச்சாலைத் திட்டம்" பற்றிய தகவல் கள் அருமை. ஆனால், பள்ளமான (கடல் மட்டம்) இடத்திலிருந்து மேடான இடத்திற்கு எப்படி நீர் வரும் என்பதைச் சற்று விளக்கமாக எழுதினால் நன்றாக இருக்கும்.

– க. பெரியசாமிக் கவுண்டர், வெள்ளகோவில்.

'**ஓ**ம் சக்தி' மே மாத இதழில் இராம. இளங்கோவன் எழுதிய "நிராகரிக்கப்பட்ட நேர்மை" சிறுகதை நெஞ்சைத் தொட்டது!

– கெ.சி. சேகர், பெங்களூரு.

**சோ**மசுந்தர வேலாயுதம் வரைந்துள்ள "கழிப் பாலையும் கண்ணபுரமும்" ஆய்வுக் கட்டுரை மிக இனிமை.

– பொன். முத்தையன், திருவிடைமருதூர்.

'**சி**ந்தனைக் கவிஞர்' கவிதாசன் "யார்வரப் போகிறீர்கள்" என்ற தமது கவிதையால் உழவ னின் நிலையை உணர வைத்துவிட்டார். பாராட்டுகள்!

– கு. சிதம்பர நடராசன், நாகர்கோவில்.

**த**மிழ்மணி படைத்திருந்த 'அன்னையின் நினைவில்...' கவிதை, உலகில் உள்ள அனைத்து அன்னையர்க்கும் சமர்ப்பணம்.

– உஷா முத்துராமன், திருநகர்.

**வி**மலாரமணியின் "அருணோதயம்" சிறு கதை நெஞ்சை நெகிழ வைத்த உணர்வுப்பூர்வ மான சிறுகதை!

– கே. பிரபாவதி, மேலகிருஷ்ணன்புதூர்.

சிறுகதை

# எதிர்வினை

"ஏய்...!" குளியல் அறையிலிருந்து கணேசனின் அதட்டல் குரல் நடு ஹாலைத் தாண்டி, சமைய லறையில் எதிரொலித்தது.

அடுப்பில் பாலைக் காய்ச்சிக் கொண்டிருந்த சரளா மின்னல் தாக்கியது போல் நிலை குலைந்து போனாள்.

அந்த "ஏய்...!" அவளைப் பொறுத்த வரை அச்சத்தைத் தரும் ஆபத்தான விளிச்சொல்!

"இதோ வந்துட்டேங்க..." பாலை அடுப்பில் இருந்து இறக்கிவைத்து விட்டுக் குளியலறை நோக்கிப் பதை பதைப்புடன் ஓடினாள்.

"தலை துவட்டற துண்டு எங்கே காணோம்? என்ன நினைப்பில் வேலை பார்க்கறே." மீண்டும் அதட்டல் குரல்; அடுத்த வீட்டைத் தொடும் அநாகரிகக் குரல்.

"ஏங்க... குளிக்கப் போறப்போ... துண்டு எடுத்துட்டுப் போகாமல்... இப்படிக் கத்தறீங்களே..." இது சரளா வின் உள் மனக்குரல்... குமுறல்...

**"போய்யா... போ... நீ என்னைக் கையைப் பிடிச்சு இழுத்துக் கெடுக்கப் பார்த்தேன்னு போலீஸ்கிட்டே நான் சொல்லுவேன். பொம்பளை ஆள் இல்லாத வீடு. போலீஸ் நான் சொல்றதைத்தான் நம்பும். எப்படி வசதி!?"**

"ஏதோ அவசரத்துல துண்டு போட மறந்துட் டேன்... இந்தாங்க...!" இது தான் வெளிவந்த குரல்.

துண்டைக் குளியல் அறைக் கதவின் மீது போட்டாள். அவசர அவசரமாக மீண்டும் அவள் அடுப்படியில் தஞ்சம் புகுந்தாள்.

குளித்து முடித்து வந்தவுடன் அவருக்குச் சூடாக டிபன் தயாராய் இருக்க வேண்டும்.

தோசை ஊற்று வதற்காக விரைந்தாள்.

"ஏய்...!"

என்ன சொல்லப் போகிறாரோ...?

"இது என்ன தோசை வேகவே யில்லை!"

"முதல்ல ஊத்தின தோசைங்க. கல்லு சரியாக் காயலே... அதை வைச் சிருங்க. முறுகலா அடுத்த தோசையை



கமலவேலன்

எடுத்துத் தரேன்.”

“பயம் இருக்கணும். ஏதோ கடனுக்குச் சுட்டுப் போட்டால் இப்படித்தான். வெந்தும் வேகாமலும் பொருள்கள் வீணாகும்...” தீயாய்ச் சுட்டான்.

சரளா வாய் திறவாது முறுகல் தோசையைக் கொண்டு வந்து தட்டில் வைத்தாள்.

அவன் தோசையை விண்டான்.

அவள் நடுக்கத்தோடு அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

“ஏய்...! முறுகலா இது? கருகல்...”

மூச்சு விடவில்லை அவள்.

காலையில் குளியலில் தொடங்கிய “ஏய்...! இரவு படுக்கைக்குச் செல்லும் வரை எத்தனை... எத்தனை ஏய்களோ...”

“ஏய்... ஏய்... ஏய்... ஏய்...!”

“ஐயோ... நான் பாவி... பாவி...” மனத்திற்குள் மருகினார் கணேசன், குற்ற உணர்வில் குறுகினார்.

**க**ணேசன் இப்பொழுதுதான் தன்னால் “ஏய்... ஏய்... என்று விரட்டியே கடந்த முப்பது ஆண்டுகளாக வாழ்நாளைக் கழித்ததை எண்ணிக் கலங்கித் தவிக்கிறார்.

காலம் கடந்த ஞானோதயம்!

கைபட்டால் குற்றம், கால்பட்டால் குற்றம் என்று எப்பொழுதும் மனைவியைத் திட்டிக் கொண்டே இருந்தவர்...

சரளா இறந்து மூன்று மாதங்கள் ஓடிவிட்டன.

மனைவி இல்லாத வாழ்க்கை அச்சாணி இல்லாத சகடம் போல் சங்கடத்தில் ஆழ்த்திவிட்டது அவரை.

ஒரு மகன்; ஒரு மகள்;

மகள் வெளிநாட்டில்.

மகன் பெங்களூரில்.

அம்மாவின் மறைவுக்குப் பிறகு இரண்டு பேர்களுமே அப்பாவை விட்டு விலகிப் போய்விட்டார்கள்.

கணேசனுக்கு வயது அறுபத்தி ஐந்து. தனியார் நிறுவனம் ஒன்றில் மேலாளராகப் பணியாற்றி வருகிறார். தனியார் நிறுவனம் என்பதால் இன்னும் அவரை வீட்டிற்கு அனுப்பவில்லை.

கணேசன் கல்லாய் – குத்துக் கல்லாய் மனைவியின் புகைப்படத்தையே வெறித்துப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தார்.

சரளா... நான் பாவி... பாவி...

**“ஐ**யா... ஐயா...”

கணேசன் சுய நினைவுக்கு வந்தார்.

“ஐயா... டிபன் வாங்கிக்கிட்டு வந்திருக்கிறேன் ஐயா...” வாயில் கதவைத் திறந்து கொண்டு வனிதா ‘கேரி பேக்குடன்’ உள்ளே வந்தாள்.

“உங்க அம்மாவுக்கு என்ன ஆச்சு...?”

“அம்மாவுக்குக் கடுமையான வயிற்று வலி ஐயா... அதனால்தான் அம்மா என்னை அனுப்பி வைச்சாங்க... நீங்க டிபனை சாப்பிடுங்கய்யா... அதுக்குள்ளே நான் துணி துவைச்சுப் போட்டுடறேன் ஐயா...” சொல்லிவிட்டு அவரது பதிலுக்குக் காத்திராமல் வனிதா பின்பக்கம் சென்றுவிட்டாள்.

வீட்டு வேலைக்கு ஆள் இல்லாமல் முடியாது. காரணம், சரளா தனியார் பள்ளி ஒன்றில் பட்டதாரி ஆசிரியையாகப் பணியாற்றி வந்தார். அதனால்தான் கணேசன் வேலைக்காரி அமர்த்தச் சம்மதம் கொடுத்திருந்தார்.

செல்லத்தாயி அம்மாள்தான் பத்து வருஷமாக அவர்கள் வீட்டில் வேலை பார்த்து வருகிறாள். அவளுக்கு ஒரே மகள். அவள்தான் வனிதா. செல்லத்தாயிக்குக் கணவர் இருக்கிறார். ஆனால் அவளுடன் இல்லை!

கஷ்ட ஜீவனம். பெரும் பாடுபட்டு மகள் வனிதாவைப் பன்னிரெண்டாம் வகுப்பு வரை படிக்க வைத்து விட்டாள். வனிதா வேலை தேடிக் கொண்டிருக்கிறாள். அம்மாவுக்கு முடியாத போதெல்லாம் கணேசன் வீட்டு வேலைகளைச் செய்ய வனிதா தான் வருவது வழக்கம்.

வனிதாவுக்கு மனைவியை ஓர் அடிமை போல் நடத்தும் கணேசன் மீது எப்பொழுதுமே வெறுப்பு உண்டு. சரளா அம்மா வாய்மூடி மௌன மாகவே வாழ்ந்து மறைந்துவிட்டார். அவர்கள் மீது அவளுக்கு இனம் புரியாத பரிவும் பாசமும் உண்டு.

இதையெல்லாம் ஒரு வேலைக் காரியின் மகள் வெளிப்படையாய்த் தெரியப்படுத்த முடியுமா என்ன?

துணிதுவைத்து, வீடு கூட்டி, பாத்திரங்கள் கழுவி வைத்துவிட்டுப் புறப்பட்டாள் வனிதா.

“ஐயா... வர்ரேங்க...”

“உம்...”

மத்தியானமும் இரவும் அவருக்குச் சாப்பாடு வெளியேதான்.

வீட்டைப் பூட்டிக்கொண்டு புறப்பட ஆயத்தமானார் கணேசன்.

செலவுக்குப் பணம் வேண்டுமே.

அப்பொழுதுதான் உள் அறையில் ‘கப்போர்டில்” வைத்திருந்த ரூபாய் நினைவுக்கு வந்தது. அந்த ரூபாயை எடுக்கச் சென்றார்.

அங்கே பணம் இல்லை!

இரண்டாயிரம் ரூபாய். ஒரே ஒரு தாள். காணவில்லை.

வேறு யாரும் அங்கே வர வில்லையே?

வனிதாதான் அறையைத் துப்புரவு பண்ண வந்து போனாள். அப்படியா னால் நிச்சயம் அவள்தான் பணத்தை எடுத்திருக்க வேண்டும்.

நாளைக் காலையில்தான் மீண்டும் வருவாள். வந்தவுடன் கண்டித்துக் கேட்டுவிட வேண்டும்.

சட்டைப் பையில் இரு நூறு ரூபாய்

## குணம்

தினம் தினம் சாலையில்
சினத்துடன் வாகனம்
ஓட்டும் இளைஞர்களிடம்
இருக்கிறதா கருணை “குணம்”

கடையில் வாங்கும் பொருளில்
தடையில்லாமல் கலப்படம்
செய்யும் மனிதனிடம்
இருக்கிறதா நல்ல “குணம்”

எதிலும் மதம் சார்ந்து
விளக்கம் தேடும் சமுதாயத்திடம்
இருக்கிறதா கனிவான “குணம்”

அயல்நாட்டினர் என்பதால்
சுயரூபம் தெரியாமல்
பயமின்றிச் சுட்டுத் தள்ளுபவனிடம்
இருக்கிறதா பரிதாப “குணம்”

லஞ்சம் வாங்கியதால்
தஞ்சம் அடைந்த சிறையில்
கொஞ்சம்கூட வெட்கமில்லாமல்
சிரிக்கும் கள்வனிடம்
இருக்கிறதா வெட்க “குணம்”

சமுதாயத்தின் அறியாமையை
கழுகு போல வட்டமிட்டு
உண்மையைச் சொல்வது போல
நடிக்கும் மாந்திரீகரிடம்
இருக்கிறதா உண்மைக் “குணம்”

இப்படிப் பல குணம்
கொண்ட மனிதர்களிடம்
சமுதாயம் நீதி, நேர்மை,
உண்மை, நியாயம்
இவற்றை எதிர்பார்ப்பது
யார் தவறு???



உஷா முத்துராமன்

இருந்தது. இப்போதைக்கு அது போதும்...

கதவுகளைப் பூட்டிவிட்டுக் கிளம்பினார்.

**ம**றுநாள் காலை –

வனிதா வேலைக்கு வந்தாள். கையில் கடையில் கணேசனுக்காக வாங்கிய டிபன் பொட்டலம்.

"வனிதா... மேஜை மேலே ஒரு ரெண்டாயிரம் ரூபாய் தாள் வைத்திருந்தேன். அதைக் காணோம். ரூமுக்குள்ளே உன்னைத் தவிர வேறு யாரும் வரலே...." உள்ளே வந்தவளைத் தடுத்து நிறுத்திக் கேட்டார்.

"மேஜைப் பக்கமே நான் போகலே ஐயா... எனக்குப் பணம் இருந்ததும் தெரியாது." வனிதா வெகு இயல்பாய் பதில் சொன்னாள்.

"நீ பொய் சொல்றே. பணத்தை நீதான் எடுத்திருக்கணும்..." கணேசன் கண்களை உருட்டி மிரட்டினார்.

"அப்போ... என்னைத் திருடின்னு சொல்றீங்களா?"

"திருடிதான். சந்தேகமேயில்லை. பணத்தை நீதான் எடுத்திருக்கணும்" அவர் உறுதிபடக் கூறினார்.

"ஆமாம். அந்த ரூபாயை நான் தான் எடுத்தேன். இப்ப என்ன செய்யணும்ங்கறீங்க...?" அலட்சியமாய்ப் பேசினாள் வனிதா.

"பணத்தைத் திருடினதோட இல்லாமல் திமிரா வேற பேசறையா?" அவர் கண்கள் கோவைப் பழமாய்ச் சிவந்தன.

வனிதா அவரை ஊடுருவிப் பார்த்தாள்.

"மரியாதையாய்ப் பணத்தைக் கொண்டு வந்து கொடுத்துடு... இல்லேன்ன... நான் போலீஸுக்குப் போவேன்" கையை உயர்த்திக் கத்தினார்.

"போய்யா... போ... நீ என்னைக் கையைப் பிடிச்சு இழுத்துக் கெடுக்கப் பார்த்தேன்னு போலீஸ்கிட்டே நான் சொல்லுவேன். பொம்பளை ஆள் இல்லாத வீடு. போலீஸ் நான் சொல்றதைத்தான் நம்பும். எப்படி வசதி!?" என்று சொல்லிவிட்டு வனிதா விருட்டென்று வெளியே சென்றுவிட்டாள்.

கணேசன் பிரமை பிடித்தவர் போல் நாற்காலியில் சாய்ந்துவிட்டார்.

**அ**ம்மாவிடம் நடந்ததையெல்லாம் ஒன்றுவிடாமல் சொன்னாள் வனிதா.

"வனிதா பணத்தைத் திருடினதே தப்பு, அதையும் மீறி அவர்மேல் அபாண்டமாப் பழி வேற போடணும்னு நினைக்கிறே? ஏம்மா... இப்படி விபரீதமா நடந்துக்கறே...?" வனிதாவின் அம்மா செல்லத்தாயி புலம்பித் தவித்தாள்.

"அம்மா... அப்பப்போ... உன்கூட நானும் சரளா அம்மா வீட்டிற்கு வந்திருக்கிறேன். நான் எப்ப வந்தாலும் அவங்க கணவர் அவரைக் காரணம் இல்லாமல் திட்டிக்கிட்டேயிருப்பார்; ஆயிரத்தெட்டு "ஏய்..." போடுவாரு... சரளா அம்மா எந்த நிலையிலும் அவரை எதிர்த்துப் பேசியதே கிடையாது! இந்தக் காட்சி என் மனசுல ரொம்பவே பாதிப்பை ஏற்படுத்திடுச்சு... எப்படியாவது அந்த ஆளுக்குப் பாடம் புகட்டணும்னு நினைச்சேன்... அதுதான் அம்மா அப்படி நடந்துகிட்டேன்!"

"எனக்கு ஒரே குழப்பமாயிருக்குது..."

"குழப்பமே வேண்டாம்மா... சரளா அம்மா ஆன்மா சாந்தியடைய



ணும்னா… இந்த ஆளு என்னைப் பார்க்கறப்போ… எல்லாம் பயந்து நடுங்கணும்” சொல்லிவிட்டு வாய் விட்டுச் சிரித்தாள் வனிதா.

“அப்போ அந்தப் பணம்…?”

“நாளைக்கே மறுபடியும் எடுத்த இடத்துலேயே வைச்சிடுவேன்…”

•

*83-ம் பக்கத் தொடர்ச்சி*

வந்தார். அவருடன் குழுவினரும் வந்தனர். அப்போது திருப்பூர் பி. வேலுசாமி அவர்கள், தொழிலதிபர் சேஷாயி, இந்த நூலை அச்சிடுவதற்குத் தேவையான நல்ல காகிதத்தை இலவசமாகத் தரச் சம்மதம் தெரிவித்திருக்கிற செய்தியையும் கூறி, இதனைத் தாங்கள்தான் அச்சிட்டுத் தர வேண்டும் என்று அருட்செல்வரிடம் கோரிக்கை வைத்தார்.

அப்போது அருட்செல்வர், தியாகி கே.பி. திருவேங்கடம் தயாரித்துள்ள இந்த வரலாறு போதாது. கொங்கு நாட்டில் சுதந்திரத்திற்காகத் தியாகம் செய்தவர்களின் புகைப்படங்களையெல்லாம் திரட்ட வேண்டும். எல்லா ஊர்களிலும் அந்தத் தியாகிகள் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களுடைய குடும்ப வாழ்க்கையைப் பற்றியும் எழுத வேண்டும். இதற்காகத் தனியாக ஒரு வாகனம் தருகிறேன். அதை உபயோகித்து எல்லா இடங்களுக்கும் சென்று இந்தத் தகவல்களை ஒரு வருடக் காலத்தில் திரட்டுங்கள். விட்டுப்போன செய்திகளையும் இதில் இணைத்துக் கொள்ளலாம் என்றார்.




புதிய பிரதி

தியாகிகளை விசாரித்து விபரங்களைச் சேகரித்தார்கள். புகைப்படங்களைத் திரட்டினார்கள். அப்போதெல்லாம் வண்ணப்படங்கள் இல்லை. கருப்பு – வெள்ளைப் படம்தான்.

ஒரு வருடத்திற்குப் பிறகு இந்நூல் வெளியாகியது. இதனை கோவை மணி மேல்நிலைப் பள்ளியிலுள்ள மண்டபத்தில் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. அவர்கள் தலைமையில் அருட்செல்வர் வெளியிட்டார். இந்த நூல் வெளியாகி சுமார் 30 ஆண்டுகளாகிவிட்டன.




*‘கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம்’ நூலின் மறுபதிப்பை வெளியிட்ட திரு. இல. கணேசன், எம்.பி., முதல் பிரதியைப் பெற்றுக் கொண்ட கல்வியாளர், தொழிலதிபர் திரு. கே.பி. இராமசாமி, விழாவிற்குத் தலைமை தாங்கிய கோவை இந்திய தொழில் வர்த்தகசபைத் தலைவர் திருமதி வனிதா மோகன், நூலினைப் பதிப்பித்த ‘கலைமாமணி’ கவிஞர் மரபின் மைந்தன் முத்தையா, நூலாக்கம் செய்தவர்களில் ஒருவரான ‘ஓம் சக்தி’ ஆசிரியர் கவிஞர் பெ. சிதம்பரநாதன்.*




*நூலாக்கத்திற்கு உதவி செய்த கவிஞர் பெ. சிதம்பரநாதன் அவர்களுக்குச் சிறப்பு செய்யப்பட்ட காட்சி.*

தற்செயலாக இந்த நூலிலுள்ள புகைப்படங்களையும், தியாகிகளின் புகைப்படங்களையும், கோவைக்கு அவர்கள் செய்த தியாகங்களையும் கவிஞர் மரபின் மைந்தன் அவர்கள், கோவையைப் பற்றிய ஒரு பாடலுக்காகப் படித்துப் பார்க்க நேர்ந்தது.

*"சுதந்திரச் சுடரின் தீபங்கள் – எங்கள்*

*விடுதலை வீரரின் தியாகங்கள்.*

*வரலாறாக வாழ்பவர்க் கெல்லாம்*

*வீர வணக்கங்கள்... வீர வணக்கங்கள்..."*

என்ற கவிஞர் மரபின் மைந்தன் உருவாக்கிய இந்தப் பாடலின் பின்புலமாக இந்தப் புகைப் படங்கள் இடம் பெற்றன. இப்பாடலுக்கு 'லியோ' இசையமைத்துப் பாடியிருக்கிறார். இணைக்குரல் பிரியங்கா வரதன். அந்தக் குறுந்தகடுப் பாடல் மாணவர்கள் கேட்க வேண்டிய பாடலாகும். அருமையான இசை. அருமையான பாடல். அருமையான படப்பிடிப்பு.

இந்த நூலைப் பற்றிய இப்பின்னணியை அறிந்த கவிஞர் மரபின் மைந்தன் முத்தையா அவர்கள், திருமதி வனிதா மோகன் அவர்களிடத்தில் எடுத்துச் சொல்லியிருக்கிறார். இக்குறுந்தகட்டையும் அவர் கேட்டு ரசித்தார். அதனால், இந்த நூலை உருவாக்குவதற்குப் பெரும் நிதி உதவியைச் செய்து கவிஞர் மரபின் மைந்தன் அவர்களை ஊக்குவித்தார். அவருடைய 'நமது நம்பிக்கை' பத்திரிகையின் பெருமிதம் மிக்க படைப்பாக 'கொங்கு நாட்டில் இந்திய சுதந்திரப் போராட்டம்' என்ற இந்நூல் மறு பதிப்பாக அன்றைக்கு வெளியிடப்பட்டது.

நூலை வெளியிட்ட இலக்கிய அரசியலாளர் திரு. இல. கணேசன் அவர்கள், அந்நூலில் உள்ள சிறப்புக்களையெல்லாம் எடுத்துச்சொல்லி, சில சொற்கள் தற்போதைய அர்த்தத்திற்கு விரோதமாக உள்ளன என்றும், உதாரணமாக, 'தீவிரவாதிகள்' (Radicals) என்ற வார்த்தை சுதந்திரப் போராட்டத்தின்போது கையாளப்பட்டது. அவர்கள் இன்றைய தீவிரவாதிகள் அல்ல. அவர்களை அடுத்த பதிப்பில் 'புரட்சியாளர்கள்' (Revolutionist) என்று குறிப்பிடும்படியும் ஆலோசனை கூறினார்.

கவிஞர் மரபின் மைந்தன் முத்தையா அவர்கள் தனது வரவேற்புரையிலும், வாழ்த்துரையிலும் இந்த நூலைப் பதிப்பித்தது குறித்துப் பெருமிதமடைந்தார். 50 வயதிற்குள் 60 நூல்களை எழுதிய சிறப்புக்குரியவர் அவர். அதனால்தான் இந்த நூலைப் பதிப்பிப்பதில் பெருமிதமடைந்தார்.

தலைமை தாங்கிய திருமதி வனிதா மோகன் அவர்கள் பேசுகையில், இந்த நூல் இளைய தலைமுறைக்கு இன்றியமையாத நூல் என்றும், அதனாலேயே இதனைப் பதிப்பிப்பதற்குத் தனது பங்களிப்பை மகிழ்ச்சியோடு வழங்குவதாகவும் குறிப்பிட்டார்.

முதல் பிரதியைப் பெற்றுக் கொண்ட தொழிலதிபர் திரு. கே.பி. ராமசாமி அவர்கள், தனது இன்முகத்தோடு இந்த விழா முழுவதையும் அனுபவித்தார்.

**– ந.நி.**


காமாட்சிபுரி ஆதீனம் ஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகளின் அகவை 50 விழாவில் பக்தர்கள் அருளாசி பெறுகிற காட்சி.

கோட்டை' என்ற மகோன்னதமான ஆலயம், அருட்செல்வருக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்திய ஆலயமாகும். அருட்செல்வர் சுவாமிகளைப் பார்க்க விரும்பினால், செய்தி கிடைத்த அடுத்த விநாடியே அருட்செல்வர் முன்பு ஆதீனம் பிரசன்னமாவார். காரணம், காமாட்சிபுரி ஆதீனத்திற்கு அருட்செல்வரைத் தாத்தாவாகக் கொள்ளலாம். அத்தகைய

# கோவை காமாட்சிபுரி ஆதீனத்தின் 50-ஆவது அகவை விழா!

கோவை காமாட்சிபுரி ஆதீனம் ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி சித்தர் பீடம் மகா சமஸ்தான ஞானகுரு சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகளின் 50-வது அகவைத் தொடக்க விழா, சென்ற 19.4.2018 அன்று, கோவை காமாட்சிபுரி ஆதீனத்தில் விமரிசையாகத் தொடங்கியது.

ஆச்சரியம், ஆனால் உண்மை! ஆச்சரியம் என்பது காமாட்சிபுரி ஆதீன மூர்த்திக்கு அகவை 49 ஆண்டுகள்தான். அவருடைய கீர்த்திக்கு ஏற்பக் கணக்கிட்டால் 70 ஆண்டுகளுக்குக் குறைவாக மதிப்பிட முடியாது. இதுதான் ஆச்சரியம். இதுதான் உண்மை!

சிவலிங்கேஸ்வர சுவாமிகள் அருட்செல்வரின் பக்திக்கும் பாசத்திற்கும் உரியவர். அருட்செல்வரை அழைத்துச்சென்று 51 சக்தி பீடத்தை நிறுவுவதற்கு முன்பே, காமாட்சிபுரி ஆதீனத்தில் அவருக்குச் சகல மரியாதைகளோடு சிறப்புப் பூசை நடத்தினார்.

அதேபோல, பல்லடத்திற்கு அருகில் சுவாமிகள் அமைத்துள்ள 'நவகிரகக்

சான்றோருக்குச் சுவாமிகள் மரியாதை செலுத்துவதைக் கடமையாகவே கொண்டுள்ளார்.

சுவாமிகளின் 50-ஆவது அகவைத் தொடக்கத்தை யாருக்குமே சுவாமிகள் சொல்லவில்லை. காமாட்சிபுரி ஆதீன அடியார் பெருமக்களும், குருகுல மாணவர்களும் முன்வந்து சுவாமிகளின் 50-ஆவது அகவையைக் கொண்டாடத் திட்டமிட்டார்கள். அதன்படி 19.4.2018 அன்று சுவாமிகளைச் சப்பரத்தில் அழைத்து வந்து வரவேற்பளித்துப் பூசை, புனஸ்காரங்களைச் செய்தார்கள்.

தமிழ்நாட்டின் பல்வேறு நகரங்களிலிருந்தும் பக்தர்கள் திரளாக வந்திருந்


கோவை ஆர்.வி.எஸ். கல்வி நிறுவனங்களின் நிறுவனர் தொழிலதிபர் டாக்டர் கே.வி. குப்புசாமி ஐயா அவர்கள், சுவாமிகளைத் தரிசித்த காட்சி.

தார்கள். அவர்களாகவே இந்த விழாவைத் தெரிந்து வந்ததுதான் ஆச்சரியம்.

விழா மேடையில் சுவாமிகளுக்கு 108 கலச ஸ்தாபன வழிபாடும் அமுத நீராட்டும் நடந்தன. தொடர்ந்து, அருட்கொலு வழிபாடு, சுவாமிகள் புறப்பாடு, தீபாராதனை, மகேஸ்வர பூசை என வரிசையாக நடந்தன.


'ஓம் சக்தி' ஆசிரியர் கவிஞர் பெ. சிதம்பரநாதன் அவர்களுக்கு, சுவாமிகள் அருளாசி வழங்குகிற காட்சி.

இந்த விழாவில் 'ஓம் சக்தி' ஆசிரியர் திரு. பெ. சிதம்பரநாதன் அவர்களை சுவாமிகளே விரும்பி அழைப்பதாகத் தகவல் தரப்பட்டது. அதன்படி, ஆசிரியரும் காமாட்சிபுரி ஆதீனத்தை நேரில் தரிசித்து, அவருடைய ஆசி பெறச் சென்றிருந்தார்.

பல பிரமுகர்கள் அங்கு வந்திருந்தார்கள். குறிப்பாக, விஜயலட்சுமி டெக்ஸ்டைல்ஸ் அதிபர் திரு. சின்னையன், ஆர்.வி.எஸ். கல்வி நிறுவனங்களின் நிறுவனர் தொழிலதிபர் டாக்டர் கே.வி. குப்புசாமி, இந்து மக்கள் கட்சித் தலைவர் திரு. அர்ஜுன் சம்பத், இன்னும் பல பிரமுகர்கள் விழாவில் கலந்து கொண்டனர். சுவாமிகளின் ஆசிகளைப் பெற நெரிசல் அதிகமாகியது.


சுவாமிகளை பக்தர்கள் அமுத நீராட்டுகிற காட்சி.


சுவாமிகளுக்கு உதிரிப் பூக்களால் அர்ச்சனை செய்த காட்சி.

சுவாமிகளின் உத்தரவுப்படி 'ஓம் சக்தி' ஆசிரியர் பேசும்போது, "சுவாமிகளுக்கு அகவை ஐம்பதுதான் என்பது ஆச்சரியமாக இருக்கிறது. அவருடைய செயல்பாடுகள் தமிழகத்தில் மட்டுமல்ல, சிங்கப்பூர், மலேசியா, கம்போடியா முதலிய பிற நாடுகளிலும் முத்திரை பதித்துள்ளன. இந்தக் குறைவான வயதிற்குள் பல கோடி ரூபாய் செலவில் நவக்கிரகக் கோட்டையை அவர்

உருவாக்கியது ஆன்மீக உலகத்தில் ஆச்சரியத்தை உண்டாக்கியதாகும்.

ஏனெனில், பல பிரபலமான ஆதீனங்கள் தமிழ்நாட்டில் உள்ளன. அவையெல்லாம் அந்த ஆதீனங்களுக்குரிய சொத்து வசதிகளைக் கொண்டுதான் செயல்பட்டு வருகின்றன. அப்படிப்பட்ட ஆதீனங்கள்கூட சிவலிங்கேஸ்வர சுவாமிகள் உருவாக்கிய நவ கிரகக் கோட்டையைப் போல, ஒரு கோவிலைப் புதிதாக உருவாக்கியிருக்கிறார்களா? என்பதை விசாரிக்க வேண்டியவர்களாக உள்ளோம்.

இவை மட்டுமல்ல, காமாட்சிபுரி ஆதீனம் ஏழைக் குழந்தைகளுக்குக் கல்வி வசதி செய்து தந்துள்ளது. மாணவர்களுக்குத் தோத்திர சாஸ்திரங்கள் கற்றுத் தரப்படுகின்றன. அம்மாணவர்கள் சிறப்பாகப் பயின்று தேர்ச்சி பெறுகிறார்கள். இந்த ஆதீனத்தினுடைய பூர்வீக வரலாறு இதைவிட ஆச்சரியமானது.

நொய்யல் நதியில் சுவாமிகளால் கண்டெடுக்கப்பட்ட விக்கிரகம்தான் ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி விக்கிரகம். அதை வைத்துத்தான் சுவாமிகள் பூசை செய்து பின்னர் 51 சக்தி பீடங்களையும் இணைத்துப் பிரதானக் கோயிலை உருவாக்கியுள்ளார். அதனால்தான் காமாட்சிபுரி ஆதீனம் என்ற சிறப்புப் பெற்றது இந்த வளாகம்.

சுவாமிகளின் பொது வாழ்க்கையில் உலக சமாதானத்துக்காகக் காமாட்சிபுரி ஆதீனம் கொண்டாடும் விழா பிரசித்தி பெற்றது. இந்த விழாவில் கலந்து கொள்வதற்காகவே இந்தியாவின் விண்வெளி ஆராய்ச்சி நிறுவனமான 'இஸ்ரோ' முன்னாள் தலைவர் மாதவன் நாயர் அவர்கள் சுவாமிகளின் சமாதான விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தது குறிப்பிடத்தக்கது.




சுவாமிகளை பக்தர்கள் சப்பரத்தில் எழுந்தருளச் செய்து அழைத்து வருகிற காட்சி.

சுவாமிகளுக்கு இப்போதுதான் ஐம்பதாவது அகவை தொடங்கியிருக்கிறது. ராமானுஜரைப்போல இவரது ஆயுள் அமையும் என்பதில் சந்தேகமில்லை. இந்த நீண்ட நெடிய காலத்தில் நிச்சயமாக சைவ சமயத்தை மேம்படுத்துகிற மகத்தான பணியில் சுவாமிகளின் பங்களிப்பு மிகச் சிறப்பானதாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை" என்று 'ஓம் சக்தி' ஆசிரியர் குறிப்பிட்டார்.

அதன் பிறகு பக்தர்கள் சிவலிங்கேஸ்வர சுவாமிகளுக்குப் பூமாலை சூட்டுவதும், பொன்னாடை அணிவிப்பதும், பாதபூசை செய்வதும், உதிரிப் பூக்களை மழையாகப் பொழிவதுமாக நிகழ்ச்சிகள் நீடித்தன. பக்தர்கள் அனைவரும் காமாட்சி புரி ஆதீனத்தின் அருளாசிக்குப் பாத்திரப்பட்டவர்களாக மனநிறைவோடு சுவாமிகளை வணங்கி மகிழ்ந்தார்கள்.

தகவல் உதவி :

**க.பழனிசாமி B.M.S. மற்றும் சக்தி விநாயகம்.**




காமாட்சிபுரி ஆதீனத்திலுள்ள ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி தேவியின் சலவைக்கல் ஆலயம்



ஆகிய இசை விற்பன்னர்கள் இவருடைய குருநாதர்களாவர்.

சங்கீத கலாநிதி ஆர். செம்மங்குடி சீனிவாச ஐயர் அவர்களுடைய தலைமையில் இந்துஸ்தானி சாஸ்திரிய சங்கீதத்தை 34 ஆண்டுகளுக்கு முன்பு 1984–இல் நிகழ்த்திக்

# தமிழ்நாடு இசை – நுண்கலைப் பல்கலைக்கழகத்திற்கு புதிய துணைவேந்தர்

தமிழக முதல்வர் எடப்பாடி கே.பழனிசாமி அவர்கள் டாக்டர் பிரமிளா குருமூர்த்திக்குத் துணைவேந்தர் பணிநியமன ஆணை வழங்குகிறார். அருகில் தமிழ்ப் பண்பாட்டு துறை அமைச்சர் திரு. கே. பாண்டியராஜன்.

டாக்டர் பிரமிளா குருமூர்த்தி அவர்கள், அருட்செல்வரின் சென்னை இராமலிங்கர் பணி மன்றத்தில் உருவானவர். அவருடைய வழிகாட்டுதலில் இசைத்துறையிலும், இந்தியத் தத்துவத் துறையிலும் முதுகலைப் பட்டத் தேர்வில் சிறப்பான வெற்றி பெற்றவர்.

கதை சொல்லும் வடிவங்களான கதாகாலட்சேபம் என்பதைப் பற்றி ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றவர். எம்பார் விஜயராகவாச்சாரியா, ஸ்ரீமதி பானிபாய் முதலிய வல்லுநர்களின் கதை வடிவங்களைப் பற்றிய இவருடைய ஆராய்ச்சி சிறப்பானது. மராட்டியம், தமிழ்நாடு, கர்நாடகா, ஆந்திரா, கேரளா ஆகிய மாநிலங்களில் உள்ள கதா வடிவங்களையும் ஆய்வு செய்தவர்.

முசிறி சுப்பிரமணிய ஐயர், டி.கே. கோவிந்தராவ், பி. ராஜம் ஐயர், முடிகொண்டான் வெங்கடராம ஐயர், டி.எம். தியாகராஜன், டி. முக்தா

காட்டிப் பாராட்டைப் பெற்றவர்.

தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம், மராத்தி, ஹிந்தி, குஜராத்தி ஆகிய மொழிகளிலுள்ள பக்தி இசையைச் சிறப்பாக ஆய்வு செய்தவர். சென்னைப் பல்கலைக்கழகத்தின் இசைத்துறைத் தலைவராகவும், நுண்கலைத்துறைத் தலைவராகவும், சென்னைப் பல்கலைக்கழகத்தின் செனட் உறுப்பினராகவும், அகாடமிக் கவுன்சில் உறுப்பினராகவும் செயல்பட்டவர்.

2015–இல் பணி ஓய்வு பெற்றபிறகு தமிழ்நாடு இசை மற்றும் நுண்கலைப் பல்கலைக்கழகத்தின் வேந்தர் மாண்புமிகு தமிழக முதல்வர் 31.1.2018 –ஆம் தேதி துணைவேந்தராக இவரை நியமித்துப் பெருமைப்படுத்தியுள்ளார்.

அருட்செல்வரின் வழிகாட்டுதலில் இசைத்துறையில் வளர்ந்தவர், இசைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது அருட்செல்வரின் தொண்டர்களுக்கு மகிழ்ச்சி தரத்தக்க செய்தியாகும்.

– ந.நி.

# LED, கலர் டி.வி, ரெஃப்ரிஜிரேட்டர், ஏர்கன்டிஷ்னர், வாஷிங் மெஷின், மற்றும் அனைத்து தரமான வீட்டு உபயோக பொருட்களை குறைந்த விலையில் வாங்க சிறந்த இடம்.

Easy Finance Options
BAJAJ Finance

Exchange offer

Gift Coupons Available

*Free gift with every purchase

*Free delivery with in city Limits

Open on Sundays






*For purchase above RS.8000/- condition apply

| | | | | | |
|---|---|---|---|---|---|
| LG | SAMSUNG | SONY | PHILIPS | VIDEOCON | ONIDA |
| Godrej | Whirlpool | SIEMENS | IFB | | Prestige |
| ELGI ULTRA | Preethi | V-GUARD | BOSCH | micromax nothing like anything | HAVELLS |
| VOLTAS LIMITED | Butterfly® | TATA Sky | Crompton Greaves | USHA | |
| BPL EMERGENCY LIGHT | Preethi INDUCTION COOK TOP | EUREKA FORBES Your friend for life | | CASCADE | VENUS WATER HEATER |

D by sr printes 9843110277



## நா. மகாலிங்கம் & கம்பெனி

68, Dr, Nanjappa Road, Near Central Bus Stand
Coimbatore - 641 018.
Ph: 2239834 / 2239841 / 2239803 / 2239811

**Registered with Registrar of Newspapers for India No. 42582/83**

Date of Publication
28-5-2018

**Regd.No.CB/016/2018-20**

**OM SAKTHI - JUNE - 2018**